# மள்ளர் எனும்
# தேவேந்திர குல வேளாளர்
# குலப்பிரிவுகளும் கூட்ட முறைகளும்


**வித்யரத்னம்**

**தமிழன்னால் புலவர் கி.ஆ. குப்புராசு சரோஜினி**

119, இலக்குமி இல்லம், பெரியார் நகர், புலியகுளம்

கோயமுத்தூர் - 641 045


*தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றத்தில்*
*தெற்குப் பரமன்குறிச்சி தங்கவேலு தேவேந்திரர் நினைவு*
*அறக்கட்டளை சார்பாக அக்டோபர் 11, 1998 அன்று*
*நிகழ்த்திய சொற்பொழிவின் விரிவாக்கம்*


வெளியீடு

**தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்**

10/2, நால்வர் நகர்

பாரதியார் பல்கலைக்கழகம் அஞ்சல்

கோயமுத்தூர் - 641 046.

## நூல் விபரம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் குலப் பிரிவுகளும் கூட்ட முறைகளும் |
| ஆசிரியர் | : | வித்யாரத்தினம் தமிழண்ணல் புலவர் கி.ஆ. குப்புராசு சரோஜினி |
| வெளியீடு | : | தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்<br>10/2, நால்வர் நகர்<br>பாரதியார் பல்கலைக்கழகம் (அஞ்சல்)<br>கோயமுத்தூர் - 641 046. |
| வெளியீடு எண் | : | 7 |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம் |
| பொருள் | : | சமூகப் பண்பாட்டு ஆய்வு |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| வெளியீட்டுத் தேதி | : | டிசம்பர் 2001 |
| நூல் அளவு | : | 1/8 டெம்மி |
| அச்சு அளவு | : | 12 புள்ளிகள் |
| பக்கங்கள் | : | 177 |
| விலை | : | ரூ.60/- |
| விற்பனை உரிமை | : | ஆ.கு. இசைஞானியார் &<br>ஆ.கு. ஆறுமுகச் செவ்வேள்<br>119, இலக்குமி இல்லம், பெரியார் நகர்<br>புலியகுளம், கோவை - 641 045 |
| கணினி அச்சு | : | மாமன்னர் அச்சகம்<br>10/2 A, நால்வர் நகர்,<br>பாரதியார் பல்கலைக்கழகம் அஞ்சல்,<br>கோயமுத்தூர் - 641 046. |

# படையல்



தெய்வத்திரு
இலக்குமி ஆறுமுகம்
மள்ளத்தியார்





தெய்வத்திரு
சரோஜினி குப்புராசு
மள்ளத்தியார்

ஈன்றெடுத்து வளர்த்தெம்மை ஆளாக்கி அறிவூட்டி
எல்லோரும் போற்றும் வண்ணம்
இப்புலிய குளநகரில் ஏற்றமுடன் வாழவழி
எடுப்பாகச் செய்த அன்னை,
ஆன்போன்ற மாதரசி சரோசினியின் பதமலர்க்கும்,
ஆறுமுகத் தாத்தா மெச்ச
அழகோங்க இல்லறத்தை நல்லறமாய் வாழ்ந்தோய்ந்த
இலக்குமியின் மலர டிக்கும்,
ஆன்றதமிழ்ப் புலவரெலாம் அகங்குளிரப் பாராட்டும்
எந்தையார் குப்பு ராசு
யாத்தளித்த "மள்ளரினக் குலப்பிரிவு கூட்டமுறை"
என்னுமொரு ஆய்வு நூலை
தேன்பிலிற்றும் மலராகச் சிந்தையெலாம் களிகூர
செம்மாந்து படைக்கின் றோம்யாம்
திருப்பதியின் திருமாலும் செந்தில்வாழ் முருகோனும்
திருப்பெருக என்றும் காப்பார்.

ஆ.கு. அறுமுகச்செவ்வேள்
ஆ.கு. இசைஞானியார்

# பதிப்புரை

உலகின் தொன்மை வாய்ந்த நாகரிகங்களில் ஒன்று நெல் நாகரிகம் (Rice Culture). இந்த நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்தவர்கள் வேந்தன் மரபினரான மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர்கள். வேந்தன் என்பது தமிழகத்தின் உள்ள நால்வகை நிலப்பிரிவுகளான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவற்றில் மனித நாகரிகத்தின் தோற்றுவாய் ஆன மருதநிலத்தின் தலைமகன் (இறைவன்) ஆகும். மக்கள் நாகரிக வளர்ச்சியின் அடிப்படை நிறுவனம் குடும்பம், இந்த நிறுவனத்தை முதலில் உருவாக்கிய மள்ளர் குலத்தினரின் பிரிவுகளில் ஒன்று இன்றும் குடும்பன், குடும்பர், குடும்பனார், குடும்பமார் என்று சிறப்பாகவும் பெருமையாகவும் நன்றியுடனும் சொல்லப்படுகிறது.

இத்தனை சிறப்பு வாய்ந்த இந்த மூத்த தமிழ் இனம் தமிழ் இலக்கியங்களில் மன்னர்களாக, வேளிர்களாக, வேந்தர்களாக, படைத் தளபதிகளாக, போர் வீரர்களாக, உழவர்களாக, வேளாளர்களாக, மருத நிலத் தலைமக்களாக, மகிழ்நன்களாக, ஊரன்களாக, ஊராளிகளாக, கிழவர்களாக, நீதிபதிகளாக, மத்தியஸ்தர்களாக, தண்டனை கொடுப்பவர்களாக, நிராணிக்கர்களாக, மடை வாரியர்களாக, புலவர்களாக, அறிஞர்களாக, ஆசான்களாக, கடவுளர்களாகப் போற்றப்பட்டு வந்திருக்கின்றது. கல்வெட்டுகளும் செப்பேடுகளும், வழக்காறுகளும் இவற்றை உறுதி செய்கின்றன.

சொல்லேருழவர், வில்லேருழவர், வாளேருழவர், பொன்னேர் உழவர் எனப்படும் நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்த இந்த தொன்மையான மூத்த தமிழ் இனத்தில் பன்னீராயிரம் குலங்களும் கோத்திரங்களும் உள்ளதாக செப்பேடுகளும் வழக்காறுகளும் கூறுவது ஒன்றும் வியப்பில்லை. "நெல்லுவகை எண்ணினாலும் பள்ளு வகை எண்ண முடியாது" என்பது போன்ற வழக்காறுகள் இம் மள்ளர் மக்களிடையே உள்ள பிரிவுகளின் எண்ணிக்கை அதிகத்தைக் கூறுகின்றன.

தமிழ் நாட்டுக் கல்வியாளர்கள், சமூகவியலாளர்கள் இம்மக்கள் பற்றிய இந்த வகை ஆய்வுகளை இதுவரை மேற்கொள்ளவில்லை. இவ்வகை ஆய்வுகள் தமிழர் வரலாற்றையும் தமிழர் பண்பாட்டு வளர்ச்சி வரலாற்றையும், நெல் நாகரிக வளர்ச்சி வரலாற்றையும் வெளிக் கொண்டு வரும். இதன் முதல் முயற்சியாக தமிழண்ணல் புலவர் கி.ஆ. குப்புராசு சரோசினி அவர்கள் தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றத்தில் நிகழ்த்திய திருநெல்வேலி தெற்குப் பரமன் குறிச்சி தங்கவேலு தேவேந்திரர் அறக்கட்டளைச் சொற்பொழிவை நூலாக ஆக்கித் தந்துள்ளார்கள். அவர்களுக்கும் இந்த அறக்கட்டளையை நிறுவிய இந்திய ஸ்டேட் வங்கியின் மேலாளர் திரு. த. செயகுமார் அவர்களுக்கும் தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றத்தின் பாராட்டுதல்களையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

முனைவர் குருசாமி சித்தர்
தலைவர்,
தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்
10/2, நால்வர் நகர், கல்வீரம்பாளையம்
பாரதியார் பல்கலைக்கழகம் (அஞ்சல்)
கோயமுத்தூர் - 641 046.

கோயமுத்தூர்
19.10.2001

# அணிந்துரை

சங்ககாலம் முதல் இன்றுவரை மருதநில வேளாண் மக்களாய் தமிழகத்தில் வாழ்ந்துவரும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் இனத்தில் பல்வேறு குலப்பிரிவுகளும் கூட்ட முறைகளும் காணப்படுகின்றன. இம்மக்களிடம் பன்னீராயிரம் கோத்திரம் (குலம்) இருப்பதாகப் பதினைந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த பழனிப்பட்டயம் குறிப்பிடுகிறது. தமிழகத்தில் மூவேந்தர் மரபைத் தோற்றுவித்த இந்த மண்ணின் அசல் மைந்தர்களான மள்ளர்கள் 14ம் நூற்றாண்டுக்குப் பின்னர் பிறமொழியாளர்களின் குறிப்பாக நாயக்கர் வெற்றிக்குப் பின்னர் ஆட்சியுரிமை இழந்தார்கள். இருப்பினும் தங்களின் குலத் தொழிலான வேளாண்மையை அதிலும் குறிப்பாக நெல் வேளாண்மையை இவர்கள் விட்டுவிடவில்லை. இவர்கள் குறித்துச் சொல்லப்படும்

> அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
> வருந்தகைத்தாகும் மள்ளர் என்னும் பெயர்
>
> - திவாகர நிகண்டு, 9-ஆம் நூற்றாண்டு

> செருமலை வீரரும் திண்ணியோரும்
> மருதநில மக்களும் மள்ளர் என்ப
>
> - பிங்கல நிகண்டு, 10 ஆம் நூற்றாண்டு

என்றவாறு அறியப்படும் இலக்கணத்திற்கேற்ப வீரராகவும், உழவராகவும் இந்த மூவாயிரம் ஆண்டுகளாக தமிழகத்தின் மூத்த தமிழ்க்குடி மக்களாய் அறியப்படும் இம்மக்களிடம் காணப்படும் பல்வேறு குலப்பிரிவுகள் கூட்ட முறைகள் குறித்து வித்யாரத்தினம் தமிழண்ணல் புலவர் கி.ஆ. குப்புராசு சரோசினி அவர்கள் எழுதியுள்ள "மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் குலப் பிரிவுகளும் கூட்ட முறைகளும்" எனும் இந்நூல் இம்மக்களிடையே காணப்படும் பண்பாட்டு வளத்தைக் காட்டும் மிகச் சிறந்த நூலாகும். காரணம் இம்மக்களிடம் காணப்படும் பன்னீராயிரம் குலப் பிரிவுகளுள் 200க்கும் மேலான குலப் பிரிவுகளை இந்நூல் கண்டறிந்து சொல்லியுள்ளதே ஆகும். இதன் மூலம் இம்மக்கள் குறித்த "குலமும் கூட்டமும்" எனும் ஆய்வு மிகப்பெரிய அளவில் செய்திட ஒரு முன்வரைவை இந்நூல் தமிழக மானுட வியல் அறிஞர்களுக்குத் தந்துள்ளது என்றால் மிகையாகாது.

## குலம் என்பதன் விளக்கம்

இனத்தின் உட்பிரிவுதான் குலம். இது வடமொழியில்

கோத்திரம் என்றும் ஆங்கிலத்தில் கிளேன் (Clan) என்றும் பெயர்பெறும். ஒரு குலத்தைச் சேர்ந்த அனைவரும் இரத்தவழி உறவுடையோர் ஆவர். அதாவது ஒரு மூதாதையிடமிருந்து தோன்றியவர் என்பதால் இவர்களுக்குள் மணம் செய்வது கிடையாது. இவர்கள் தங்களுக்குள் பங்காளிகள் ஆவர். இவர்களுக்கென்று குலதெய்வம் (Clan God) தனியாக இருக்கும். தமிழ்ச் சமுதாயத்தில் வழங்கப்படும் பரம்பரை, வம்சம், வகையறா, பங்காளிகள் என்பதெல்லாம் குலங்களின் எச்சமாகும். ஆக குலம் என்பதை ஒருபொது மூதாதையின் மரபு வழியில் தோன்றியதன் மூலம் ஒருவருக்கொருவர் சகோதர முறையில் உறவு கொண்டவர்கள் என்று புரிந்து கொள்ளலாம். இவ்வாறான குல அமைப்பை கூட்டம் என்றும் சொல்லுவர். காட்டாகக் காலாடி கூட்டம், குடும்பன் கூட்டம், பண்ணாடி கூட்டம், பலகான் கூட்டம் என்று சொல்வதெல்லாம் இதனடிப்படையிலேயே ஆகும். அதே நேரத்தில் பண்ணாடி, காலாடி, பலகான் ஆகியன குலம் என்றும் சொல்லப்படும்.

## கூட்டம் என்பதன் விளக்கம்

கூட்டம் என்பது ஒரு சமூகத்தின் அல்லது இனத்தின் அல்லது குலத்தின் உட்பிரிவாகும். அதாவது ஒரு வழி மரபுக் குழுவாகும். ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் ஒரே இரத்தக் கலப்புடையவர்களாக ஒருவழி மரபுடையவர்களாகக் கருதப்படுகிறார்கள். ஒரு கூட்டத்தின் பெயர் குல தெய்வங்களின் பெயராகவும் (இடும்பன் கூட்டம்) செய்யும் தொழிலின் அடிப்படையிலும் (குளத்து மள்ளர், மடை மள்ளர்) தனி மனிதப் பெயராகவும் (பரமக்குடும்பன் கூட்டம்) இடம் பெயர்ந்து வாழும் ஊர்ப்பெயராகவும் (ஆத்தூர் மள்ளர், ஆதியூர் மள்ளர்) நாட்டின் பெயராகவும் (கொங்கு மள்ளர், சோழிய மள்ளர், மேனாட்டு மள்ளர்) அமையும். குலப்பெயர் அல்லது குடிப்பெயர் அம்மக்களின் உட்பிரிவுகளுக்கு ஆன கூட்டப் பெயராகவும், குலப் பெயராகவும் நிலை பேறடைகிறது. சில நேரங்களில் குலமும் கூட்டமும் ஒன்றையொன்று நெருங்கிய உறவுடையதாகக் காணப்படும். இவ்வாறு ஒரு கூட்டம் எனும் வகையில் அறியப்படும் மக்கள் தங்களுக்குள் சகோதர உறவுடையவர் என்று கருதப்படுகின்றனர். இவ்வாறு அறியப்படும் ஒரே கூட்டத்தினிடையில் சில தெய்வம் இன்னொரு கூட்டத்தின் குல தெய்வம் ஆகாது. இன்று இக்குல தெய்வ அமைப்பு முறையில்தான் ஒரே குல தெய்வத்தை வழிபடுபவர்கள் பங்காளிகள் என்று அறியப்படுகின்றனர். இவ்வாறான குல அமைப்புக்களை ஒரு சாதிக்குள் கண்டறிவதென்பது

அவர்களது உறவு முறைகளைக் கண்டறிவதாகும். மனித குலத்தைப் பற்றிய மானிடவியலின் மகத்தான கண்டுபிடிப்புக்களுள் சமுதாயத்தின் கட்டமைப்பிற்குள் செயல்படும் மரபுமுறை (Descent system) உறவுமுறை (Kinship) பற்றிய விதிகளைக் கண்டு பிடித்ததும் ஒன்றாகும் என்று மானுடவியலாளர்கள் இக்குலப் பிரிவுகளின் அமைப்புக் குறித்து வியப்புத் தெரிவிப்பர்

## குலப்பிரிவின் செயல்பாடுகள்

மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள் கொண்டுள்ள குலப்புரிவுகள் பெரும்பாலும் அவர்கள் வழிபடும் குல தெய்வத்தை வைத்தே கணிக்கப்படுகின்றன. இருப்பினும் இம்மக்களிடம் காணப்படும் கூட்டப் பிரிவுகளின் எண்ணிக்கை இம் மக்களின் இம் மண்ணுடனான தொன்மையான பிணைப்பினையும் வரலாற்றையும் உள்ளடக்கியதாகக் காணப்படுகின்றன. தமிழகம் முழுவதும் 2 கோடி மக்கள் தொகையுடன் பரவி வாழும் இம்மக்கள் தேவேந்திர குல வேளாளர், கடைஞர், பள்ளர், காலாடி, குடும்பன், பண்ணாடி, பலகன், மூப்பன் என்ற பல பிரிவுகளில் அழைக்கப்பட்டாலும் இன்று தேவேந்திர குல வேளாளர் என்று ஒரே இன உணர்வுடன் எழுச்சி பெற்று தாங்கள் ஒரு மூதாதையின் வழி வந்தவர்களாக அதாவது மருதநில வேந்தனின் மக்கள் என்றே கருதும் நிலை உருவாகியுள்ளது.

இதல்லாமல் திருமண உறவுகள் இக்கூட்டத்தின் பெயரை அறிந்தே நிகழ்கின்றன. ஒரு கூட்டத்திற்குள் திருமணம் செய்வது இவர்களிடம் வழக்கிலில்லை. வேறு கூட்டத்தில்தான் இம்மக்கள் திருமணம் செய்யும் வழக்கம் உள்ளது. இதனை புறமணம் (Exogamy) என்பர். இங்கு சகோதர மணம் (Endogamy) என்பது ஒரு கூட்டத்திற்குள் திருமணம் செய்வதைக் குறிக்கும். இவ்வழக்கம் அதாவது சகோதர மணம் இம்மக்களிடம் இல்லை.

திருமண உறவுகளைத் தீர்மானிப்பதில் குலமும் கூட்ட முறைகளும் பங்காற்றுவது போன்று சமூகத்தில் ஒற்றுமையை வளர்ப்பதிலும் இம்முறை பயன்படுகின்றது. ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் குருதி உறவுடையவராகக் கருதப்படுவதால் உடன் பங்காளிகள் என்று இணைந்து செயல்படும் தன்மை இதில் வலுவாகக் காணப்படுகின்றது. இது குலம் எனும் அமைப்பு ஆற்றும் சமூகச் செயல்பாடு ஆகும்.

இவ்வகையில் நாகரீகத்தின் முதற்படிகட்டு என்று சொல்லப்படும் திருமணம் எனும் அமைப்பு பின் இக்குலமும்

கூட்ட முறைகளும் நெருங்கிய தொடர்புடையதாக அறியப் படுவதால் ஒரு சமூகத்தின் பண்பாட்டினை அறிய அம்மக்களிடம் வழக்கிலுள்ள குலங்களையும் கூட்ட முறைகளையும் அது செயலாற்றும் பணிகளையும் மதிப்பிடுதல் அவசியமாகிறது. இதன்வழி பிற தமிழ்ச் சமூகங்களோடு இச்சமூகம் கொண்டுள்ள பண்பாட்டு உறவினையும் நெருக்கத்தையும் அறியமுடியும். வரலாற்று நெடுகிலும் இச்சமூகம் பெற்றுள்ள பல சமூக மாற்றங்களை அறியவும் இவ்வாய்வு பெரிதும் துணைபுரியும். இவ்வகையில் தமிழண்ணல் புலவர் கி.ஆ. குப்புராசு சரோசினி அவர்கள் தொடங்கி வைத்துள்ள இவ்ஆய்வின் வழியே பல ஆய்வு நூல்கள் இம்மக்களின் குலம், கூட்டம் குறித்து வெளிவர வேண்டும். தமிழகம் முழுமையும் இவ்வாய்வு நகர்த்தப்பட்டு இம்மக்களிடம் வழக்கிலுள்ள பல ஆயிரக்கணக்கான குலம், கூட்டங்களை வகைப்படுத்திக் காண இவ்வாய்வு ஒரு நெறியும் குறியும் காட்டியிருக்கிறதென்றால் அது மிகையாகாது. இந்நூலில் இந்நூலாசிரியர் கண்டுள்ள விளக்கம் வரையறை அவர் இந்நூலை உருவாக்கிய காலத்தில் கிடைக்கப் பெற்ற சான்றுகளும் ஆதாரங்களை மட்டுமே வைத்துச் சொல்லப் பட்டதாகும். இன்னும் பல இதுபோன்ற ஆய்வுகள் பெருகப் பெருக இவ்விளக்கங்களும், வரையறைகளும் மாறும். இதன்படி இந்நூலில் ஆசிரியர் கண்டு சொல்லியுள்ள குலங்கள், கூட்டங்கள் குறித்து பல தகவல்கள் தமிழகம் முழுவதும் பரவிக்கிடக்கின்றன. இந்நூலைப் படிக்கும் அறிஞர்கள் தமது கருத்துக்களை ஆசிரியருக்கும், இந்த அரிய நூலை வெளியிடும் தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்ற முகவரிக்கும் எழுதினால் எதிர்கால ஆய்வுகள் மேலும் சிறக்க வழி ஏற்படும். இந்த அரிய பெரிய ஆய்வு நூலை தமிழ் கூறும் நல்லுலகம் ஏற்றுப் போற்றும் என்றும் நம்புகின்றேன். இந்நூலாசிரியர் தமிழண்ணல் புலவர் கி.ஆ. குப்புராசு சரோசினி அவர்கள் இதுபோன்ற பல நூல்களை இச்சமூக மக்களுக்காக உருவாக்கித் தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றேன். குலம், கூட்டம் எனும் மானுடவியல் துறை கடல் போன்றது இதில் மூழ்கி முத்தெடுத்து வெற்றி பெற்றுள்ள இந்நூல் மானுடவியல் துறைக்கும் தமிழர்களின் சமூகப் பண்பாட்டுத் துறைக்கும் புதிய வரவு என்றால் மிகையாகாது.

19.10.2001
கோயம்புத்தூர்

டாக்டர் தே. ஞானசேகரன்
பேராசிரியர், தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர் - 641 046.

# முன்னுரை

நான் ஒரு சுயமரியாதைக்காரன் - என் தாத்தா சமேதார் தா. கிருஷ்ணசாமிப்பண்ணாடி அப்பா சமேதார் தா.கி. ஆறுமுகப்பண்ணாடி சென்ற வழி அது. ஒன்றே குலம் ஒருவனே தேவன்; யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற சாதியற்ற சமுதாயத்தை பொதுமைக் குமுகாயத்தைச் சமைக்க விரும்புபவன்.

என்ன தகுதி இருந்தாலும் கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம், செல்வம், செல்வாக்கு, ஈகை தொண்டு எனப் பல துறைகளில் சிறந்து விளங்கினாலும் இன்றைய சமுதாய அமைப்பில் சாதியைக் கேட்கிறார்கள்; சாதியைப் பார்க்கிறார்கள்.

நான் பரம்பரையாக உழவுத் தொழில் செய்து வரும் உழவர் குடியைச் சார்ந்தவன்; திராவிட இயக்கத்தின் தாக்கத்தால், தமிழ்- தமிழன் மீது தீராப் பற்றும் பாசமும் வைத்தவன். நான் கற்ற திருக்குறளில், உழவு, உழவர் பெருமை பற்றி வியந்து கூறப்படுகிறது. அந்த உழவர் பற்றி - உழத்தியர் பெருமை பற்றி -உயர்வான கருத்தாக்கம் இன்று காணப்பெறவில்லை. உழவர், உழுதுண்பார், உழுவித்துண்பார் என இருவகையாகக் கி.பி. 14ஆம் நூற்றாண்டிலேயே உரையாசிரியரால் பிரித்துக் காட்டப்பட்டுள்ளனர். உழுதுண்பார் - உழவர், களமர், கடையர், பள்ளர், மள்ளர் எனவும் உழுவித்துண்பார் வெள்ளாளர் வேளாளர் என மேட்டுமைத் தன்மை கொண்ட சாயல்களிலும் புதிய பெயர்கள் உருவாகின.

உழவர் என்பார் யார்? பள்ளர் என்பவர் எவர்? வேளாளர் என்ற சொல்லுக்கும் வேளாண்மை என்ற சொல்லுக்கும் உள்ள தொடர்பு யாது? விரிவாக விவாதிக்கப்பட வேண்டிய ஒன்று. மறு ஆய்வு செய்ய வேண்டிய தேவை வந்துவிட்டது. உழவு என்பது முதலாகவும் - தொழில் என்பது சினையாகவும் பார்த்த நிலை பறிபோய்விட்டது. ஒன்றனுக்கு ஒன்று உறுதுணையானது என்ற நிலை மாற்றம் பெற்றது. உழவும் உழவின் தொழிலும் செய்வோர்கள் ஒடுக்கப்பட்டனர். உறுதுணையாக இருந்தோர் - உதவிக்காக - உதவியாக இருந்தோர் உயர்த்தப்பட்டனர். விளங்காத புதிர் இது. உழவினோர் கை மடங்கிய காலமிது.

வேளாளர் என்பதின் பொருள் என்ன? வேளாண்மை என்பதும் வெள்ளாண்மை, வெள்ளாமை என்பதும் ஒன்றுதானா? வெள்ளாளர் என்பாரும் வேளாளர் என்பாரும் ஒரே குடிவழிதானா? அவர் தம்முள் உள்ள உண்மை நிலை என்ன? வர்க்க வேறுபாடாக எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்று. மள்ளர் என்ற சொல் வழக்கு இழந்தது எப்பொழுது? பள்ளர் என்ற சொல் எப்பொழுது வழக்கில் வந்தது? ஏன் வந்தது? யாரால் வந்தது? உழுவார் உலகத்தார்க்கு ஆணி, உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் என்ற சொல்லமுத்தத்தின் சொற் பொருள் மாற்றம் பெற்றதேன்? நெஞ்சக்குழியில் நெருடல் ஏற்பட்டது. அசைப்போட்டுக் கொண்டே இருந்தேன்.................

கழனி உழவர் தண்டலையுழவர் வயலுழவர் நசையுழவர், ஒரேருழவர், வாளேருழவர், சொல்லேருழவர் பன்னேருழவர் விரிப்பின் பெருகும். சங்க நூல்கள் உழவைச் சான்று காட்டி நிறுவும்.

ஒட்டு மொத்தமாக உழவர் என்ற சொல்லுக்கு பள்ளர், மள்ளர் வேளாளர் என்று பொருள் சொல்லலாம். சங்க நூல்களை நிகண்டுகளைக் கற்போம். எளிதில் கிடைப்பது "மள்ளர்" என்ற சொல் வளப்பமாக அமைந்தது. "அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும் வருந்தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்'', ''செருமலை வீரரும் திண்ணியோரும் மருதநிலமாக்களும் மள்ளரென்ப". "ஏராளர் நாட்டும் வாளுழவர் மள்ளர் செயமிகு மறவர் தானைத் தலைவர்" எனச் சேந்தன், பிங்கல, சூடாமணி நிகண்டுகள் வழிப்படுத்துகின்றன. தேவ ஆசிர்வாதத்தா வெளிப்படுத்தப்பட்டது. வெளிச்சம் கிடைக்கிறது. குருடனுக்கு வேண்டியது வெளிச்சந்தானே.

தொடர்ந்து படிக்கிறேன் நூல்களைத் தேடுகிறேன் சிந்திக்கிறேன். நண்பர்களோடு - அறிஞர்களோடு - பெ மக்களோடு விவாதிக்கிறேன். ஆராய்ச்சி மறு ஆராய்ச தொடர்கிறது.

ஒரே சாதிப்பெயர் பல சாதிக்கு வாழ்க்கைப்படுகிறது. பல சாதிப் பெயர்கள் ஒரு சாதியாய்த் தழுவப்படுகிறது. ஒன்றுள் ஒன்று சங்கமம். சங்கமச் சாதியார் சங்கர சாதியருள் அடக்கம். சங்கரசாதியார் சாம்பார் சாதியில்

ஒடுக்கம், இவையாவும் ஒன்றுள் ஒன்றே என்பதை உணர்ந்தேன். சாதியற்ற தமிழர் என்ற கருதுகோளை வைத்து அளவிடலானேன். 450 பக்கங்களாக விரிந்தது. சாதியற்ற தமிழர் ஓர் ஒப்பீட்டாய்வு எனப்பெயரிட்டேன். வெளிக்கொணர வழி தெரியவில்லை.

பாரதியார் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறையைச் சார்ந்த, பேராசிரியர் டாக்டர் தே.ஞானசேகரரும், பாரத வங்கியின் உதவி மேலாளர், வாதிரியார் குல விளக்கு த.செயக்குமார் தேவேந்திரரும் எம் இல்லம் வந்து தேவேந்திர குல வேளாளர் சமூக அறிஞர்களால் நடத்தப்பட்டு வரும் தமிழர் பண்பாட்டு வரலாற்று ஆய்வு மையத்தில் "மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் குலப் பிரிவுகளும் கூட்ட முறைகளும்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை படிக்க வேண்டினர். கரும்பு தின்னக் கைக்கூலியா? ஒப்புக்கொண்ட படி விரிவான கட்டுரை ஒன்று எழுதி 11.10.1998 ஆம் நாள் படித்தேன். தொடர்ந்து படித்தேன்; திருத்தம் செய்தேன். விமர்சனத்திற்கு வைக்கிறேன். என் பேராசிரிய நண்பர்கள், அறிஞர்கள், புலவர்கள் படித்தனர். நன்றாயிருக்கின்றது என்றார்கள். விமர்சனம் செய்யவில்லை.

என் மரியாதைக்குரிய டாக்டர் குருசாமி சித்தர் அவர்களுக்கும் பல்வேறு பல்கலைக்கழகத்தில் முறையாக முனைவர் பட்டம் பெற்று பேராசிரியர்களாகப் பணியாற்றி வரும் அறிஞர் பெருமக்களுக்கும் முன் அரங்கேற்றி அவர்களின் ஒப்புதல் பெற்றேன். மள்ளரிய சிந்தனைச் செம்மல்கள் ஒப்புக் கொண்டபின் விளக்கம் தேவையில்லை ன்று கருதுகிறேன்.

கல்வெட்டு, வரலாறு, சிலாசாசனம், செப்புப்பட்டயம், ஓலைச்சுவடி அறிவினை, கோவை தொல்பொருள் ஆய்வியல் துறை அறிஞர் இரா. பூங்குன்றன் உணர்த்தினார். னிலும் இளையவரானாலும் அறிவில் முதியவர்; எனக்கு சிரியர். நன்னூலார் கண்ட நல்லாசிரியர் வழிகாட்டலே ன் கட்டுரைக்கு அங்கிகாரம் எனலாம். அவர் தம் ருத்துக்களை அடுக்கடுக்கடுக்காகக் கட்டி ஆரமாக்கிக் கொடுத்துள்ளேன்.

மள்ளரெனும் தேவேந்திர குல வேளாளர் தலப்பிரிவுகளும் கூட்டமுறைகளும் என்ற தலைப்புக்கு

எங்குல வரலாற்றின் முதனூல் ஆசிரியர் மூதறிஞர் கல்வெட்டு வரலாற்றுப் பேரறிஞர் இரா. தேவ ஆசிர்வாதம் அவர்கள், உலக மகா அறிஞரெல்லாம் ஒன்றாய்க் கூடி, ஒருருவாய் நின்றாலும் ஒப்பே இல்லா, நிலவு புகழ் தமிழகந்தான் நேர்ந்து பெற்ற, நிறை புலமைப் பெரும் புலவர் நெஞ்சமெலாம் உலவுகின்ற, இருளகற்றி ஓய்வே காணா உதயஞான திலகமாவார். அவர் தொட்டுவிட்ட தொடரை விரித்தெழுதினேன்.

"பள்ளரல்ல மள்ளர் ஆம் மன்னர் என்ற நூலைத் தொடர்ந்து ஆற்றங்கரை நாகரிகத்தின் ஆணிவேராம் ஆற்றுக் காலாட்டியர். காலாடி, இந்திரசாதி, இந்திரகுலம், தேவேந்திர குலத்தார். தேவேந்திர குல வேளாளர், அதிகாரி, பணிக்கன், வாதிரியார், குடும்பர், கணக்கர், அளவர், மூப்பர், பாண்டியர், பண்ணாடி, மண்ணாடி, மன்றாடி, வேள், வேளார், வேளாளர், வெள்ளாளர், கூத்தாடி, வாய்காரன், பலகான், நாட்டார், கிழார், அரையன், அரசன், வேந்தன் என்போர் பள்ளரல்ல மள்ளர் அவரே மன்னர் என்று காரணகாரியத்தோடு - பல்வேறு நூலாசிரியர் - கல்வெட்டு, வரலாற்று, செப்புப்பட்டய சிலாசாசனத்தின் - துணையோடு அறிவறிந்த அறிஞர் தம் மேற்கோள் குறிப்போடு விரிவாக விரித்து எழுதியுள்ளேன். கிடைத்த சான்றுகள் - அண்மையில் வெளிவந்த செய்திகள் நூலுக்கு ஆக்கம் சேர்ப்பன.

இந்த நூல் சாதி வரலாறல்ல -- தமிழினத்தின் மறுபக்கங்கள். மறைந்து போன தமிழனின் சொத்துக்கள். அண்மையில் அறிஞர்களால் கண்டுபிடித்த அறிவார்ந்த முடிவுகள்.

"உலகத்தில் எவ்வகையான நற்செயலுக்கும் ஊக்கமும் உணர்ச்சியும் இன்றியமையாதன. மக்கள் அவற்றை அடைவதற்குரிய சாதனங்கள் பலவற்றிலும் அவர்களது முன்னோர்களைப் பற்றிய அறிவும், நினைவும் சிறந்ததாக அந்நோக்கத்தினை அடிப்படையாக கொண்டு எழுதப் பெறும் தேச சரித்திரங்கள் பெரிதும் பயன்படுவனவாம். ஒரு சாதி அல்லது வகுப்பினைக் குறித்து எழுதப்படும் சரித்திரம், அவ்வகுப்பினர் குறித்து எழுதப்படும் சரித்திரம், அவ்வகுப்பினர்க்குள் உணர்ச்சியும் எழுச்சியும் உண்டாக்கும் அளவாவது பயனளித்தல் கூடும். அன்றி தேச சரித்திரத்தில்

அஃது ஓர் உறுப்பாதலும் அமையும். இக்கருத்தால் பற்பல நாட்டிலும் பல வகுப்பினர் தங்கள் சாதி சம்மந்தமாகப் புத்தகங்கள் எழுதி வைத்திருக்கின்றனர்

கள்ளர் மறவர் அகம்படியரைப் பற்றி நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டாரும் வேளாளர்களைப் பற்றி மறைமலை அடிகளாரும் மூவேந்தர்களைப் பற்றி மூதறிஞர் தேவஆசிர்வாதமும் முத்தரையர்களைப் பற்றி நடன காசிநாதனும் நாடார்களைப் பற்றி மோசஸ் பொன்னையாவும் வன்னியர்களைப் பற்றி சண்முகசுந்தரமும் கொங்கு வேளாளர்களைப் பற்றி டி.எம். காளியப்பாவும் எழுதிப் போனார்கள். அவ்வறிஞர்கள் தம் அடிச்சுவட்டைப் பின்பற்றி எழுதினேன் என்பதில் மகிழ்ச்சி கொள்ளாமலி ல்லை.

"வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பில் தலைப்பிரிதல் இன்று"

வள்ளுவர் வாக்காகும் அதாவது பிறர்க்கு உதவ முடியாதபடி வறுமை வந்த போதும் பெருமைக்கு உரிய பழமையான குடும்பத்தில் பிறந்தவர் தம் உதவும் பண்பிலிருந்து மாறமாட்டார்கள் என்பது வழிவழிவந்த வாழ்வியலாகும். மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் குலப்பிரிவுகளும் கூட்டமுறைகளும் பழமைக்குப் பழமையாய் பின்னைப் புதுமைக்குப் புதுமையாய்த் தொன்று தொட்டு வருபவை. அக்குடியினைப் பற்றிய செப்புப் பட்டயம் ஒன்று கிடைக்கப் பெற்றது. அதற்குப் பெயர் பழனி செப்புப் பட்டயமாம். கி.பி. 1528 ஆம் ஆண்டையதாக அச்செப்புப்பட்டயத்தில் பள்ளர்களில் (மள்ளர்) பன்னீராயிரம் கோத்திரங்கள் உள்ளன எனப் பேசப்படுகிறதைப் போல 1828 ஆம் ஆண்டில் நத்தம் என்ற இடத்தில் ஒரு செப்புப்பட்டையம் கிடைக்கப் பெற்றது. அதற்குப் பெயர் நத்தம் செப்பேடு எனக்கூறுவர். ஆக இவ்விரு செப்புப் பட்டையங்களில் காணப்பெறும் குலப்பெயரும் குடிப்பெயரும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் தம் குடிப் பெயரை - அவற்றின் சிறப்பியல்புகளை நுணுகி ஆராய்ந்து பார்த்தால் அவர் தம் கலை, கலாச்சாரம், நாகரிகம், பண்பாடு, வீரம், கொடை, நேர்ச்சி, தகவு சான்றாண்மை நன்கு விளங்கும். அத்தகு பழமையான குடியின்கண் வந்த

குடிப்பெயரை, பழனிச் செப்புப் பட்டயத்தாலும், நத்தம் பட்டயத்தாலும், நாட்டார் நடைமுறை குடிப்பெயராலும் கள ஆய்வாலும் தேடுதல் வேட்கையாலும் 210 குடிப்பெயரை இந்நூலுள் கொண்டு வந்துள்ளேன். இக்குடிப்பெயர்கள் தொன்மை பற்றியும் பன்மை பற்றியும் பழமை பற்றியும் தலைமை பற்றியும் வழங்கப்பட்ட பெயர்களாகும். இடுகுறிப் பெயரோ காரணப் பெயரோ ஏதேனும் இனிமேலும் இது போன்ற குடிப்பெயர்களினால் தெரிய வரலாம். ஆர்வலர்கள் தொடர்ந்து ஆய்வு மேற்கொள்ள வேண்டிய கடப்பாட்டினர். இப்பெயர்களால் நெஞ்சு நிமிர்த்தி பள்ளரல்லர் மள்ளர்யாம் - ஆம் மன்னர் குடி வழியினர் எனத் தூக்கலாக நடைபோடலாம்.

என் எண்ணங்களைப் பதிவு செய்ய எத்துணைபேர் கை கொடுத்துள்ளார்கள் என்பதை நினைவு கூறி வணங்குகிறேன்.

சாதிவெறி பிடித்த சமூக அமைப்பில் - அடுத்தவரை ஆண்டாண்டு காலமாக அடிமைப்படுத்த நினைத்த சதிகாரர்களை எதிர்நின்று சமராடியவர்களுக்கு நன்றி, சாதி இரண்டொழிய வேறில்லை, பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையால் என சமரசம் பேசிய சான்றோர்களுக்கு நன்றி. வீழ்ச்சியுற்ற சமூகத்திற்கு எழுச்சி வேண்டும் என வீரமுழக்கமிட்ட தானைத் தலைவர்களுக்கு நன்றி.

காழ்ச்சிந்தை மறச்செயல்கள் கடிய - கருணையும் அன்பும் வளர, கட்டுரை, கதை, பொழிவு எனத் தம் வாழ்நாளை அர்ப்பணித்த சான்றோர்களுக்கு நன்றி. கல்வெட்டு வரலாற்றுப் பேரறிஞர் தனிச்சிறப்புத் துணை ஆட்சியாளராகப்பணியாற்றிய இராம. தேவஆசீர்வாதம் அவர்கள் நட்பும் நூலும் என்னைச் செழுமைப்படுத்தின.

பல்வேறு பொறியியல் கல்லூரிகளில் பேராசிரியராக இருந்து, அமெரிக்காவில் டாக்டர் பட்டம் பெற்றவர், தொழில் செய்து பெரும் பொருளை ஈட்ட எண்ணாமல், தாம் பிறந்த மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென பதவியை, செல்வத்தை உதறித்தள்ளிய உதாரணபுருஷராகத் திகழும் டாக்டர் குருசாமி சித்தர் B.E. M.Sc.. (Engg). Ph.D. (U.Conn-U.S.A. அவர்களுக்கு நன்றி.

"சாதியற்ற தமிழர் ஓர் ஒப்பீட்டாய்வு" என்ற என் நூலறிவை, கருதுகோள்களை மடைமாற்றி" மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர் குலப்பிரிவுகளும் கூட்டமுறைகளும்" என்ற தலைப்பைத் தந்து, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றத்தில் பேச வைத்த பேரா. முனைவர். தே. ஞானசேகரன் அவர்களுக்கு நன்றி,

திருநெல்வேலி தெற்குப் பரமன்குறிச்சி தங்கவேலு தேவேந்திரர் அறக்கட்டளை நிறுவி, என்னைப் பேச வைத்த, சென்னை இந்திய ஸ்டேட் வங்கியின் மேலாளர் திரு. த. செயக்குமார் வாதிரியார்க்கு நன்றி,

என் கட்டுரையைப் புதிய பொலிவுடன், பொன்மலர் நாற்றம்பெற புதுக்கிய டாக்டர் குருசாமிசித்தர் என்ற எம் சமூக எழுஞாயிற்றினுக்கு நன்றி. மெய்ப்படிவம் பார்த்த புலவர் இரணியன், முனைவர் கனிலின்மைந்தன், என் தம்பி கி. வரதராசன் பி.ஏ.பி.எல். ஆகியோர்களுக்கு நன்றி.

வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்ய - குறை நிறைந்த தமிழர் வரலாற்றை நிறைவுசெய்ய - பல்வேறு தரவுகளை உருவாக்க உறுதுணை புரிந்த தொல்லியல் அறிஞர் முனைவர் ர. பூங்குன்றன் அவர்களுக்கும் என்னை வாழ்த்திக் கவிதை பாடிய, என்னை அன்பால் அதட்டிப் பேசும் ஆற்றலுள்ள புலவர் ஆதி. (க.சி. இராசியண்ணன்) அவர்களுக்கும் நன்றி.

இந்நூலினை சிறப்பான முறையில் அச்சிட்ட மாமன்னர் அச்சக உரிமையாளர்கள் மா. இராஜ்குமார், மா. சிவக்குமார் ஆய மள்ளினச் செல்வர்களுக்கு நன்றி.

என்னை ஈன்ற என் அன்னை திருமதி இலட்சுமி ஆறுமுகம் மள்ளத்தியார் என் வாழ்க்கைத் துணைவி திருமதி சரோசினி குப்புராசு மள்ளத்தியார் ஆகியோர் நினைவாக என் அறிவறிந்த நன்மக்கள் ஆ.கு. அறுமுகச்செவ்வேள், ஆ.கு. இசைஞானியார் வெளியீடு செய்தமைக்கு நன்றி, நன்றி, நன்றி.

கோயம்புத்தூர்
20.10.2001

புலவர் கி.ஆ. குப்புராசு சரோஜினி
119, இலக்குமி இல்லம்,
பெரியார் நகர், புலியகுளம்,

# வாழ்த்துப்பா

திருப்பேரூர் சாந்தலிங்கர் கல்லூரி தனில்தமிழைச்
சிறப்பாகக் கற்றுத் தேர்ந்தோன்;
சீர்கோவை நகராட்சி உயர்பள்ளி மாணவர்க்குச்
செந்தமிழைக் கொட்டித் தந்தோன்;
ஒருகணமும் ஓய்வின்றி உழுதொழிலில் கருத்தூன்றி
உழைத்துமிக விளைச்சல் கண்டோன்;
ஒப்பற்ற பெரியாரின் செப்பரிய சீடனென
ஊர்மெச்ச வாழ்ந்து நிற்போன்;
அருளாளர் ஆய்வாளர் கோவைகிழார் நூல்பலவும்
அச்சேற்றி உலவச் செய்வோன்;
அன்பரெலாம் கொண்டாடும் ஊர்த்தலைமை பெற்றிலங்கும்
அண்ணலெங்கள் குப்பு ராசு
அருமையுடை "மள்ளரினக் குலப்பிரிவு கூட்டமுறை"
அழகொளிர யாத்த ளித்தான்.
அவனிந்த வையத்தில் ஆழ்ந்ததமிழ் மொழியாக
அளவற்ற காலம் வாழ்க!

பகலவனாம் பெரியாரின் பகுத்தறிவு விஞ்ஞானக்
கொள்கைக்குச் சான்றாய் நிற்போன்;
பண்பாளர் கூட்டத்தின் பண்புள்ள தொண்டனாய்ப்
பயனுள்ள பணிகள் செய்வோன்;
குகனென்னும் ஒருவேடன் இராமனிடம் கொண்டிருக்கும்
கோதற்ற பக்தி போலக்
குலமள்ளர் இனத்தின்மேல் குறையாத நிறைவான
குணமோங்கும் காதல் கொண்டோன்;
சுகம்பெருக ஆண்டகுலம் சூழ்ச்சியினால் வீழ்ந்தநிலை
சுத்தமாய் எண்ணி எண்ணி
தூயதமிழ் மள்ளரினம் மேன்மையுறப் போராடும்
சுடர்ப்புலவர் குப்பு ராசு
சகம்புகழும் நூலான "மள்ளரினக் குலப்பிரிவு
கூட்டமுறை" யாத்த ளித்தான்.
சந்ததமும் தேவேந்திர குலம்வாழச் சிந்திக்கும்
தமிழ்ப் புலவர் வாழ்க நீடு!

*- புலவர் ஆதி. கோவை.*

# மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர் குலப் பிரிவுகளும் கூட்ட முறைகளும்

## பொருளடக்கம்

29. பண்ணாடி
30. பணிக்கன்
31. பலகான் - பலகன் - பலகனார்
32. பழையர்
33. பள்ளர்/பள்ளனார்
34. பள்ளி/பள்ளியர்
35. பனியர்
36. பாண்டியர்
37. பாவாணர்
38. பூசி
39. மகிழ்நன்
40. மண்ணாடி
41. மல்லர் - மல்லனார்
42. மழவர்
43. மள்ளர் - மள்ளனார்
44. மன்றாடி
45. முதலி
46. மூப்பன் - மூப்பனார் - மூப்பர் - தேவேந்திர மூப்பனார்
47. செட்டி மூப்பன்
48. நாட்டு மூப்பன்
49. புள்ளி மூப்பன்
50. வலவன், வளவன்
51. வாதிரியார்
52. வாய்க்காரர் - வயற்காரர்
53. வாரியன்
54. வெண்களமர்
55. வெள்ளாளர்
56. வேந்தர்
57. வேள்

## பலநாட்டுக் குடும்பர்கள் 74

58. அகத்தியக் குடும்பர்
59. குளமங்கல நாட்டுக் குடும்பர்
60. தலைக்கா நாட்டுக் குடும்பர்
61. துவராபுரிக் குடும்பர்
62. பளுவஞ்சி நாட்டுக் குடும்பர்
63. பாலக்கரை நாட்டுக் குடும்பர்
64. பெருமாநாட்டுக் குடும்பர்
65. பொய்கை நாட்டுக் குடும்பர்
66. வீரவளநாட்டுக் குடும்பர்

**கூட்ட முறைகள்** 76

67. அகத்திய மள்ளார்
68. அக்கா மள்ளார்
69. அக்கரை கண்ட மள்ளார்
70. அகத்தா நாட்டு மள்ளார்
71. அணைக்கரை மள்ளார்
72. அம்பு நாட்டு மள்ளார்
73. அம்மா மள்ளார்
74. அரச மள்ளார்
75. அரப்பு மள்ளார்
76. அரிமா மள்ளார்
77. அழகுடை மள்ளார்
78. அளவுகை விட்ட மள்ளார்
79. அன்னிய மள்ளார்
80. அணிய மள்ளார்
81. ஆஞ்ஞா மள்ளார்
82. ஆண்டி மள்ளார்
83. ஆத்தா மள்ளார்
84. ஆத்தாய மள்ளார்
85. ஆத்தூர் மள்ளார்
86. ஆதியூர் மள்ளார்
87. ஆமண மள்ளார்
88. ஆயா மள்ளார்
89. ஆரூர் மள்ளார்
90. ஆனைகட்டி மள்ளார்
91. ஆனையூர் மள்ளார்
92. இசை மள்ளார்
93. இப்புரை மள்ளார்
94. இருள மள்ளார்
95. இளம் பிள்ளை மள்ளார்
96. இளம்பிறை மள்ளார்
97. ஈச்சங்கொட்டை மள்ளார்
98. ஈச்சநாட்டு மள்ளார்
99, ஈஸ்வர மள்ளார்
100. ஒளிய மள்ளார்
101. கட்டை மள்ளார்
102. கடைத்தலை மள்ளார்
103. கடைய மள்ளார்
104. கப்பரை மள்ளார்
105. கல்லுக்கட்டி மள்ளார்
106. கல்நாட்டு மள்ளார்

107. கலிநாட்டு மள்ளர்
108. கவன / கவண மள்ளர்
109. கவிதமான மள்ளர்
110. கவி நாட்டு மள்ளர்
111. கவுண்ட மள்ளர்
112. களத்து மள்ளர்
113. கனியா மள்ளர்
114. காட்டானை மள்ளர்
115. காட்டானை வென்ற மள்ளர்
116. காதுவ மள்ளர்
117. காதுவி மள்ளர்
118. கிளிஞ்சி மள்ளர்
119. குங்கும மள்ளர்
120. குதிரை மள்ளர்
121. குதிரைக்கு மாரடிக்கும் மள்ளர்
122. குதிரை முடி மள்ளர்
123. குமுண மள்ளர்
124. குமிர்த மள்ளர்
125. குமித மள்ளர்
126. குமுண முறங்கொத்தி மள்ளர்
127. குலமாங்கல்ய நாட்டு மள்ளர்
128. குளத்து மள்ளர்
129. குழவு நாட்டு மள்ளர்
130. குறும்ப மள்ளர்
131. கூத்த மள்ளர்
132. கூத்தாடி மள்ளர்
133. கூனங்குடி மள்ளர்
134. கொங்க மள்ளர்
135. கொனுதை மள்ளர்
136. கொலைகளவு வென்ற மள்ளர்
137. கோதிரையா மள்ளர்
128. கோதிக மள்ளர்
139. கோலிய மள்ளர்
140. கோனகப் பூச்சி தின்னும் மள்ளர்
141. கோனாட்டு மள்ளர்
142. சங்கர மள்ளர்
143. சாணாட்டு மள்ளர்
144. சாமண மள்ளர்
145. சாயா மள்ளர்
146. சிங்கி மள்ளர்
147. சிறுதாலி கட்டி மள்ளர்

148. சின்னிய மள்ளர்
149. சிவந்தி நாட்டு மள்ளர்
150. சுந்தர மள்ளர்
151. சுவந்தர மள்ளர்
152. சுழிகணியா மள்ளர்
153. செங்கா மள்ளர்
154. செம்பாட்டு மள்ளர்
155. செலுவா மள்ளர்
156. சொட்டை மள்ளர்
157. சேரநாட்டு மள்ளர்
158. சோதிட மள்ளர்
159. சோழிய மள்ளர்
160. சோளிய மள்ளர்
161. சோனக மள்ளர்
162. சோனாட்டு மள்ளர்
163. சைவ - சைவ சித்தாந்த மள்ளர்
164. தத்துவ மள்ளர்
165. தவமுடி மள்ளர்
166. தவளை தின்னி மள்ளர்
167. திருமுடி மள்ளர்
168. திருநாம மள்ளர்
169. திருநீற்று மள்ளர்
170. துட்டச மள்ளர்
171. துலுக்க மள்ளர்
172. துறையெறி மள்ளர்
173. துஷ்ட மள்ளர்
174. தெய்வேந்திர மள்ளர்
175. தென்சிறுவாசல் நாட்டு மள்ளர்
176. தெற்கத்தி மள்ளர்
177. தேவ மள்ளர்
178. தேவேந்திர மள்ளர்
179. தொட்டிய மள்ளர்
180. தொட்டம்பட்டி மள்ளர்
181. தொண்டை நாட்டு மள்ளர்
182. தொல்லை மாலை விலை கூறும் மள்ளர்
183. நண்டு தின்னி மள்ளர்
184. நத்தை தின்னி மள்ளர்
185. நட்டுவ மள்ளர்
186. நரம்பு கட்டி மள்ளர்
187. நாகநாட்டு மள்ளர்
188. நாகமழித்த மள்ளர்

189. நாட்டிய மள்ளர்
190. நாட்டாண்மை மள்ளர்
191. நாட்டாண்மை அழித்த மள்ளர்
192. நாட்டாண்மை வென்ற மள்ளர்
193. நார்முடி மள்ளர்
194. பச்சை மள்ளர்
195. பட்டணக் கரை மள்ளர்
196. பண்டார மள்ளர்
197. பந்தமுட்டி மள்ளர்
198. பந்தலடி மள்ளர்
199. பரங்கி நாட்டு மள்ளர்
200. பருத்திக் கொட்டை நாட்டு மள்ளர்
201. பழன மள்ளர்
202. பழிதவிர்க்கும் மள்ளர்
203. பழிதழுவிக் கொள்ளும் மள்ளர்
204. பழி தவிக்கும் மள்ளர்
205. பனுவல் கூறும் மள்ளர்
206. பன்னாக மள்ளர்
207. பனங்குடி மள்ளர்
208. பாகப்படி மள்ளர்
209. பாசிதட்டி மள்ளர்
210. பாண்டிய மள்ளர்
211. பாணங்குடி மள்ளர்
212. பாப்பு மள்ளர்
213. பாம்பாட்டி மள்ளர்
214. பாவை மள்ளர்
215. பாவைக் கட்டி மள்ளர்
216. புலிகுத்தி மள்ளர்
217. பூச்சி தின்னி மள்ளர்
218. பூசற மள்ளர்
219. பூரண மள்ளர்
220. பூலாங்கிணற்று மள்ளர்
221. பெருந்தாலி கட்டி மள்ளர்
222. பொதினி மள்ளர்
223. பொன்னி மள்ளர்
224. மங்கல நாட்டு மள்ளர்
225. மங்கா மள்ளர்
226. மடை மள்ளர்
227. மண மள்ளர்
228. மந்தை மள்ளர்
229. மரமேறி மள்ளர்

230. மருதநில மள்ளர்
231. மருதக்குடி மள்ளர்
232. மல்லுக்கட்டி மள்ளர்
233. மல்லக்குடி பள்ளர்
234. மறக்கனா மள்ளர்
235. மாநாட்டு மள்ளர்
236. மீசற மள்ளர்
237. மேல்மடை மள்ளர்
238. மேனாட்டு மள்ளர்
239. மொட்டை மள்ளர்
240. மொறம் பொற்றி மள்ளர்
241. மும்முடி மள்ளர்
242. யாப்பு மள்ளர்
243. வங்க மள்ளர்
244. வஞ்ச மள்ளர்
245. வடசிறுவாசல் நாட்டு மள்ளர்
246. வடம மள்ளர்
247. வடமலை மள்ளர்
248. வடுக மள்ளர்
249. வடுப்படா மள்ளர்
250. வடுப் படுத்திக் கொள்ளும் மள்ளர்
251. வணங்கா முடி மள்ளர்
252. வன்னி மள்ளர்
253. வானங்கட்டி மள்ளர்
254. வாளுக்கஞ்சா மள்ளர்
255. விசிறி மள்ளர்
256. விதலை மள்ளர்
257. விதான மள்ளர்
258. வீரநாட்டு மள்ளர்
259. வீரிய மள்ளர்
260. வேட்ட மள்ளர்
261. வேட்டை மள்ளர்
262. வேட்டுவ மள்ளர்
263. வெண்டி மள்ளர்
264. வேதக்கார மள்ளர்
265. வேதாந்த மள்ளர்
266. வேம்ப குளத்து மள்ளர்
267. வேலூார் மள்ளர்
268. வைணவ மள்ளர்

முடிவுரை

# மள்ளர் எனும் தேவேந்திரர்குல வேளாளர் குலப் பிரிவுகளும் கூட்ட முறைகளும்

மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் குலமும் அக்குலத்தார்க்குத் தமிழகத்தில் வழங்கப்படும் மாற்றுப் பெயர்களும் அப்பெயர்களின் உட்பொருள்களும் எண்ணி எண்ணி வியக்கத்தக்கன. இவற்றின் சிறப்பியல்புகளை அறிந்து கொள்வது - காலத்தின் கட்டாயமாகும்.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்தகுடி. சேர, சோழ, பாண்டியர் என்றாற்போல் படைப்புக் காலந்தொடங்கி மேம்பட்டு வாழ்ந்து வரும் மூத்த தமிழ்க் குடி - மள்ளர் குடியாகும்.

நானிலம் ஐந்திணையாகப் பகுக்கப்பட்டு விளங்கும் தமிழகத்தில், ஏன் பரத கண்டத்தில், - உலகில் வேறுவேறு பெயர்களால் இவர்கள் அழைக்கப்பட்டு வருகின்றனர். தமிழாதியர்களாகிய இம்மள்ளர்களை 'நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது' என்ற பழமொழிக்கேற்ப - மள்ளர் என்னும் பள்ளர் குடியினர் பல்வேறு பெயர்களால் அழைக்கப் பெறுகின்றனர்.

தமிழகத்திலும் பிற இடங்களிலும் மள்ளர் என்னும் தேவேந்திர குலத்தார், எந்த எந்த இடத்தில் எந்த எந்தப் பெயர்களில் அழைக்கப்படுகிறார்கள், அந்தந்தக் காலத்தில் என்னென்ன தொழில் செய்தார்கள், என்ன பொருள்பட வாழ்ந்தார்கள், என்பதை விரிவாக அறிந்து கொள்வதை மிக முக்கியமானதொரு நோக்கமாகக் கொள்ள வேண்டும்.

இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்துக் குலங்களுக்கும் கூட்ட முறைகளுக்கும் பொதுவாக, தேவேந்திர குலம் என்பதற்காக 'தேவேந்திர' என்ற முன்னொட்டு சேர்த்தும் கூறப்படும். காட்டாக: தேவேந்திரக் குடும்பன் தேவேந்திரப்பண்ணாடி, தேவேந்திரப்பணிக்கர், தேவேந்திர மூப்பன், தேவேந்திர மள்ளர், தேவேந்திக்காலாடி.

## 1. அஞ்சுவண்ணன்

உலகமே வியக்கும் வண்ணம் நிலத்தை நான்காகவும், ஒழுக்கத்தை ஐந்தாகவும் பகுத்து, அவ்வவ் நிலங்களுக்கு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என வகுத்தவன் தமிழாதியன். அம்மூத்த தமிழ்க்குடி மள்ளர்களே உணவு தேடும் உழவராகவும், வணிகராகவும், வேந்தனாகவும்,

சான்றோனாகவும் தெய்வமாகவும் தத்தம் செய்தொழிற்கு ஏற்ப நிலைபெறுகிறான்.

மண்ணும் மனமும் தூயதானால் சொல்லுஞ்செயலும் ஒன்றானால் மாக்கள் மக்களாவர். பசியும் பஞ்சமும் நீங்கும். வசியும் வளனும் சேர்க்கும். 'அஞ்சனன்' என்றால் இந்திரன், தேவேந்திரன் என்று மதுரை தமிழ்ச்சங்க அகரமுதலி பேசும். ஐந்திரம், ஐந்திரவியாகரணம் என்ற நூல் நுதலிய அஞ்சுவண்ணனாக, சான்றோர் மெய்ம்மறையாக விளங்குபவன் என விரிப்பார். இந்திரபோகம் எளிதாக எய்துவர். பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புவார். ஐந்து என்பது அஞ்சு எனச் சொல் வழக்கில் மாறி அஞ்சுவண்ணன் ஐந்து நிலத்திற்கும் தலைமைத்தன்மை ஏற்கும் வேந்தனாவான் என்றும் வணிகக்குழு விஞர் என்றும் பொருள் கொள்ளலாம்.

## 2. அணியர்

வரிசை எண் 80 இல் விளக்கப்பட்டுள்ளது.

## 3. அளவன்

உழுதுண்பானும் உழுவித்துண்பானும் ஒருவனே ஆவான். உழுவானுக்கு உறுதுணையாக, மொய் ஏர் ஓட்டல், சேறு கலக்கல், நாற்றுப் பிடுங்கல், நடல், அறுப்பு, அளப்பு எனப் பல்வகையான - உழவின் ஒருமைப்பாடு உண்டு. இவற்றுள் விளைகழனி விளைவிக்கும் மள்ளர்தம்முள் - நெல் விதைப்பும் நெல்லறுப்பும் தனித்தன்மை கொண்டதாகும். இது மொய் ஏர் போன்றதல்ல. அதே போல் நில அளப்பு; வேறு வகையான தவசங்கள், கூலங்கள் அளப்போரும் தனித்தன்மை கொண்டவராவார். நிலத்தையும் கூலத்தையும் அளப்பவர் ''அளவன்'' எனக் காரணப் பெயரால் அழைப்பார். 'ராசியில்' கை வைத்து வள்ளம் கொண்டு அளக்கும் புள்ளி மள்ளர் 'அளவன்' என்று அழைக்கப்படுவார்.

## 4. அதிகாரி

மதுரை மாவட்ட மள்ளர்கள் 'அதிகாரி' என்று அழைக்கப்படுகின்றனர். (டாக்டர் சு. சண்முக சுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு) இடைக்காலச் சோழர் ஆட்சியில் மூவேந்த வேளான், மூவேந்திர வேளார் பட்டம் பெற்றவர்கள் அதிகமாகக் காணப்படுகின்றனர். அதிகாரி என்பதையும் நம்கருமம் ஆராய்வார் என்பதையும் திருவாலங்காட்டுச் செப்பேடு ஒன்றாகக் காட்டுகிறது. நம்கருமம் ஆராய்வார் என்பவர்கள் அரசனின் காரியங்களைச் செய்பவர்கள்.

அரசனுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டு அவனது ஆணைகளை நிறைவேற்றும் நெருக்கமான அதிகாரிகள்.

மூவேந்த வேளாண் என்ற பட்டமுடையவர்களில் 'அதிகாரிகள்' எனப்படுபவர்கள் மிக அதிகமாகக் காணப்படுகின்றனர். இது இவர்கள் அரசு குலத்தினருடன் நிர்வாக முறையில் கொண்டிருந்த நெருக்கத்தைக் காட்டுகிறது. (மூவேந்த வேளாண், சு. இராசகோபால், தேர்வுநிலைக் கல்வெட்டு ஆய்வாளர், தமிழ்நாடு அரசு, தொல் பொருள் ஆய்வுத்துறை, மதுரை - 625 001)

அதிகாரி என்றால் பண்ணாட்டுச் செய்பவர். செயல் செம்மையாக நடக்க தூண்டுகோலாகத் துலங்குபவர். அதிகாரி மட்டும் பண்ணாடியைப் போல் கேள்வி கேட்கவும், அதட்டிப் பேசவும், அதிகாரம் பெற்றவராவார். இவர்களே தானாதிகாரியாகவும், அதிகாரியாகவும் அழைக்கப்படுகிறார்கள்.

## 5. ஆற்றுக்காலாட்டியர் – காலாடி

ஆற்றுக்காலாட்டியர் எனும் சொல் பெரும்பாலும் இன்று வழக்கில் அழைக்கப்பெறுகின்ற சொல்லாகத் தெரியவில்லை. ஊன்றிப் பார்த்தால் வயலும் வயல் சார்ந்த இடங்களில் பெரும்பாலும் ஆற்றுப்படுகை, ஏரி, குளம், குட்டை என்று நீர் வழிவரும் பகுதிகளில் குடியிருந்து வரும் மக்களுக்கு இப்பெயர் வழங்கியிருக்கலாம். காலாடி என்ற சொல் இன்றும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

'காலாடி' என்றால் - நடமாடல் - சுற்றித்திரிதல் - வாழ்ந்து வருபவர் என்று பொருள் கொண்டு ஆற்றோரங்களில் குளித்தல் - மீன் பிடித்தல் - ஓடி ஆடி விளையாடுதல் - வயலில் வெள்ளாமை செய்ய ஆற்றின் வழி காலாட்டுதல் - போய் வந்து கொண்டு இருத்தல் - மடை பார்த்தல் ஆற்று நீரைப் பயன்படுத்துபவர் என்று பொருள் கொள்ளலாம். நீர்கட்டி, வாய்க்காரர், தண்ணீர் பார்ப்பவர், பருவம் பார்ப்பவர் என வயலில் பணியாற்றும் உழவர்கட்கு, களமர்கட்கு, அவரவர் செய்யும் தொழிலுக்கு சில பெயரிட்டு அழைக்கப்பெறும் பழக்கம் இன்றும் உண்டு. அந்த வகையில் ஆற்றுக் காலாட்டியர் என்ற சொல் பயன்பட்டிருக்கலாம்.

பேரறிஞர் இரா.தேவஆசிர்வாதம் அவர்கள் காலாடி என்பது தேவேந்திர குலத்தாருள் ஒரு பிரிவினராகவும் அப்பிரிவினரது குலப்பெயர் பட்டமாகவும், இருந்து வருகின்றது. இப்பிரிவினர் தஞ்சை மாவட்டத்தின் மேல்

பகுதியிலும், திருச்சி மாவட்டம் இலால் குடி என்ற திருத்தவத்துறையைச் சுற்றியுள்ள ஊர்களிலும், புதுக்கோட்டை மாவட்டத்தின் தென்பகுதியிலும் காணப்படுகின்றனர் என்று கூறுகிறார். அகர முதலியில் காண்போமானால் 'காலாடி' என்பதற்கு சுருக்கன், தொழிலற்றுத் திரிவோன், பள்ளர் தலைவர், முயற்சியுடையோர் என்று பொருள் கண்டுள்ளது. இச்சொல்லுக்கு நீர் பாய்ச்சும் ஊழியக்காரர் என்று பொருள் கொள்வர். சேந்தன் திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி, சதுர்அகராதி முதலியவற்றில், காலாடி என்ற சொல் இடம் பெறவில்லை. ஆனால் ஆற்றுக்காலாட்டியர் என்ற சொல் பேசப்படுகிறது. இச்சொல்லுக்கு மருத நிலப்பெண், உழத்தியர் என்று பொருள் தந்துள்ளனர். ஆற்றுக் காலாட்டியர் என்பதற்கு, ஆற்றிலிலிருந்து பிரியும் வாய்க்கால்களில் வரும் தண்ணீரைக் காலால் தட்டி, மீன் பிடித்து விளையாடித் திரியும் பெண்கள் என்றும், ஆறுகளில் நீந்தி விளையாடி மகிழும் மருதநிலப் பெண்கள் என்றும் சிலர் பொருள் கொள்வர். மீன் பிடித்தலும் ஆறுகளில் நீந்தி விளையாடி மகிழ்தல் என்பதும் சிறுமிகளுக்கே பொருத்தும் எனலாம். இச்சொல் பள்ளு நூல்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டிற்கு

முக்கூடற்பள்ளு என்ற நூலில் 127 ஆம் பாடல்

தாற்றுக்கால் பூந்துளவத் தாரழகர் முக்கூடல்
சேற்றுக்கால் மள்ளருக்குத் தென்றற்கா லென்னாமோ
ஆற்றுக்கால் ஆட்டியருள் ஆட்டெழுங்கால் பண்ணைநடும்
நாற்றுக்கால் விட்டு நடுகைக்கால் ஏறாதே

என்று பயன்படுத்தப்பட்டுள்ளது. மள்ளர்களின் தேவியரான ஆற்றுக்காலாட்டியர் சேற்றுக்கால் செல்வியர் எனப்படுகின்றனர்.

காலாடி என்பதற்கு காலாட்படையைச் சேர்ந்தவர் என்றும் வேவு தொழில், ஒற்றாய்தல், ஒற்றுக்கு ஒற்றாய் இருத்தல் என்றும் பொருள்படும். கட்டபொம்மனின் படையில் ஊமைத்துரையின் உயிர் நண்பராய், ஒற்றர் தலைவராய் விளங்கி உயிர் துறந்த கட்டைக்கருப்பக் குடும்பனார் மகன் தளபதி சுந்தரலிங்கக் குடும்பனாரை நினைவு கூரலாம். இவர் பாண்டிய மன்னரின் உரிமைக்காகப் போராடிய வெட்டும் பெருமாள் மரபில் வந்தவர். பஞ்ச பாண்டியர்களின் தலைவராவார் எனத் தேவஆசிர்வாதம் கூறுவார். தமிழக முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதியும் தமது "பாயும் புலி பண்டாரக வன்னியன்" என்னும் வரலாற்று நாவலில் இவரின் பாண்டிய மரபு

பற்றிச் சிறப்பாக் கூறுவார்.

இந்திய சுதந்திரப் போரில் வெள்ளைப் பரங்கியரை விரட்டி அடிக்க, எடுத்த பல வகையான உத்திகளில் ஒன்றாக ஸ்ரீவைகுண்டத்தில் பாதுகாப்பாக வைக்கப் பெற்ற நெற்களஞ்சியத்தை தளவாய்ப் பிள்ளையின் மகன் திருமணத்திற்காக கொள்ளையிடச் சென்ற வெல்லற்கரிய மள்ளரினத் தளபதி முத்துக் குடும்ப தேவேந்திரர், நெல்லை அளக்கையில் நெற்களஞ்சியத்தைக் காத்த காவற்காரன் பாண்டியத் தேவனைக் கொன்று அவன் கூட்டத்தை சிதைத்து சித்திரவதை செய்தவர்கள். நெல் மூட்டைகளை வண்டி வண்டியாக ஏற்றி வந்தவர்கள்.

எழுநூறு மாடங்கே முன்னே போக
எழுநூறு கம்பளம் பின்னே போக
மட்டிலடங்காத காலாடிப் பள்ளர்கள்
மன்னனும் கூட நடந்திடவே

காலாடிப் பள்ளர்கள் களம் பல கண்டவர்கள் விடுதலைப் போராட்டத்தில், வெள்ளையரையும், வெள்ளையர்க்கு வெண்சாமரம் வீசும் வீணர்களையும் கொன்றவர்கள் என்று முனைவர் பரமேஸ்வரி மள்ளத்தியார் கூறுவார்.

ஊர்க்குடும்பு என்பது குடும்பர் சபை மருதநில மக்களுக்கு காலங்காலமாக ஊர்மன்றம், பஞ்சாயத்து சபை உண்டு. அப்பஞ்சாயத்து சபைகளில் அங்கம் வகிப்போர், ஊர்ச்சபை உறுப்பினர், மேல்சபை உறுப்பினர், பண்ணாடிமார், நாட்டுப் பண்ணாடி, ஊர்த் தலைவர், பெரியதனக்காரர்கள். பட்டக்காரர் என்ற அமைப்பும், அவர் சொல் வழி நடக்க, காலாடி அல்லது ஒடும்பிள்ளை, ஏகாலி, பரியாறி கொட்டு என ஒரு கூட்டமே இருக்கும். சைவ சமயமாக இருந்தால் குருஅய்யர் என்றும், வைணவர்களாக இருந்தால் அவர்கள் சமயத்திற்கு ஆதாரமாக இருப்பவர்கள் என்ற பொருளில் சமயதாரர் என்றும் அவர்கள் 18 குடும்பு தாசய்யர்களுக்குத் தலைவர் அல்லது குரு என்றும் பொருள் கூறுவார்கள். ஆக ஆற்றுக் காலாட்டியர் என்பவர் விவசாயம் செய்யும் உழவர் பெருமக்கள்; நிலத்தை உழைப்பை மூலதனமாகக் கொண்டோர். மருதநிலம் வாழ் இம்மக்களுக்கு, அவரவர் மேற்போட்டுச் செய்யும் தொழிலுக்கு ஏற்ப பெயரிட்டு அழைக்கப் பெற்றுள்ளனர். ஆற்றுக்காலாட்டியார் மள்ளரின மக்கட் பெயராகும்.

**5. காலாடி**

"காலாடி, காலாடியார், காலாக்குடியர்,

காலாக்குடியார், காவலக்குடியர், காவலக்குடியார், காவலியார், காவாடியார், காவளியார், காவாலர்ளியர்: காவல் சோழனின் மரபினர், காவல சோழனின் வேறுபெயர்களான காவல் குடியன், காவாளி என்னும் பெயர்களால் இவனது மரபினர் இப்பட்டப்பெயர்களைப் பெறுவாராயினர்" எனசூரியகுலக்கள்ளர் சரித்திரம் பேசுவதை ஒப்பு நோக்குக.

ஆற்றுக்கால் - ஆற்றங்கரை,

ஆற்றுக்கால் ஆட்சியர்- ஆற்றுக்காலாட்சியர்,

இஃது ஆற்றுக்காலாட்டியர் என மருவியுமிருக்கலாம்

## 6. இந்திரசாதி

இச்சொல் மருத நிலத்தில் வாழும் நில மக்கள், குடிமக்கள் தலைமக்கள் என்று சொல்லப்படும் மக்களின் பொதுப் பெயராகும். இவர்கள் இந்திரசாதி, இந்திரகுலம், பூவைசிய இந்திர குலம் என்றும் கூறுவர்.

தெய்வமு ணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவுங் கருவென மொழிப

எனத் தொல்காப்பியம் கூறும் கருப்பொருளில் முதற்கண் தெய்வத்தை அல்லது தெய்வத்தை ஒத்த தலைமையைக் குறிப்பிடுகின்றார். மருத நிலத்தின் தலைமகனை தெய்வம், வேந்தன்[1] என்று கூறுவார். அதுபற்றியே சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்கு வேந்தன் என்று பெயர் வழங்குவதாகும். இவ்வுண்மையை "தண்ணீரும் காவிரியே தார்வேந்தன் சோழனே மண்ணாவதும் சோழ மண்டலமே" எனப் பொய்யா மொழிப்புலவர் கூறுவார்.

'வேந்தன் மேய தீம்புனலுலகமும்' எனத் தொல்காப்பியர் மருத நிலத்தின் தலைவர், குலமுதல்வர், தெய்வம் - வேந்தன் என்று கூறுகிறார். வேந்தன் என்ற மன்னனுக்கு அரசர் என்று பொருளுண்டு. திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேன் என்னும் ஆன்றோர் அமுதமொழிக்கேற்ப, வேந்தனை தெய்வமாகப் பாவித்ததால், தெய்வத்திற்கே வேந்தனாக, தேவர் தேவனாக உயர்வானதொரு ஆக்கச் சொல்லைப் பயன்படுத்தி, தெய்வம் + வேந்தன் = தெய்வேந்திரன், தேவர் + வேந்தன் = தேவேந்திரன் என்று கூறி மகிழ்வர்.

ஒருவர் பேரின்பம் பெற்றதை, அதன் சிறப்பை, உணர்த்த இந்திரபோகம் பெற்றதாகக் கூறி இதனினும்

மேலான இன்பம் இல்லை என்பதாகக் கூறி மகிழ்வர்.

இந்திரன் என்பான் அரசர் குலத்தின் முதல்வன் என்பது ஒரு ஆராய்ச்சி. தேவர்கள் தலைவன் என்கின்றது புராணம். இதனால் தேவேந்திரன் என்ற பெயர் அவனுக்கு உண்டு. இந்திரனை முதல் தெய்வமாக, முழுமுதல் தெய்வமாக, கடவுளாகக் கொண்டு வழிபட்டுவாழும், ஒரு தனி மதத்தினர் பாரதத்தில் இருந்தனர் என்றும், அந்த மதத்திற்கு "ஐந்திரம்" என்று பெயர் என்றும் அந்த மதத்திற்கு உரிய "ஐந்திரவியாகரணம்" என்றதொரு நூல் இருந்ததாகவும் அதனை இந்திரனே செய்தான் என்றும் சிலப்பதிகாரத்தில் ஒரு செய்தியுண்டு என பேரறிஞர் சிலம்புச் செல்வர் முனைவர் ம.பொ.சிவஞான கிராமணி கூறுவார்கள். பூம்புகார் நகரில் 'இந்திர விழா' வெகுச்சிறப்பாகக் கொண்டாடப்பட்டது பற்றி சிலப்பதிகாரமும் மணிமேகலையும் விரிவாகக் கூறும்.

எனவே மருதநிலத்தில் வாழும் மக்கள் தம்மை இந்திரகுலம், இந்திரசாதி, இந்திரவம்சம், புரந்தரன் குலம், தேவேந்திர குலம், தெய்வேந்திர குலம் என்று கூறி மகிழ்கின்றனர்.

அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத் தாகும் மள்ளர் எனும் பெயர்

என்று திவாகர நிகண்டும்,

செருமலை வீரரும் திண்ணியோரும்
மருதநில மாக்களும் மள்ளர் என்ப

என்று பிங்கல நிகண்டும்

கூறியதை ஊருலகறிய வெளிப்படுத்தியவர் பொறியியல் நிபுணரும் வரலாற்று அறிஞருமான முனைவர் குருசாமி சித்தராவார். அவர் தம் அரிய உழைப்பால் விளைந்த தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்) என்ற நூல் ஆய்வாளர்களுக்கு விதை நெல்லைப் போன்றது. ஆண்ட குலம், வேந்தர் குலம் என்று பட்டி தொட்டி எல்லாம் பறை சாற்றினார். தேவேந்திர குல வேளாளர் ஆவணங்கள் எல்லாம், இந்திர குலம், இந்திர சாதி, தேவேந்திரர் குலம், தேவேதந்திர குல வேளாளர், பாண்ணாடி என்று குறிப்பிடுகின்றன என்று சான்றாதாரங்களைக் காட்டுவார்.

பள்ளர் குடும்பர் கடையர் படையாட்சி
மள்ளர் உழவராம் பண்ணாடி - வெள்ளாளர்

காலாடி மூப்பர் மருதநில மக்களெல்லாம்
தேவேந் திரநற் குலத்தார்

என்று மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் பிறங்கடைகள் பாமொழியில் பட்டியலிட்டுக் காட்டுவார்கள். இத்தகைய மேன்மைக்கும் உயர்வுக்கும் உருவான சொற்கள் இந்திர சாதி, இந்திர குலம், இந்திர வம்சமாகும். மருதநிலம் என்பது ஆக்கத்திற்கும், நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்கும் உறைவிடமாகத் திகழ்கின்ற இடமாகும். அரசர்கள் மருதநிலத்தைப் பிடிப்பதற்கும், அழிவுண்டாவதற்கும், போரிட்டு அழிவையும் ஆண்டான் - அடிமை என்ற நிலையையும் ஏற்படுத்தும் இடமும் இதுவேயாகும்.

## 7. உழவர் - உழத்தியர்

## 8. ஊரன்

## 9. ஒண்டிப்புலி

ஒண்டிப்பிரியர், ஒண்டிப்பிலியர், ஒண்டிபுலியார், நியமி மரபில் வந்த ஒளிமன் என்னும் அரசனின் மரபினர். ஒளிமன் அறிவிலும் புகழிலும் சிறந்தவன். இவன் ஒளியூர், ஒளிமதி, ஒளிமங்களம், ஒளிக்குடி, ஒளிக்கடை (உள்ளிக்கோட்டை) என்னும் ஊர்களை உண்டாக்கியவன் எனவும் சேர நாட்டில் தற்போது கோட்டாறு, திருவாங்கூர் பகுதிகளில் உள்ள நாடாகும் என 'சூரியகுல கள்ளர் சரித்திரம்' எழுதிய சுவாமி நாத மாதவராயர் கூறுவார். முன்னாள் இந்திய பாராளுமன்ற உறுப்பினர் 'தொண்டு' ஆசிரியர் வீ ராசாமி அவர்கள் இந்நூலாசிரியரிடம் கூறியதாவது.

திருச்சிராப்பள்ளியில் தேவேந்திர குல மக்களில் 'ஒண்டிப்புலி' என ஒரு வகையினர் உள்ளனர். அவர்கள் ஊர்தோறும் சென்று தெருக்கூத்து, ஊர்க்கூத்து வேசங்கட்டி, நடத்திக் காட்டுவார்கள். விவசாயிகளிடம் களத்து மேட்டிற்குச் சென்று பரிசுகள் பெறுகிறார்கள். அவர்கள் மிக அருகிய தொகையினர். இவர்களைப் போலவே கூத்தாடி மள்ளர்களும் என்பதை விரிவாக கூத்தாடி மள்ளர் என்ற பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளது.

## 10. ஒளிய மள்ளர்

கடியலூர் உருத்திரங் கண்ணனார், பத்துப்பாட்டு என்ற சங்க நூலில் ஒன்றான பட்டினப்பாலையிலே, பாட்டுடைத்தலைவன் சோழன் கரிகாற்பெருவளத்தான் ஆற்றலை விவரிக்கும் இடத்தில்

'பல் ஒளியர் பணிவு ஒடுங்கத்
தொல் அருவாளர் தொழில் கேட்ப
வடவர் வாட குடவர் கூம்பத்
தென்னவன் திறல் கெட........

பட்டினப்பாலை, வரி-270

அவன் சீறினான் என்று கூறுகிறார். இதிலிருந்து அவன் காலத்திலே ஒளியர் பலர் ஆங்காங்கே அரசு புரிந்து வந்தனர் என்பது பெறப்படும். ஒளியர் என்பவர்கள் நாகர்கள் மாமல்ல புரத்தில் கிடைத்த கல்வெட்டில் - நிலம் அளித்த - சாசனத்தில் ஒப்பமிட்டவர் ஒளிநாகன், மாதையன், அழகிய சோழன், மூவர்நாட்டு மூவேந்த வேளான் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மள்ளர் என்போரை நாகர் குடியினராகவும் கொள்ளலாம். நாகநாட்டு மள்ளர். நாகமழித்த மள்ளர். பாம்பாட்டி மள்ளர், பாப்பு மள்ளர் என்ற குடிவழியினர் என்பதையும் பழனி செப்புப் பட்டயம் கூறுவதையும் ஒப்பீடு செய்து பார்க்கவேண்டும். "பள்ளன் கட்டிய கோயில் செப்பேடுகள்" 1-32 பக்கம் உள்ள கட்டுரைத் தொகுதி - பல்லவர் செப்பேடு முப்பது என பெரிய தொகுதியை பார்த்துத் தெரிந்துகொள்க!

மலைய மலையில் ஒளியர் குடியைச் சார்ந்தவர் அகத்தியர். அவர் தமிழில் வல்லுநராக இருந்தார். அகத்தியர் தென்னாடு போந்ததற்குக் காரணம் அந்த அகத்தியர் ஒளிநாட்டு வேளாளர் பரம்பரையைச் சார்ந்தவர் என்பதாகும். ஒளிநாட்டு வேளாளர் என்போர் வேந்தர் குல வேளாளர் என்பது ந.சி. கந்தையா பிள்ளை கருத்தாகும்.

**11. கடம்பர்**

**12. கணக்கன்**

**13. கடையர் - கடைஞர்**

**14. கடைசியர்**

**15. களமர்**

**16. கருங்களமர் - வெண்களமர்**

**17. காலாடி**

**18. குடும்பன் - குடும்பனார் - தேவேந்திரக் குடும்பனார் - குடும்பமார் - குடும்பர்**

கூ என்றால் உலகம். குகுரம் என்றால் ஒரு தேசம்.

குடி என்றால் குலம், கோத்திரம், குடும்பம் என்றும், குடியானவன் என்றால் மண்ணின் மைந்தன் என்றும் வேளாண் தொழில் செய்பவன் என்றும் மேட்டுமைத் தன்மை கொண்டவன் எனப்பல பொருள்தரும். குடியிருக்கும் ஊர், மருத நிலத்தூர், இல்வாழ்க்கை என்றும், குடிப்பிறப்பு, குடிமக்கள், குடியாட்சி, குடியிறை என பொருள் விரிவடையும். குடும்பு என்பது ஒரு கிராமம், ஒரூர், ஒருவட்டம், ஒரு டிவிசன் என்று பொருள் காணலாம். குடும்பர் அல்லது குடும்பன் என்றால் அகரமுதலியில் பள்ளர் தலைவர். ஊர்த்தலைவர் என்று பொருள் தரும். ஊர் மக்களால் தெரிவு செய்யப்பட்ட ஊர்மன்றம், நகரமன்றத்தின் தலைவர் அல்லது நகர மன்ற உறுப்பினர் (கவுன்சிலர்) என்ற பொருளில் அன்று குடும்பன் என்பது ஒரு பதவிப் பெயராக இருந்து, நாளடைவில் சாதிப் பெயராக மாற்றம் பெற்ற சொல்ஆயிற்று.

இரா. தேவஆசிர்வாதம் கூறுவது : குடும்பன் என்ற குலப்பட்டம் பள்ளுநூல்கள் தோன்றிய பின்னரே பெரு வழக்கில் வந்ததாகத் தெரிகிறது. அதற்கு முன்பு கரிவலம் வந்த நல்லூர், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆலையங்களில் திருமலைநாயக்க மன்னனது ஆணையால் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்களில் தேவேந்திரக் குடும்பன் என்று கண்டுள்ளது என்றும், குடும்பன் என்பது ஒரு குடும்பத்தின் தலைவனாவான். ஒரு கணவன், மனைவி அவரது குழந்தைகள் எல்லோரும் சேர்ந்து கூடிவாழ்வது ஒரு குடும்பம் எனப்படும். குடும்பம் தனி உடமை ஏற்பட்ட பின் உருவானதாகும். தகப்பனே குடும்பத்தின் தலைவனாவான். அவனுக்குப்பின் அவனது ஆண் சந்ததியினரே அவனது உடமைகளுக்கு உரியவராவார். மக்களிடையே நாகரிகம் ஏற்பட்ட பின்னரே இம்மாதிரி குடும்ப முறை ஆட்சி மக்களிடையே தோற்றம் பெற்றது.

தமிழகத்தில் முதன் முதல் திராவிடராகிய மருத நிலமக்களிடையே தான் குடும்ப முறை ஏற்பட்டது எனலாம். இந்தக் குடும்பன் என்ற பட்டம் கரிவலம் வந்த நல்லூர், ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டுள்ள செய்தி பற்றியும், பள்ளுநூல்கள் தோன்றியபின் அது பெருவழக்கில் வந்தது பற்றியும் மேலேகூறியிருப்பது நினைவிலிருக்கத் தக்கது.

தமிழ் அகராதியில் குடும்பன் என்பதற்குப் பொதுவாய் பள்ளரின் தலைவன் என்று பொருள் கண்டுள்ளனர். சென்னை பல்கலைக்கழக அகராதியில் (Madras Lexicon) குடும்பன், குடும்பர் என்பதற்கு நிலம் அளப்பவன் என்று

பொருள் கண்டுள்ளது. கி.பி. 9, 10 நூற்றாண்டுகளில் தோன்றிய திவாகரம், பிங்கல நிகண்டுகளில் குடும்பன் என்ற சொல் இடம் பெறக்காணோம். ஆனால் அதற்குப்பதில் 'குடும்பினி' என்ற சொல் இடம் பெற்றுள்ளது. குடும்பினி என்பதற்கு அந்நிகண்டுகளில் குடும்பத் தலைவி என்று பொருள் கண்டுள்ளது. இடைக் காலச் சோழ மன்னர் கல்வெட்டுக்களில், 'குடும்பிகள்' என்ற சொல் இடம் பெற்றுள்ளது. ஆகக் குடும்பியின் ஆண்பால் பெயர் குடும்பன் என வழங்கியதாக அறிகிறோம். கி.பி. 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய சூடாமணி நிகண்டில் 'குடும்பன்' என்பதற்கு 'தேவி' என்று பொருள் கண்டுள்ளார். 'தேவி' என்பது பெண் தெய்வத்தைக் குறிப்பதுடன், அது மன்னனின் பட்டத்து ராணியையும் குறிப்பதாயுள்ளது. மன்னரின் பட்டத்து ராணி கோப்பெருந்தேவி என வழங்கியது என்பது நாம் அறிந்ததுவே. குடும்பன் என்ற குலப்பட்டம் வழக்கில் உள்ள பகுதிகளில் உள்ள ஒவ்வொரு ஊர்த்தலைவரையும், ஊர்க்குடும்பன் என்று வழங்குவர். ஊர்க்குடும்பன் எனில் ஊரில் குடும்பு பார்க்கிறவர், ஊர்ச்சபை, ஊர்மன்றம் இவற்றிற்குக் தலைவராக இருப்பவர் என்று பொருள்படும். சங்க இலக்கியங்களில் வரும் ஊரன், மகிழ்நன், கிழவன் என்பவை அன்றிருந்த ஊர்த்தலைவர்களைச் சுட்டுவதாயுள்ளது. இத்தலைவர்கள், ஊர்க்காவலர், புரவலர் எனவும் வழங்கினர் என்பதும் நாம் அறிந்ததே.

தொல்பொருள் ஆய்வியல் அறிஞர் இரா. பூங்குன்றனார் கூறுவார். 'குடும்பு, கரை, கட்டளை ஆகிய சொற்கள் நிலத்தோடு தொடர்புடைய சொற்கள். இச்சொற்கள் ஒரு பொருளைக் குறிக்கின்றன. பெரும்பாலும் இச்சொற்கள் சோழர் காலத்திற்கு முன்பே வழக்கில் இருந்திருக்க வேண்டும். வெவ்வேறு வட்டாரங்களில் அவை வழங்கப்பட்டிருக்கலாம். சோழர்கள் பழங்குடிகளையும், குலங்களையும் காட்டு வாழ்க்கையிலிருந்து நாட்டு வாழ்க்கைக்குக் கொண்டு வந்தார்கள். காட்டுப் பழங்குடிகள் அது நாள்வரை பண்படா வேளாண்மையைச் செய்து வந்தனர். அந்த வேளாண்மையைச் செய்வதற்குரிய நிலத்தினை ஆண்டுதோறும் "கரையீடு" செய்ததன் மூலம் பிரித்துப் பயிர் செய்திருத்தல் வேண்டும். 'கரை' என்ற சொல் பிற்காலக் கல்வெட்டுக்களில் பங்கு, நில அளவு, ஓலை, உரிமை போன்ற பொருளில் வழங்கியுள்ளது. பேராசிரியர் சுப்பராயலு அவர்கள் 'கரை' என்பது குடும்பு என்பதுடன் ஒப்பிடத்தக்கது என்று கூறுவார். மேலும் அவர் குடும்பு என்பது குலத்திற்குச் சம்மானது என்பதை ஒப்புக் கொண்டு

அச்சொல்லை ஆங்கிலத்தில் 'Household' என்று பெயர்த்தல் பொருத்தமுடையது என்று கூறுவார். ஈரோடு மாவட்டம் வெள்ளோட்டுக்கு அருகில் தேவேந்திர குல வேளாளர் வசிக்கின்ற தச்சங்கரைவழி என்ற ஓர் ஊர் உள்ளது. கே.வி. சுப்பிரமணிய ஐயர் குடும்பு உறுப்பினர்கள் ரத்த உறவுள்ளவர்கள் அல்லது உறவினர்கள் என்பார். மேலும் குடும்பு என்பது தரம்பிரித்த நிலங்களின் தொகுப்பு' என்று கருதப்படுகின்றது. ஆகையால் நிலஉரிமை குடும்புடன் இணைந்துள்ளது எனலாம். மேலும் குடும்புடன் ஒப்பிடத்தக்க கரையும் அந்தப் பொருளில் ஆளப் பட்டிருக்கவேண்டும். குடும்பு நிலத்திலிருந்து குறிப்பிட்ட அளவு (2 பாடகம்) நிலத்தைக் கூறுவதைக் காணலாம். அது போலவே கரை நிலத்திலிருந்தும் குறிப்பிட்ட நிலம் கொடையாக அளிக்கப்படுவதை மற்றொரு கல்வெட்டுக் கூறும். திருப்பாலத்துறைக் கல்வெட்டு 'ஆண்டுதோறும் கரைக்கூறு இட்டுவருகையாலே' என்றும் கூறிவிட்டுக் கரையோலை எடுத்த படியே' என்றும் கூறுவதைக் காணலாம். கி.பி. 1239ஆம் ஆண்டினைச் சேர்ந்த மன்னார்க்குடிக் கல்வெட்டு, ஒவ்வொரு ஆண்டும் குடும்பு மாற்றி அளிக்கப் பெறுகின்றது என்று கூறுகிறது. ஆகையால், 'கரையீடு', குடும்பு முறை, ஆகிய இரண்டும் ஆண்டுதோறும் நிலப்பங்கீடு செய்தமையைக் குறிக்கின்றது (பராந்தகன் காலத்தில் குடும்பத்திற்குச் சொந்தமான நிலம் 'குடும்பு' என்று அழைக்கப்பட்டிருக்கலாம் - உடையான் குடி கல்வெட்டுப் பார்க்க) விளக்கம் பெறலாம்.

கல்வெட்டுக்களில் செப்புப் பட்டயங்களில் மக்களின் அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகள் பேசப்படுகின்றன. நிலவிலைப் பிராமாணம், நீதிமன்ற முடிவுகள், பஞ்சங்கள், பண்பாட்டுச் சிதைவுகள், குழுவினச் சண்டைகள், மணவினைகள், இறப்புகள், குழப்பங்கள், வரி - எதிர்ப்புகள் - ஏன் கோயிலுக்கே தீவைத்து எரியூட்டும் போராட்டங்கள் போன்ற சமூக இயக்கங்கள், முரண்தர்க்கப் பொருள் முதல்வாதங்கள், இடைக்கால இலக்கியங்களிலும், கல்வெட்டுக்களிலும் சுட்டப்படுகின்றன. கல்வெட்டுக்கள் மக்கள் வாழ்க்கையுடன் இரண்டறக் கலந்து நின்றமையால் அவற்றில் அக்கால மக்கள் வழக்கே பயின்று வந்தது. என்று கூறும் அறிஞர் ஆர். பூங்குன்றன் மேலும் 'கரை' என்ற சொல் வடகரை, தென்கரை, மேல்கரை, கீழ்கரை போன்ற சொற்களில் பயிலும் போது, அது, ஆற்றின் கரையோ, வாய்க்காலின் கரையோ, காடுகரைகளையோ, கங்கு கரைகளையோ குறித்து வந்தது. ஆனால் இச்சொல்

வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு பொருளில் ஆளப்படுகிறது. ஊர்மன்றம், ஊர்ச்சபை, வாரியங்களுக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறையினைக் குறிப்பிடும் உத்திரமேரூர்க் கல்வெட்டில் "கரைபறிச்சுக் கொள்வாராகவும் என்று கூறப்படுகிறது. இதற்குப் பொருள் கூறிய கே.வி. சுப்பிரமணிய அய்யர் அதிகார எல்லையை வரையறுத்துக் கொள்வாராக என்று கூறுவார். மற்றொரு உத்திர மேரூர்க் கல்வெட்டில் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்துக் "குடவோலை பறிச்சுக் கொண்டு" என்று கூறுவது "கரைபறிச்சு என்பதுடன் ஒப்பிடத்தக்கதாய் உள்ளது. குடவோலை எடுப்பதை நீலகண்ட சாஸ்திரியார் திருவுளச்சீட்டு (LOT) முறையினால் செய்தனர் என்று கருதுகிறார். அண்மையில் 'கரை'யைப் பற்றிக்கூறும் பலகல்வெட்டுக்கள் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் இச்சொல் பலமுறை கையாளப் படுகின்றது. 'கரைபறிச்சு, என்றும், கரையோலை கரையுடைய என்றும் கரைபற்றிச்சு கையோலை எடுத்து என்றும் பயின்று வரக் காணலாம்.

கரையீடு பற்றி ஏ. அப்பாதுரை அவர்கள் முதன்முதலில் விரிவாக ஆய்வு செய்தவர். திருப்பாலத்துறைக் கல்வெட்டில் கூறப்படும். கரையோலை பற்றிய செய்திகளுடன் 'ஸ்டோக்' என்பார் கரையீடு பற்றி எழுதிய செய்திகளை ஒப்பிட்டு அவர் ஆய்வு செய்தார். அவர்கருத்து ஆண்டாண்டுதோறும் நிலப்பிரிவினை நடைபெற்றது. அந்தச் சூழ்நிலையில் நிலம் பொதுவில் வைத்து அனுபவிக்கப் பெற்றது. திருப்பாலத்துறை கல்வெட்டினைப் பற்றிக் கல்வெட்டாய்வாளர்களும் வியந்து கூறியுள்ளனர். கரையோலை எடுப்பதை பண்டை நிலப்பிரிவினை முறை என்று வரலாற்றில் புதுவெள்ளம் என்ற கட்டுரையில் விரிவாக விளக்குகிறார்.

சில பகுதிகளில் தேவேந்திர குல வேளாளர்களை அதன் உட்கிளைகளாகிய குடும்பர்களை 'கணக்கன்' என்றும் அளவன் என்றும் கூறுவதாக அறிகிறோம். பெரு வழக்காக இல்லை என்றாலும் கணக்கன், அளவன் என்ற சொற்களைப் பார்க்கும்போது ஊர்ச்சபை நிர்வாகவசதிக்காக பலவாரியங்களாகப் பிரித்து, ஆட்சிச் சக்கரத்தை முறைப்படுத்தி வைத்தார்கள். அந்தவகையில் நிலத்தை அளந்து பிரித்திடுவோன் அளவனாகவும், கணக்கிடுவோன் கணக்கனாகவும், குடும்பைக் கட்டிக் காப்பவன் குடும்பனாகவும் ஊரைக்கட்டிக் காப்பவன் ஊராளியாகவும், ஊரை ஆட்சி செய்பவன் ஊரனாகவும், நாட்டை ஆட்சி செய்பவன் நாட்டாரராகவும், கரையை ஆட்சி செய்பவர் -

கரையாளராகவும் பதவிப் பெயர்கள் சூட்டப் பெற்றிருந்தார்கள். அதுவே இன்று சாதிப் பெயர்களாக நாட்டில் வழங்கக் காண்கின்றோம்.

## 19. கூத்தாடி - கூத்தன்

மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் குலங்களில் மக்கட் தொகையில் கூத்தாடி மள்ளர் எண்ணிக்கையில் குறைவு, ஆனால் முத்தமிழ் வளர்ப்பதில் முந்தி நிற்பார் கூத்தாடி. இயல் இசைக்கூத்து தமிழனின் சொத்து. எண்ணம், சொல், செயல் என இம்மூன்றினை முறைப்படுத்த தெருவில், ஊரில், நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளை வெளிப்படுத்தும் வெளிப்பாடே நாடகமாம். கூத்தினைத்தான் நாடகம் என்று கூறுவர்.

நாடகங்கள் நடிப்பதற்கென்றும் கூத்தினை ஆடுவதற்கென்றும் தனித்த சாதியார் இருந்தனர். "கூத்தர் - பொருநர் என்பவர் இவ்வகையினைச் சார்ந்தவராவார்" என இளவழகனார் கூறுவார். கூத்தராற்றுப்படையும் பெருநராற்றுப்படையும் சங்க நூல் தொகுதியில் காணலாம். கூத்தராற்றுப்படை என்பதே மலைபடுகடாம் என்ற நூலாகும்.

பிறப்புமுதல் இறப்பு வரை, ஏர்பூட்டல் முதல் கட்டுத்தறிக்கு மாட்டுடன் வரும் வரை அனைத்து நிலைகளிலும் - பாட்டுக்கட்டிப் பாட்டுப்பாடும் திறம், இயற்கையாய் அமைந்த கொடையாகப் பெற்றவர். பண்ணுக்கேற்ப விறல்பட ஆடிப்பாடி மகிழ்பவர் கூத்தர். வேளாண் தொழிலாகிய உழவுத் தொழிலால் கிடைத்த பொருள்களை வீடு சேர்த்த பின் முற்றாக ஓய்வு கொள்வர். நுண்கலைகளில் தேர்ச்சி கொள்வர். ஆடல் பாடல்களில் நாட்டம் கொள்வர். கோயில் கட்டல், குளம் தோண்டல் என்ற காரியங்களில் ஈடுபடுவர்.

அதல்லாமல் மருத்துவநூல், மந்திர நூல், மணிநூல், பொறியளவை நூல், காவடநூல், காவல்நூல், கனாநூல், வாகடகநூல், குதிரைநூல், பாம்புநூல், வானநூல், நிமித்த நூல், துடிநூல், கைவரிநூல், சமயல் நூல், சமயநூல், யானைநூல், மனவொருமை நூல், கிணற்று நூல், வேளாண் நூல், அரசியல் நூல், ஆயுதப்பயிற்று நூல், பொருளியல் நூல் எனப்பல்வேறு நூல் அறிவை தக்காரைக் கொண்டு, கற்கவும், கற்பிக்கவும் பயன்படுத்துவர். கூத்த மள்ளர் என்று கூறப்படுவோர் ஒரே இடத்தில் நில்லாமல் ஊரூராய்ச் சுற்றி உலக அறிவு பெற்று வருவர். வயல் அறுவடை செய்தபின் பண்ணையை அடைந்து, பண்ணாடியைக் கண்டு, தான்கண்ட செய்திகளைக் கூறி ஆடிப்பாடிக் கூத்தாடுவர்.

பண்ணுக்கேற்ப ஆடுவர். பண்ணாடியைப் புகழ்ந்து பாடுவர், மல்லாண்ட திண்தோள் மள்ளர்கள் நெல்லளந்து போடுவர். உணவு உண்டபின் ஆடுவோமே ப் பள்ளுப்- பாடுவோமே என ஆனந்தக்களி பொங்கப் பாடுவர். ஏடேறா இலக்கியமாக, வாய்மொழிப் பாடல்களைப் பாடி மக்களை மகிழ்விப்பர். கூத்தும் கொண்டாட்டமும் நிகழும். வெற்றிப் பேச்சும் வேடிக்கைப் பேச்சும் பேசி உழக்குடி மக்கள் உளமகிழ்ந்து போவர். உழவர் பாட்டுக்குப் பின்னரே 96 வகைப் பிரபந்தம் வடுக நாயக்கர் காலத்தில் உருவாக்கப்பட்டது. உழவர் புகழ்பாடும் ஏர்மங்களம், உழத்திப்பாட்டு முதலியவை மள்ளர்களை ஏசும் பள்ளுப்பாட்டு, பள்ளேசல், பள்ளு நாடகமாகப் போட்டுப் பிற்காலத்தே கலாச்சாரச் சீரழிவுக்குக் கால் கோள் போடப்பட்டது. கொங்கு நாட்டில் ஈரோடு, புன்செய்ப் புளியம்பட்டி, சத்தியமங்கலம், கோபி, கணபதிபாளையம் போன்ற ஊர்களில் கூத்தாடிக் குடும்பர்கள் தங்கினர். சோழ நாட்டில் திருச்சி மாவட்டத்தில் ஒண்டிப்புலி என்ற பெயர் தாங்கிய மக்களும் இக்கூத்தாடிகள் போன்ற கலைவாணர்களாவார்கள். நாடகமும் கூத்தும் ஆடிப் பிழைப்பு நடத்துவதால் சமுதாயத்தில் தற்காலத்தில் சற்று மதிப்புக் குறைந்து காணக்கிடக்கிறார்கள்.

கோயில்லொழுகு என்ற நூலில் மள்ளரின் பரணிப் பாட்டில் மனத்தைப் பறிகொடுத்த பக்தருக்கு திருவரங்கநாதர் "வரந்தரும் பெருமாள் அரையர்" எனப் பட்டம் கொடுத்து கௌரவிக்கிறார். திருவூரர் என்ற விழா நடத்தி அப்பாட்டையும் கூத்தையும் (பள்ளுப்பாட்டு) கண்டு கேட்டு இன்புறுகிறார். திருச்சி மாவட்டம் ஸ்ரீரங்கத்தில் அரையர் சேவை என்ற ஒரு விழா ஆண்டுதோறும் நடைபெற்று வருகிறது. முத்துராசா அல்லது முத்தரையர் என்ற முத்திரிய ஊராளிக் கவுண்டர்கள் வேசங்கட்டி, ஆடிப்பாடி மகிழ்வர். ஆனால் இப்பொழுதெல்லாம் முத்தரையர் என்ற மக்களை ஆடவிடாது பார்ப்பனப் பூசாரிகளே முத்தரையர் வேசங்கட்டி ஆடுகிறார்கள். ஆனால் அப்படி ஆடுகின்ற ஆட்டம் பள்ளர்கள் என்ற தேவேந்திர குல வேளாளர்கள் பள்ளுப் பாட்டுப்பாடி ஆடியதாகத் தினமணி நாளிதழ் கூறுகிறது. (கோ. கேசவன்).

இதே போலத்தான் கோவை மேலைச்சிதம்பரம் என்னும் காஞ்சிவாய்ப் பேரூரில் குடிகொண்டுள்ள பட்டியப்ப மள்ளர் என்ற பட்டீஸ்வரனையும் பச்சைநாயகியையும் சுந்தரமூர்த்தி நாயனார் தேடிவருகிறார், தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் திருமடத்திற்கும் மேல்கை முன்புறம், பேரூர் பட்டியப்பன் ஆலயத்திற்குக் கீழேயும், யானைகட்டும்

ஆலமரத்தை முன்னதாகக் கொண்ட "இந்திரபுரி, என்ற மள்ளரின மக்கள் வாழ்கின்ற வீடுகளைப் பார்த்து, ஓங்கி உயர்ந்து நிற்கின்ற மாடமாளிகைகளையும், கூட கோபுரங்களையும் கண்டு, இதுதானே பட்டீஸ்வரன் கோயில் என்று கேட்க, இது பட்டீசுவரன் கோயிலல்ல, மள்ளீசுவரன் குடியிருப்பு - இந்திரபுரி என்று சிறுவர்கள் கூறினார்களாம்.

சினமடைந்த சுந்தரமூர்த்தி நாயனார், இறைவன் கோயிலை விட மனிதன் - வேந்தன் கோயில் பெரிதாக இருக்கலாமா எனச் சினந்து, இறைவன் கோயிலுக்கு மேலிருக்கும் உயரமான வீடெல்லாம் சாம்பல் மேடாகப் போகக் கடவதென்று சபித்துப் போனார் என்று கர்ணபரம்பரைக் கதை கூறுகிறது. இந்நிகழ்வால் ஏற்பட்ட கோபத்தால் திருக்கோயிலைத் தேடி வந்த சுந்தரருக்கு இறைவன் இல்லாது, சுந்தரமூர்த்தி காணாமல் இருக்க மள்ளர் மள்ளியாக உடை மாற்றி "எட்டுக்கோள் பத்து" என்ற வயலில் நாற்றுநடவு செய்து கொண்டிருந்தனர். இந்தக் கதைப்படி நாற்று நடவு, சேத்துக் கால் செல்வர்களாகிய வெள்ளையானை, வெள்ளைக் குடை பிடித்து வெண் சாமரம் வீசும் நிலையில் வாழ்ந்த தேவேந்திர குல வேளாளர் நடவு செய்யும் திருவிழா, வெள்ளியால் செய்யப்பட்ட நாற்றினையும், மண்வெட்டியினையும் கொண்டு வெட்டி நடவு செய்வதாகப் பாவனையால் ஆனித்திரு மஞ்சன நாற்று நடவு உற்சவம் ஆண்டு தோறும் பேரூரில் நடந்து வருகிறது. பேரூர்ப் புராணப் பள்ளுப் படலத்தில் சிவன் மள்ளராகவும், பார்வதி மள்ளத்தியாகவும் உருவெடுத்து வயலில் நெல் நடவு செய்தும், விநாயகரும் முருகனும் மள்ளச்சிறார்களாக வயலில் நாற்று முடி எடுத்துப் போட்டு சிறப்புச் செய்வதும் கூறப்பட்டுள்ளது.

கோவை என்னும் கொங்குச் சீமை நகரில் நான்கு தேவேந்திர குல வேளாளர் சமூக அமைப்புகள் உள்ளன. ஒவ்வொரு அமைப்பிற்கும் ஒவ்வொரு பட்டக்காரர் உண்டு. முறையே, தேவேந்திர குல சோழிய வேளாளர், ப.கு. நடராசப் பட்டக்கரார், 2. தேவேந்திர குல கொங்கு வேளாளர், திரு. கிருஷ்ணசாமிப் பட்டக்காரர், 3. தேவேந்திர குல பாண்டிய வேளாளர், திரு. மாசிலாமணிப் பட்டக்காரர், 4. தேவேந்திர குல கடைய வேளாளர், திரு. இராதாகிருஷ்ண பட்டக்காரர். தேவேந்திர குல வேளாளர் சமூக மக்கள் அத்துணைபேருக்கும் நாற்று நடவு உற்சவம் அல்லது நாற்று வெள்ளி, இந்திர விழா என்று அழைப்பு அச்சடிக்கப்படும். தேவேந்திர குல வேளாளர் சமூக மடத்திற்கு கோயிலார் பட்டிமள்ளர் எனப்படுகிற சிவன் யானையுடன் வந்து

பண்ணாடி -- பட்டக்காரர்களுக்குப் பட்டங்கட்டி மாலை மரியாதை செய்து சந்தன புஸ்பங்கள் கொடுத்து 150 ரூபாய் காணிக்கை செலுத்துவர். பட்டிப் பெருமானுக்கு மடத்தில் பூசை நடக்கும். மடத்தில் ஏர்பூட்டி எட்டுக் கோள்பத்திற்குச் சென்று சேறுகலக்கி நாற்றுப்பரவி தேவேந்திரர் புகழ்பாடி குரவை இட்டு நாற்று நடுவர். மங்கல வாத்தியம் முழங்கும். இன்று வரை யானை வந்து அழைத்துச் செல்லும் மரபுள்ளது. மள்ளரினப் பண்ணாடிமார்களை - நாதசுரம், தவுள் வாத்திய இசையுடன் அவர்தம் மெய்க்கீர்த்தியை ஒருவர்பாட மள்ளத்தியர் குலவையிட்டு பின்செல்வர். பேரூர் தேவேந்திர மடத்தின் கட்டுமானத்தில் மீன் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது.

## 20. கூத்தர் - கூத்தனார்

## 21. தொண்டைமான்

## 22 & 23. தேவேந்திரர் - தெய்வேந்திரர் மற்றும் தேவேந்திர குலத்தார்

தெய்வத் தன்மை கொண்ட தேவர்களுக்கு எல்லாம் தலைவராக, மூத்தவராக, தேவேந்திரர் இருந்ததைப் போல், இந்திர சாதிக்கு தேவர் + இந்திரர் = தேவேந்திரராகி தேவ இந்திரராகிய வேந்தனை முதல்வராகத் தொல்காப்பியம் கூறும். தேவேந்திர குலத்தார் என்பவர் அவர் வழி வந்தவர். பல தொழில்களையும், பலகலைகளையும் நன்கு கற்றவர்கள், மருதநிலத்தார் என்பவர் குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை என்கின்ற நான்கு நிலங்களிலும் வாழும் நில மக்கள், குடிமக்கள், தலை மக்கள் எனத் தேர்வு பெற்ற குடும்பு முறையை ஒழுங்குபடுத்தும் முது குடுமியாகவும் கோன் முறை அறிந்து குடிதழுவி கோல் ஓச்சும் வேந்தனாகவும் விளங்குவார்.

வேதகாலத்துத் தேவேந்திரர்களும் தமிழ் நிலத் தேவேந்திரர்களும், பிரித்தறிய முடியாத, பேதா பேதங்களைக் காணமுடியாமல் இரண்டறக் கலந்து விட்டார்கள்.

மறைமலை அடிகளார் என்றும் சுவாமி வேதாச்சலம் என்றும் அழைக்கப் பெற்ற பேரறிஞர் "வேளாளர் நாகரிகம்" என்ற நூலில் பக்கம் 58இல் கூறிய கருத்துக்களை எண்ணிப் பார்க்க வேண்டும். "ஆரியர்களின் இந்திரன் இடி, மழை, மின்னல் முதலியவற்றிற்குரிய தெய்வமாதலோடு, அவர் தம் பகைவரோடு போராடுங்கால் அவர்க்கு உதவி புரிந்து வெற்றியைத் தருபவனாகவும், சோமபானம், விலங்கின் இறைச்சி போன்றவற்றை நிறைய உட்கொண்டு அவர் வேண்டிய நலன்களை எல்லாம், அவர்க்கு விளைவிப்பனவாகவும் சொல்லப்படுகிறான். தமிழர்

வணங்கிய இந்திரனோ (வேந்தன்) வயலும் வயல் சார்ந்த இடமுமாகிய மருத நிலத்தில் உள்ள உழவர்களால் மழையின் பொருட்டு மட்டும் வேண்டி - வணங்கப்பட்ட மழைக் கடவுள் ஆவான்.

மழையின் பொருட்டாகவன்றி வேறெந்த நன்மைப்பேற்றின் பொருட்டாக வேனும் தமிழர்களால் அவன் வணங்கப்பட்டவன் அல்லன். இருக்கு வேதத்தில் உள்ள பாட்டுக்களில் மூன்றில் ஒரு கூறு இந்திரன் மேல் செய்யப்பட்டிருத்தல் போல, தமிழ் நூல்களில் எங்கும் ஒரு பாட்டேனும் இந்திரன் மேல் செய்யப்படவில்லை. தொல்காப்பியம் முதலான மிகப் பழைய தமிழ் நூல்களில் இந்திரன் என்னும் சொல்லே காணப்படவில்லை. மருதநிலத்து மக்களால் கொண்டாடப்பட்ட தெய்வம் வேந்தன் என்று சொல்லப்படுகிறது. தமிழர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் ஆரியர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் மழைக் கடவுள் ஆதல் பற்றிப் பிற்காலத்தவரால் அவ்விருவரும் ஒருவராகக் கொள்ளப்படுவராயினர். அவ்வாறு கொள்ளப்படினும் தமிழர்க்குரிய வேந்தனுக்கும் இருக்கு வேத ஆரியர்க்குரிய இந்திரனுக்கும் ஏதோர் இயைபும் இல்லை என்பது நன்கு விளங்கும்.

உற்று ஆராயுங்கால் தமிழர்க்குரிய வேந்தன் என்போன் தமிழர்க்குள் முதன் முதல் தலைவனாய் தோன்றி மழை பெய்யுங் காலமும் அம்மழையின் உதவியால் பயிர் செய்தற்கேற்ற வளவிய நிலமும், அந்நிலத்தைத் திருத்திச் செவ்வனே பயன் விளைவிக்கும் வகைகளும் நன்குணர்ந்து, உழவுத் தொழிலைக் கற்பித்து, தமிழ் மக்களை மேனிலைக்குக் கொண்டு வந்தவன் ஆதல் வேண்டும் என்பது புலப்படும். நன்றி செய்த முன்னோரை நினைந்து அவர்களைப் பரவுதல் (வழிபாடு செய்தல்) தமிழர்க்கு இயற்கையாதலால், அவர் கால் வழியில் வந்த மருத நிலத்து உழவர் முதல் வேந்தனை, அவனது ஆவியை வேண்டி வணங்குபவரானார்கள் என்ப" என்றார்.

பாரதியார் பல்கலைக்கழகத்தின் முதுநிலை விரிவுரையாளரும் தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றத்தின் செயலாளருமான முனைவர் தே.ஞானசேகரன் தமிழர் நில அடிப்படையில் நால்வகை நிலத்துத் தெய்வங்களை வணங்கினர். இந்நால்வகை நிலத்துத் தெய்வங்களும் அந்தந்த நிலத்து மக்களுக்குத் துணை செய்த வீரர்களின் தலைவராக இருக்கலாம் என்கிறார். சாமி சிதம்பரனார் தம்

பள்ளியின் புதல்வர்கள் நீலகங்கன், வச்சிரபாகன், கங்கை பரிபாலன், சம்புகுல வேந்தன், பரசுராமன் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர். மேலும் இந்த ஐவர் மரபில் வந்தோர் பார்ப்பள்ளி, துட்டப்பள்ளி, சிட்டப்பள்ளி, வன்னிப்பள்ளி, அரசப்பள்ளி என்றும் அவர்கள் அனைத்துத் தேசத்திலும் பரவி, பன்னாட்டார் என வழங்கலாயினர் என்றும் கூறுகிறார். பள்ளர் என்ற மள்ளர்கள் நாட்டார் என்ற பட்டந் தாங்கியவர்கள் நெல்லைச் சீமையில் வாழ்கிறார்கள். அக்குடி மக்கட் பிரிவினுள் பீடும் பெருமையும் பெற்ற ஒருகுடிக்குப் பெயர் அரச மள்ளர் என்பதாகும். டாக்டர் நாகசாமி கூற்றுப்படி பள்ளர்களின் பெண்பாற்பெயராகக் கொண்டு அன்னோர் கோயிலுக்கு நிவந்தம், தானம் செய்வதைக் கொண்டு பள்ளர்கள் ஆண்கள் மட்டுமல்ல பெண்களும் நிலச் சுவான்தாரர்களாக இருந்திருக்கின்றார்கள், தாங்களே தானம் செய்யும் உரிமையைப் பெற்றிருந்தனர் என்கிறார்.

இராசராச சோழனுடைய தமக்கையார் குந்தவை பிராட்டியாரும், வேறு அரசகுலப் பெண்களும் கோயில் கட்டி நிவந்தம் ஏற்படுத்தி தானதர்மங்கள் செய்ததையும் இங்கு நினைவில் கொள்ள வேண்டும். பள்ளரும் பள்ளியரும் ஒரேகுடியினராவர். அது ஆண்பாலா பெண்பாலா எனப் பிரிக்காது, பொதுப் பாலாகக் கொள்ளவேண்டும். நாட்டார் என்ற சொல் பள்ளிக்கும், பள்ளருக்கும், பொதுவான சொல்லாக விளக்கம் பெறுகிறது. இரு இனமும் போர்க்குறிக் காயமே புகழின் காயம் என்றும் விழுப்புண்படாத நாள் வீணாளாகும் என்று கருதும் நெஞ்சுரம் கொண்டவர்கள். நெல்லைச் சீமை சங்கரன் கோயில் மானூர்ப் பகுதிகளில் வாழும் மக்கள் வீரநாட்டார் என்றும் சாண நாட்டார் என்றும் இன்று வரை அரசு ஆவணங்களிலும் நாட்டார் வழக்கிலும் வழங்கப்பட்டு வாழ்ந்து வருகிறார்கள்.

இவர்களை அரச மள்ளர் என்றும் பந்தமுட்டி மள்ளர் என்றும் சாலுங் கரகப் பானைகளையும் பந்தல் முட்டும் அளவுக்கு திருமணச் சடங்கில் உயரமாகவும் அழகாகவும் வைக்கும் உரிமை பெற்றவர்கள் ஆகையால் பந்தமுட்டி மள்ளர் என்றும் அழைக்கப்படுவார்கள்.

"மள்ளர் குலத்தைச் சிலர் தாழ்ந்த குலத்தோர் எனக் கருதுகின்றனர். இது வரலாற்றுக்குப் புறம்பான கருத்து. பள்ளர் சமுதாயத்தினர் உயர்நிலை வகித்திருந்தனர் என்று கல்வெட்டு வாயிலாக அறியலாம். குறிப்பாகச்சோழ மன்னர்கள் காலத்தில் பல இடங்களில் அவர்கள் குறுநிலத் தலைவர்களாகத் திகழ்ந்துள்ளனர். காஞ்சிபுரத்திற்கு அருகில்

சீயமங்கலம் சிவாலயத்தில் குலோத்துங்க சோழன் காலத்துக் கல்வெட்டு உள்ளது. அதில் ஒரு செய்தி உள்ளது. "சம்பு புரத்தில் இருந்த பள்ளிச் செல்வன் என்பவன் மற்றொரு பள்ளி வேணாட்டரையன் என்பவனோடு வேட்டைக்குப் போனதைக் குறிக்கிறது'. தவறுதலாக அம்பு எய்து இறந்தவனுக்காக வழக்கு நடக்கிறது. அதற்கு ஊர்ச் சபையார் நாட்டார் சபையார் அளித்த தீர்ப்பை கல்வெட்டாக வடிக்கப்பட்டது பற்றி கல்வெட்டு அகழ்வாய்வுத் துறை முன்னாள் இயக்குநர் டாக்டர் நாகசாமி கூறுவதாவது "சம்புபுரத்திலிருக்கும் பள்ளிச்செல்வன் இவ்வூரிலிருக்கும் பள்ளி வேணாட்டரையன் கைப்பிழையால் எய்து செத்தமையில் நாட்டவரும் சம்புவரையரும் கூடி இவன் வேணாட்டரையனுக்காகச் சாக வேண்டாம், கைப்பிழை புகுந்தது' என்று தீர்ப்புக் கூறினர். அதைக் குறிக்க வந்த கல்வெட்டு இரண்டு செய்திகளைக் கூறுவதாகக் கூறுகிறார். (தினமலர், உயர்ந்தோர் பள்ளர் 23.10.1998).

பள்ளி ஒருவனுக்கு 'அரையன்' என்ற பட்டம் இருந்தது. அதை வேணாட்டரையன் என்பதால் அறியலாம். பல கல்வெட்டுக்கள் இதுபோல் 'அரையன்' பட்டம் பெற்ற பள்ளிகளைக் குறிக்கின்றன என்று அறிஞர் நாகசாமி கூறுகிறார். அரையன் என்பது அரசன் என்பதின் போலியாகும். அரசன் பள்ளி என்பவரே அரசப்பள்ளர் என்போராவார். மருத நிலத்தின் தெய்வம் வேந்தன் - "வேந்தன் மேய தீம்புனலுலகம்" என்பதும் ஒருபொருள் குறித்த இரண்டு சொற்களாம்.

கோவை, தொண்டாமுத்தூர், வேடப்பட்டிப் பகுதியில் வன்னியம்பாளையம் என்றதொரு சிற்றூர் பன்னெடுங் காலமாக இருந்து வருகிறது. அவ்வூரில் வாழும் மக்கள் முழுக்க முழுக்க பண்ணாடிமார்களே, அதுவும் சோழியப் மள்ளர்களே வாழ்ந்து வருகிறார்கள். அங்கு வாழ்ந்த மள்ளர்கள் 100 ஏக்கர், 150 ஏக்கர் நிலம் வைத்த நிலவுடமையாளராக இருந்து, உட்பகை, வழக்குமன்றம் என நிலங்களை விக்கிரையம் செய்ததாக அறிகிறோம். அவர்கள் நிலத்தை புகழ் வாய்ந்த பூ.சா.கோ குடும்பத்தார்கள் வாங்கி பி.எஸ்.ஜி. எஸ்டேட்டாகவும், பஞ்சாலையாகவும் பயன்படுத்துவது கள ஆய்வாலும் ஆவணங்களாலும் உறுதிப்படும் செய்தியாகும். இந்நிகழ்ச்சி 50, 60 ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட மாற்றமாகும். கோவை பள்ளபாளையம், பூசாரிபாளையம், தெலுங்குபாளையம், சொக்கன்புதூர், பனைமரத்தூர், புலியகுளம் வாழ்மக்கள் வன்னியம் பாளையத்தில் பெண் எடுத்துப் பெண்

கொடுக்கும் உறவினர்களாவார்கள். ஆகவே, பள்ளி, படையாட்சி என்கின்ற வன்னியர் தேவேந்திர குல வேளாளர்களின் ஒரு பிரிவினரே என்று கூறலாம்.

பள்ளர் எனும் மள்ளர் ஏரும் போரும் உயிரெனக் கொண்டதைப் போன்றே பள்ளி என்ற வன்னியரும் ஏரும் போரும் உயிரெனக் கொண்ட பாட்டாளியர் பட்டாளமாகும். வன்னியரில் வன்னியப் பள்ளர் என்ற பிரிவும் உண்டு. அவர்கள் அணியும் தாலியும் சடங்காசாரங்களும் ஒன்று போல்வனவேயாம்.

தமிழக வரலாற்றில் நாடு என்பது பற்றிய ஆய்வுகளும் மறுஆய்வுகளும் நடந்த வண்ணமே உள்ளன. அந்த வகையில் பேராசிரியர் ஏ. சுப்புராயலு அவர்கள் நாடு பற்றியும், நாட்டுச் சபை பற்றியும் செய்துள்ள ஆய்வுகள் குறிப்பிடத்தக்கன. அவருடைய ஆய்வுகள் ஏற்கனவே தமிழ் வரலாற்று ஆய்வுலகில் நிலைபெற்றிருந்த கருத்துக்களைத் தலைகீழாக மாற்றி அதுவரையில் நாடு என்பது ஓர் அரசியல், புவியியல் பிரிவாகக் கருதப்பெற்றது. ஆனால் அவர்தான் நாடு என்பது வேளாண் சமூகப் பிரிவு என்று கருதும் வகையில் சான்றுகளைக் கண்டறிந்து கூறினார். இங்கு அறிஞர் பூங்குன்றனார் குடும்பு, குடும்பர் என்ற சொல்லுக்கு, கரை, கட்டளை, நிலமளப்பவர், கரையீடு, ஓலை, உரிமை, என நிலத்தோடு தொடர்புடைய புதிய பொருள் தரும் சொற்களை மறுஆய்வு செய்து காட்டுவதைப் போன்றதாகும்.

நாடு - நாட்டார் என்ற சொற்கள் உழவுத் தொழில் என்ற வேளாண் தொழிலை மேற்கொண்ட சான்றோர்கள் அடங்கிய சபையாக - அறங்கூர் அவையாக இருந்த தன்மைபற்றி விவரித்தார். பல்லவர் காலத்திலிருந்து ஐந்து மண்டலங்களில் உட்கிடை நாட்டுப் பிரிவுகள் உருவாக்கப்பட்டன. இந்தப் பிரிவுகள் வேளாண் வர்க்கத்தோடு தொடர்புடையதாக விளங்கியது. சங்க காலத்தில் குடிப்பெயரோடு நாட்டுப் பெயர்கள் உருவாகின. சோழநாடு, பாண்டியநாடு, ஆய்நாடு, வேணாடு, தொண்டைநாடு, அதியமான் நாடு, எருமை நன்னாடு, பாணன் நன்னாடு, பூமி நாடு போன்ற பெயர்களைச் சான்றாகக் கூறலாம். ஆனால் சங்க காலத்திறுதியில் ஊர்ப்பெயர், புவியியல் ஆகியவற்றின் அடிப்படையில் நாட்டுப் பெயர்கள் உருவாகிவிட்டன. மேலும் வேளாண் ஊர்களை உள்ளடக்கிய பெரும் பிரிவாக நாடு என்ற புவியியல் அமைப்பு உருவாகிவிட்டதையும் பட்டினப் பாலை

சுட்டும். அப்பாட்டில் "காடு கொன்று நாடாக்கி" என்று பயின்று வரும் அடி 'காடு' என்பது இயற்கையாக மரஞ்செடி கொடி விளைந்திருக்கும் பகுதியையும் 'நாடு' என்பது வேளாண் பகுதியையும் சுட்டி நின்றது. மேலும் புறப்பாட்டொன்றில் சேரமானைப் பார்க்கச் சென்ற அப்புலவர் குன்று, மலை, காடு, நாடு ஆகிய பிரிவுகளைக் கடந்து சென்றார் என்று கூறும். ஆகையால் நாடு என்பது காட்டினின்று வேறுபட்ட வேளாண் நிலத்தை, வயலும் வயல் சார்ந்த நிலத்தைக் குறித்தது எனலாம்.

பல்லவர் காலந்தொடங்கி நாயக்கர் காலத்திற்கு முற்பட்ட காலம் வரையில் நாடு (சபை) வழக்கில் இருந்துள்ளது. ஆனால் எல்லாக் காலத்திலும் எல்லாப் பகுதிகளிலும் அந்தச் சபை வழக்கத்தில் இருந்ததில்லை. பல்லவர் நாட்டிலும் சோழ நாட்டிலும் நாட்டார் சபை கி.பி. 6ஆம் நூற்றாண்டு முதல் நாயக்கர் காலம் வரை இருந்தது. தகடூர் நாடு, கொங்கு நாடு, பாண்டிய நாடு ஆகிய பகுதிகளில் கி.பி. 12 ஆம் நூற்றாண்டிலிருந்துதான் நாட்டுச் சபை வழக்கத்திலிருந்தது. அந்தச் சபை நாயக்கர் காலத்தில் செல்வாக்கிழந்தது. ஆனால் ஒவ்வொரு சாதியும் நாட்டுப் பிரிவும், நாட்டார் சபை ஆகியவற்றைப் பெற்றிருந்த தன்மையையும் இக்காலத்தில்தான் காணக்கிடக்கிறது என்ற கருத்தை தொல்லியல் துறை அறிஞர் பூங்குன்றனார் கூறுவதுண்டு.

நாயக்கர் காலத்தில் வளம் பெற்றவர் வளமிழந்தும், வள மற்றவர் வளமும் வலமும் பெற்றும், விருப்பு வெறுப்பின் அடிப்படையில் மாற்றம் பெற்றும் உள்ளனர். பதவிப் பறிப்பு, நிலப் பறிப்பு, நாடு காவல், ஊர்க் காவல், எல்லைக் காவல், அம்பலம் காவல், குளக்காவல், ஏரிக் காவல், ஏவல்வழி மாற்றத்திற்குட்பட்டது. இந்த நாட்டமைப்பினை விட்டு, நவீன அரசியல் நிருவாக அமைப்பிற்குள் இயங்கலாயின. அந்த வகையில் மள்ளர் சமூகத்திலும் நாடு அமைப்பு நிலை பெற்றிருந்தது. பிற்காலத்தில் செல்வாக்கு இழந்திருக்க வேண்டும். ஆனால் நாட்டார் என்ற பிரிவுப் பெயர் மட்டும் குலப் பெயராக நின்றுவிட்டது. மள்ளர் (பள்ளர்) மரபில் பயின்று வரும் நாட்டார் என்ற குலப் பெயர் வரலாறு நீண்ட நெடியது. கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை காலந்தோறும் மாறிவந்த வரலாற்றினைப் பெற்றுள்ளது அப்பெயர். இந்த மாற்றம் சமூகப் பொருளியல் அரசியல் வளர்ச்சியின் பின்னணியில் நிகழ்ந்து வந்தது. ஆங்கிலேயர் வருகைக்குமுன் நாடு, நாட்டார் ஆகிய அமைப்பும், சபையும்

நிலமானிய அமைப்பின் எச்சம் எனக் கொள்ளலாம்.

நாட்டார் சபை என்ற அமைப்பை அரசு மாற்றம் சமூகக் கட்டுக்கோப்பின் இறுக்கம் காரணமாக ஆதிக்கச் சாதியாரும், அடாவடிச் சாதியாரும் கைப்பற்றினர். எழுபத்தொன்பது நாட்டு உத்தமநீதி, உயர்பெருங்கீர்த்தி முத்தமிழ்மாலை முழுமையும் நிறைந்த சித்தரமேழி பெரியநாட்டார் என்ற மாநிலம் தழுவிய வேளாண் வாரியத்தை தன்னகத்தேயுடைய சான்றோரே செயலிழந்து, காடு திருத்தி கழனியாக்கியோர், குளந்தொட்டு வளப்படுத்தியோர், நாடாக்கிய நாட்டார் நலிந்தோரானார். அதுபற்றியே உருகிய நிலையில் தேவேந்திரகுல வேளாளர் தம் முன்நாட்டார் என்போர், பல பகுதிகளில் காட்டிலுள்ளோர் பின்னாட்டார் எனக் குறிப்பிடப்படலாயினர். சிலரே பன்னாட்டு மள்ளர் என வழக்கொழிந்த நிலையில் உள்ளனராம்.

**26. நீராணியம் - மடையர் - நீர்மூப்பர்**

**27. நீர்கட்டி - நீர்பாய்ச்சி**

**28. படையாட்சி**

**29. பண்ணாடி**

தமிழ் நாட்டரசால் வரையறை செய்யப்பட்ட அட்டவணைச் சாதிப் பட்டியலில் (கோவை, ஈரோடு, சேலம் மாவட்டங்களில் இணைப்பு எண் - 11 (4) இல்) பள்ளன், தேவேந்திர குலத்தான், குடும்பன், பண்ணாடி என்ற பட்டங்களை தேவேந்திர குல வேளாளர்க்கு அடையாளங் காட்ட குறிப்பிடப்பட்டுள்ளனர்.

பண்ணாடி என்ற சொல் சமுதாயத்தில் மதிக்கப் பெறுகின்ற சொல்லாகப் பயன் படுத்துகிறார்கள். பள்ளன் என்றால் 'பல்லை உடை' என்ற ஆவேசக் கொந்தளிப்பு இன்றுமுண்டு. பெரும்பாலும் சாதிச் சண்டை தோன்றக் காரணமே, பள்ளன், பள்ளவளவு, பள்ளப்பயல், பள்ளத்தெரு என்று தெரிந்தோ, தெரியாமலோ சொல்லிவிட்டால் அதன்பின் விளைவு கொடூரமாக இருக்கும். கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றிய மூத்த குடிகளை, ஆண்ட பரம்பரையினரை அடக்கி ஒடுக்கி, பிரித்தாளும் சூழ்ச்சியால் இழிவான சொற்களைப் பயன்படுத்தி அழைத்ததால் வந்த ரௌத்திரமே மேற்கண்ட எழுச்சியாகும். எனவே பண்ணாடி, பண்ணாடிமார், பண்ணாடித் தெரு, பண்ணாடிக் குடியிருப்பு பண்ணாடிவளவு என்று அழைக்கப்பெறுகின்றன.

பண்ணாடி என்ற சொல் பல பொருள் கொண்டதொரு சொல்லாகும். (பண் என்றால் பாட்டு, ஆடி என்றால் ஆடுபவர், ஆடித்திரிபவர், பண்ணுக்கேற்ப ஆடிப்பாடித் திரிபவர் என்பதாகும்.) பண்ணாடி என்ற சொல்லை, பண்ணை + ஆடி என்று பிரித்துப் பொருள் கொண்டு பார்த்தால் பண்ணை என்பதற்கு நீர்வளம் மிகுந்த வயலும் வயல் சார்ந்த இடமாகக் கொண்ட மருத நிலம் ஆகும். இதே பொருளில் ----- நிகழ்ந்திருக்க நீர் நிலை, வயல் என்று பொருள் தருகிறது. வயலில் பெருநிலத்தொகுதியில் ஆடி, ஓடி வேலை செய்வதும், வேலை செய்த ஆட்களிடம் வேலை வாங்குவதும், கண்காணிப்புச் செய்வதும் பண்ணாடியின் கடமையாகும். உழைக்கும் உழவர்களுக்குக் களத்திலே நெல்லளந்து போடுவது, வயற் களம், ஏர்க்களம், போர்க்களம், நெற்களம் என்ற இடங்களில் ஆளுமை செய்யும் அதிகாரம் பெற்றவராவார். அளவர், கணக்கர், நோக்கரும் பண்ணாட்டுக் காரார்கள் என்பதை நினைவுகூறவேண்டும்.

பண்ணை, பண்ணையார் என்பது நில புலங்களுக்குச் சொந்தக்காரர், உரிமைதாரர், பட்டாதாரர் என்று பொருள். பண்ணையார் என்றும் நிலச்சுவான்தாரர் என்றும், மிட்டா மிராசு என்றும் இன்றும் அழைப்பதைப் போல் ஊரன், மகிழ்நன், கிழான், வேந்தன் என்றும் மருத நிலத் தலைமக்களை அழைத்து வந்தனர் நம்முன்னோர்கள். 'பண்ணாடி' என்ற பட்டத்தை இதன் பெருமை கருதி தற்போது ஒருசில கொங்கு வேளாளர்களும் தங்களைக் குறிக்கப் பயன்படுத்துகின்றனர். பண்ணாடி என்றால் ஊர்ப்பெரிய தனக்காரர் அவர் வாழும் இடம், குடி வளவு, குடியானவர் என மேட்டுமைத் தன்மையுள்ள பொருள் கொள்வர். "வாராங்கோ வாராங்கோ பண்ணாடி வாராங்கோ" என்ற பாட்டின் பொருளே நில புல நியாய நடவடிக்கைக்கு மேலாதிக்கம் செய்பவர் என்று பொருள்படும். பண்ணாடி என்ற சொல் கொங்கு நாட்டில் மள்ளர்களைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

ஒரு காலத்தில் நிலவுடமை என்பது மன்னனை, மள்ளர்களை, வேந்தனை அன்றி வேறுயாருக்கும் இருந்ததில்லை. பின்னர் திருக்கோயில்களுக்குப் போயிற்று. திருக்கோயிலாரிடம் வாரத்திற்குப் பெற்று, வாரக்குடி வைத்துப் பயிர் செய்யும் பெருநிலக்கிழார்கள் ஆனார்கள். பிரமதேயம், முற்றூட்டு, சதுர்வேதி என்று நிலவுடமைக்குச் சொந்தக்காரர் ஆனார்கள். இவர்களிடமிருந்து நிலத்தைப் பிரித்துப் பலபேர்கள் ஒத்தி எடுத்து வெள்ளாமை செய்தார்கள். அவர்களிடமிருந்து குத்தகைக்குச் சாகுபடி

செய்தார்கள். மேலும் இவர்களிடம் வேளாண் போகம் செய்யப்பெற்று ஒருபோகம், இருபோகம் எனப் போக அளவில் மகசூல் செய்து வந்தனர்.

உழுதுண்பாரும் உழுவித்துண்பாருமெனவகைப்பாடு உருவாயிற்று. உழுதுண்பார் கீழோராகவும் உழுவித்துண்பார் மேலோராகவும் சித்தரிக்கப்பட்டார்கள். ஒரு குடிக்குள்ளும் பலகுடியாகப் பரிணமித்தது.

## 30. பணிக்கன் - தேவேந்திர பணிக்கன் - பணிக்கனார்

பணிக்கன் என்ற பெயர் தாங்கி வாழ்கின்றவர் தேவேந்திர குல வேளாளர்களில் ஒரு சாரார், தஞ்சை, பாபநாசம் என்ற பகுதிகளில் வாழ்கின்றவராவார். தஞ்சை மாவட்டத்தில் சிலம்புப் பயிற்சியில் அனைத்து இன மக்களாலும் 'உபாத்தியார்' என அழைக்கப்பட்டோர் பணிக்கரே. தொடைதட்டிச் சிலம்பு கற்க வரும் வீரர் இவர்களைப் பாதம்தொட்டு வணங்கினர். யானை ஏற்றம், குதிரை ஏற்றம், சிலம்புப் பயிற்சி, ஆயதப் பயிற்சி போன்றவற்றில் அரச குடியினருக்கும் இவர்களே குருபீடமாவார். இவர்களே கொற்றத் தலைவராகவும் ஒற்றர் தலைவராகவும் திகழ்ந்தனர். இவர்கள் மள்ளர் இனத்தில் ஒரு பிரிவினர்.

100 பேர் திக்குக்கொருவராக நின்று கற்களை வீசினாலும் ஒருவராக நின்று வீசி எறிகின்ற கற்களை தன் மேல் படாமல் எதிரி மேல் திருப்பி விடும் வல்லமையுள்ள சிலம்பாட்டக்காரர், மதம் பிடித்த யானைகளைப் பயிற்சி கொடுத்து அரசபடைக்குப் பலம் சேர்ப்பவர். நஞ்சுதோய்ந்த வாள், வில், வேல், அம்பு, ஈட்டி என்ற ஆயுதங்களை பயன்படுத்தி - உயிருக்கு அபாயம் ஏற்படச் செய்யும் போர் களத்தில் நஞ்சை நீக்கி வைத்தியம் செய்பவர். இவர் தம்முள் பணிக்கக் குடும்பர், அகத்தியக் குடும்பர் என்றும் வேறு சில பெயர்களாலும் அழைக்கப் பெற்றுப் பாபநாசம், பாணாபட்டி, வாணாபட்டிப் பகுதிகளில் வாழ்ந்து வருகிறார்கள். இவர்கள் நாவினால் இதமாகப் பேசி பகைவரையும் ஒற்றர்களையும் வயப்படுத்தும் ஆற்றல் கொண்ட சொல்லோர் உழவர்களாவார்கள். சென்னைப் பல்கலைக்கழகத்தின் அகர முதலியில் பணிக்கன் என்ற சொல்லுக்கு ஆசிரியர் படைக்கலம் பயிற்றுவோர் கூத்துப் பயில்விப்போர், தலைமைக்கொற்றர், தச்சன், யானைப்பாகன், விசவைத்தியன், சாராயம் காய்ச்சுவோன், பள்ளர் சாதியுள் ஒரு வகுப்பு எனப் பெயருள் கண்டுள்ளது.

கேரளாவில் போர்ப்பயிற்சி செய்பவன், தேகப் பயிற்சி கற்பிக்கும் ஆசிரியன், ஈழவர், இலைவாணிகர் இவருள் ஒரு சாரார் பணிக்கன் என்ற குலப்பட்டம் பூண்டுள்ளார் என 'மூவேந்தர் யார்?' என்ற நூலில் பேரறிஞர் தேவஆசிர்வாதம் அவர்கள் குறிப்பிடுவார்கள்.

தமிழ் பணிக்கர்கள் நல்ல வைத்திய நூல் கற்ற பண்டுவராவார்கள். இவர் தம் முன்னோர் தேவலோகம் சென்று, செந்நெல் விதையும், கன்னல் விதையும், கதலிவிதையும், பனைவிதையும், மேலும் பலவித்தும் ரிசபமும், சாவியும் கொண்டு வந்து பூமியில் வேளாண் தொழில் செய்தனர் என்று சங்கரநாயனார் கோயில், கரிவலம் வந்த நல்லூர் கல்வெட்டுக்கள் கூறும், கரும்பிலும் பனையிலும், கருப்பட்டி, வெல்லம், சர்க்கரை காய்ச்சி பதம் எடுப்பதில் வல்லவர்களுக்கும் பணிக்கன் என்று பெயர். இன்னோர் கோவை, பெரியார் மாவட்டங்களில் அன்னூர் புங்கம்பள்ளி, வடக்கலூர், நல்லூர், கோயில்பாளையம் போன்ற ஊர்களில் வாழ்கின்ற தேவேந்திர குலத்தார் மிகச் சிறந்த நிபுணர் என்று பெயரெடுத்த பணிக்கமாராவார்கள்.

இவர்கள் நல்ல வைத்திய நூல்அறி புலவர்களாகையால், நண்டு நத்தைகளை விரும்பி உண்பர். காரணம் தலைநரைக்காமல் இருக்கவும், வழுக்கை விழாமல் இருப்பதற்கும் கை கண்ட மருந்தாகும் என மானிடவியல் அறிஞர் பிலோ இருதயநாத் கூறுவார்கள். இவர் தம்முள் நண்டு தின்னிப் பள்ளர் "நத்தை தின்னிப் பள்ளர்" என்ற பெயர் தாங்கியவர்கள் இன்றும் இருக்கிறார்கள்.

## 31. பலகான் - பலகன் - பலகானார்

சேலம், ராசிபுரம், பரமத்தி, பூவை, பருத்திப்பள்ளி ஏழூர் போன்ற ஊர்களில் பலகான் என்று தேவேந்திர குல மக்களைப் பெயரிட்டு அழைக்கப்படுகிறார்கள்

இம்மாவட்டக் குறிப்பில் கண்டிருப்பதாவது, கொங்கு நாட்டுப் மள்ளர் சேலம், கோயமுத்தூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் 24 நாடுகளாகப் பிரிந்து வாழ்கிறார்கள். சேலம் மாவட்டத்தில் பூவை, பருத்திப்பள்ளி, ஏழூர், சேலம் வடகரை, ராசிபுரம் என்ற நாடுகளிலும் இருக்கின்றனர். முதல் நான்கில் வாழ்பவர் குலப்பட்டம் பலகன். ஐந்தாவது நாட்டில் உள்ளவர்களுக்கு பண்ணாடிப் பட்டம். ஆறாவது நாட்டில் இருப்பவர் குலப் பட்டம் மூப்பன். கொங்கு வேளாளக் கவுண்டர் தங்களை 24 நாட்டுக்காரர் என்று கூறுவதும், மள்ளர் 24 நாடுகளை உடையவர் என்று

கூறுவதும் ஒரே மாதியாக இருப்பதால் இவர்கள் கூற்றில் அவர்கள் கூறுவதைப் போன்று சரித்திரத் தொடர்பு இருக்குமோ என்று கருத வேண்டி இருக்கிறது" என (சேலம் அரசிதழ் 1918) F.C. ரிச்சர்டு I.C.S. கருதுகிறார்.

பலகன் என்பது பலவான் என்பதிலிருந்து திரிந்ததா என்று ஆராய வேண்டும் என மேனாள் டெப்டிக் கலெக்டர் தேவஆசிர்வாதம் அவர்கள் கூறுகிறார்கள். காரணம் "பாம்பையும் பள்ளனையும் பதம் பார்த்து அடி" என்று பழமொழி கூறும். பகைத்தால் பாதுகாக்க முடியாது என்பதாகும். பொதுவாக கொங்கு நாட்டிலுள்ள இம்மக்கள் வீரமிக்கவர் ஆவார். செங்கோட்டுப்பள்ளு 'புலியதனை பிடித்திழுக்க வல்லோய்' (செய்யுள் 768) என்று கூறுவது காண்க. கொங்குநாட்டு உழவர்கள் புலிகளைப் பிடித்திழுத்தல் அருமையன்று. கல்லும் காடும் வனமும் நிறைந்த அந்த நாட்டில் பன்னூறு ஆண்டுகளாக அரும்பாடுபட்டு உழைத்து உரமேறியவர்கள். சிறிவரும் புலியதனை முறத்தினாலே சிங்கார மள்ளி ஒருத்தி துறத்தினாளே என்ற வரியும், யானையைப் பிடித்துப் பயிற்றும் திறமும் உடைய பணிக்கர் இவ்வின மக்கட்பிரிவில் உள்ளார்கள் என்பதையும் நினைவு கூர்தல் வேண்டும்.

தேவேந்திர குல வேளாளர் வாழுகின்ற கோவை புலியகுளம் பகுதியில் உள்ள அம்மன்குளம் கண்மாயில் 300 ஆண்டுகளுக்கு முன் காடழித்து நாடாக்கிய போது, புலி போத்துக்கள் நிரம்ப இருந்தன. அப்போது கணைக்கால் கருங்கை மள்ளர் ஒருவர் கடப்பாறையால் புலியைக் குத்திக் கிழித்ததற்காக மள்ளருக்கு ஒருநடுகல் அம்மன் குளம் மதகுப்பகுதியில் இருந்தது. புலி வாழ்ந்த குளம் என்பதாலேயே புலியகுளம் எனப் பெயராயிற்று என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும். காடு வெட்டி நாடாக்கினர். குளம் தொட்டு வளப்படுத்தினர். நீர் தேங்கிய பள்ளங்களில் உழுது பயிரிட்டனர். அதன் விளைவாகவே பள்ளத்தில் உழவு செய்து பள்ளர் ஆகினர் என தமிழ்நாடு இலக்கியப் பேரவை மலரில் குறிக்கப்பட்டுள்ளது. மள்ளர் என்ற சொல்தான் பள்ளர் என மாற்றம் பெற்றது. பள்ளர் எனும் மள்ளர் ஏர்க்களத்தும் போர்க்களத்தும் இணையற்ற செயல் முடிக்கும் மாபெரும் உழக்குடி வீரர்களாவார்கள்.

அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும் வருந்தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர் என்ற திவாகர நிகண்டின் கருத்தை பிங்கலநிகண்டு வழிமொழிகிறது. ஆக நிகரற்ற வளமும் பலமும் மிக்கவர் மள்ளாண்டையர்

எனலாம். தேவேந்திர குல வேளாளரில் ஒரு பிரிவினர் பலகான் என்பது பலவான் என்ற கருத்தினின்றும் மாறுபட்டு பாரதியார் பல்கலைக் கழகத்தின் மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் சிற்பி பால சுப்பிரமணியம் கூறுகிறார்.

தமிழ்க் குடியினர் பெயர் வடமொழியினின்று வந்ததாகக் கருதுவது அத்துனை ஏற்புடையதல்ல. இயன்றவரை வேளாண் குலத்தவர் வேளாண்மையோடு தொடர்புபடுத்திப் பார்த்தால் ஏற்புடையதாக அமையலாம். ஏருடையான் வேளாளன் என்பது வேளாளர்க்குரிய அடையாளம். மாடு என்பது செல்வத்தைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். மாடு வளர்ப்பதும், அதன் பயன்பாட்டைத் துய்ப்பதும் உழவர் அல்லாமல் வேறு யாரால் முடியும்? உழுதுண்ணும் வாழ்க்கையே உயர்வான வாழ்க்கை. தொழுதுண்டு வாழும் வாழ்வும் ஒரு வாழ்வா?

ஏரும் இரண்டுளதாய் இல்லத்தே வித்துளதாய்
நீரருகே சேர்ந்த நிலமுள தாய் - ஊரருகே
சென்றுவர அணித்தாய் செய்வாரும் சொற்கேட்டால்
என்றும் உழவே இனிது

என்றும் உழவும், உழவுத் தொழிலும் இனிமையானதாக இருக்க பல ஆவினங்கள் வேண்டும். பல்லாவினன் என்றால், பல பசுவும் - எருதுகளும் உடையோர். பலகான் என்பதை பல்லாவினன் எனப்பொருள் படுத்தலாமா என அறிஞர் சிற்பி கேட்கிறார். ஆய்வு செய்வோர்க்கு இச்செய்தியை வைக்கிறேன் என்கிறார். அல்லது பள்ளர் என்ற சொல்லின் திரிபே பலகன் ஆகலாம் என்றும், பழனிக்கு அருகில் பலக்கன் ஊத்து என்றொரு ஊர் உண்டு. பலகண் ஊற்று என்று நான் கருதியிருந்தேன். இப்போது பலகன் ஊற்று என்பதே அதன் உண்மைப் பெயர் என்று தோன்றுகிறது. குளம், ஏரி, ஆறு, வேளாண்மை தொடர்புடைய பலகன் - தேவேந்திர குல வேளாள சம்பந்தப்பட்டதாகவே இருக்க வேண்டும் என்கிறா நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தில் ஆய்ச்சியர் குரவைய கோவலனைக் குறிப்பிடுங்கால் - முல்லை நில மக்க கோவலர், கோனார், இடையர், சேர்வை, இடையர், யாதவ பொதுவர், அம்பலம், சாணார் என்று கூறுபவர் "பல்லான் கோவலன்" எனச் சுட்டுவதால். பல ஆவினங்களை உடையவர் என்று பொருள் கூறலாம். மருதநில உழவர்கள் ஆடுமாடுகளை வளர்ப்பதும் - பயன்பாட்டில் உபயோகிப்பதும் இயல்பானதொரு செயலேயாகும்.

**32. பழையர்**

**33. பள்ளர் - பள்ளனார்**

**34. பள்ளி - பள்ளியர்**

**35. பளியர்**

**36. பாண்டியர்**

**37. பாவாணர்**

**38. பூசி**

**39. மகிழ்நன்**

**40. மண்ணாடி**

**41. மல்லர் - மல்லனார்**

**42. மழவர்**

**43. மள்ளர் - மள்ளனார்**

*மள்ளர் என்ற சொல் சங்க இலக்கியங்களில் பரக்கப் பேசப்படும் சொல்லாகும். ஏர்க்களத்தும் போர்க்களத்தும் ஏற்றம் பெற்ற மக்களை மள்ளர் அல்லது மல்லர் என்று அழைத்தனர். இச்சொல், சொல் வளப்பத்தையும், செயல் நுட்பத்தையும் விதந்து பாராட்டி, வாழ்வில் வாழ்வாங்கு வாழ வளமும் வலமும் பெற்றுயர்க என வாழ்த்துவதாகும். இத்தகைய மேலான சொல்லுக்குச் சொந்தக்காரர்கள், மருத நிலத்தில் வாழும் உழவர்களே.*

*தொல்காப்பியம் என்ற நூலினைத் தொடர்ந்து பள்ளு இலக்கியம் தோன்றுகின்ற காலம் வரை பயன்படுத்தப்பட்டு வந்த சொல் மள்ளர் என்ற சொல்லாகும். மல்லர், மள்ளர் என்ற சொற்கள் கழகத் தமிழ் அகரமுதலியில் முறையே மற்போர் செய்வோர், வலியர், வளமையர், படைவீரர், இளைஞர், மருத நிலத்தார், திண்ணியர், படைத்தலைவர், உழவர் என்று பொருள் காணக்கிடைக்கிறது. இதுபற்றியே, ஏரும் போரும் இணைபிரியாது என்றும் கூறுவதோடு மள்ளர் மள்ள, மறவர் மறவ என்பர்.*

அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்

*என திவாகர நிகண்டும்,*

செருமலை வீரரும் திண்ணியோரும்
மருத நில மாக்களும் மள்ளரென்ப

*எனப் பிங்கல நிகண்டும் உறுதிப்படுத்துகிறது. எனவே*

பிற்காலத்தே தோன்றிய 96 வகைப் பிரபந்தங்களில் ஒன்றாகிய பள்ளு இலக்கியத்தில் மள்ளர் என்போரை சிலகால் மள்ளர் என்றும் சிலகால் மள்ளர் பள்ளர் என்றும் முகவரியை மாற்றி மயக்கத்தை ஏற்றி உழவர் வாழ்க்கையைச் சூனியப் படுத்திவிடுகிற நிலை ஏற்படுத்திவிட்டார்கள்.

மருத நில மக்களைக் குறிப்பிடுங்கால் மள்ளர், உழவர், கடையர், கடைசியர் என்றிருந்த நிலையை, வேந்தனை - இந்திரனைத் தெய்வமாக - குல முதல்வனாக - தலைமகனாகப் பாவிக்கப்பட்டு வந்த மூவேந்தர் ஆட்சியின் வீழ்ச்சிக்குப் பிறகு, கொஞ்சங் கொஞ்சமாக முதன்மையை, பெருமையை சிதைத்து, சித்திரவதை செய்து, இழிவு புகுத்தப்படும் நிலை ஏற்பட்டது.

"மள்ளர்கள் எல்லோரும் ஏர்பூட்டி
வளமாகத் தரிசடித்த பின்பு" - வையாபுரிப்பள்ளு, 172

"செவ்வியர் மள்ளர்கள்
தேவியர் பள்ளியர்" - முக்கூடற்பள்ளு

"மாரிப் பொருட்டால்
வரங்குறித்த மள்ளரெல்லாம்" - முக்கூடற்பள்ளு

"மள்ளர் குலத்தில் வரினும் இருபள்ளியர்க்கோர்
பள்ளக் கணவன்" - முக்கூடற்பள்ளு

"மள்ளர்கள் பள்ளியருடனே கூடிவந்து" - செங்கோட்டுப்பள்ளு

"பண்ணை மள்ள சாதிக் குடும்பன்" - பொய்கைப் பள்ளு

"புனல் வயல் மள்ளர் குலப் பூவையர்" - பொய்கைப் பள்ளு

"அள்ளல் வயலின் மள்ளர் உழுஞ் சேறு" - பெரியபுராணம்

"ஆறுபாய் அரவம் மள்ளர் ஆலைபாய் அமலை ஆலைச்"
- கம்பராமாயணம்

"இலகுறச் செய்வர் மள்ளரின் சிறு புதல்வர் செய்யுள்"
- மருதவனப் புராணம் நாட்டுப்படலம் 33

"வயல் வளமள்ளர்" - திருவாரூர் கமலாலய புராணம்

"விள்ளு மேருழ மள்ளர் மெய்யாவியைக்"
- சின்னமனூர் என்னும் அரிகேசரி நல்லூர்த்
தல புராணம் நாட்டுப் படலம் 18

"வீரியிடாவகை வெஞ்சிறை கோலித்தூரிடும் மள்ளர்
தொலைந்தழி வெய்த"
- காஞ்சிப்புராணம் நாட்டுப் படலம் 26.

"ஏர்வைத்த மள்ளரு நாணேற்றி முதலின் மள்ளர்களு
நேர் வைத்த காற்போர் புரிய நெல்லையோ"

- நெல்லை சிலேடை வெண்பா

"காக்கும் மள்ளர் கடாக்கும் வயலில்"

- தண்டிகை கனகராயன் பள்ளு 20.

மேற்கண்ட செஞ் சொல் வரிகள் மள்ளர் உழவராக செயல் பட்டார்கள் என அறியவும்,

"தண்டுசேர் மள்ளரின் இயலியயலது" - நற்றிணை 260

"கடிபுகுவனர் போல் மள்ளரு முடைத்தே" - ஐங்குறுநூறு 432

"களம்புகும் மள்ளர் வனப்பு ஒத்தன"

- கலித்தொகை முல்லைக் கலி - 6 வரி 9-10

"அட்ட மள்ளார்ப்பிசை வெருஉம்" - குறுந்தொகை 34

"களிகொள் மள்ளர் வில்விசை யினுடைய" - அகம். 185

"மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர்" - புறம், 10

"கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக"

- பதிற்றுப் பத்து, 43. வரி 25

"வெம்போர் மள்ளர் தெண்கிணை கறங்கக்"

- பதிற்றுப் பத்து, 90. வரி 44

"தேங்காத மள்ளர் திட்டோளினைசிக்க யாத்த
பூங்கச்சு நீக்கிப் பொறிமான கலநல்ல சேர்த்தி"

- சிவகசிந்தாமணி

என எண்ணற்ற எடுத்துக் காட்டுகள் உள்ளன.

இதுபோன்றே பேரூர்ப் புராணம் பள்ளுப் படலம். திருமுருகாற்றுப்படை (250-277) தேம்பாவணி நாட்டுப் படலம், 32 புறநானூறு 388 கம்பராமாயணம் - பால காண்டம் போன்றவற்றை ஆதாரம் காட்டி, மள்ளர்தான் இன்றைய பள்ளர்கள். இவரே மூவேந்தர் மரபினர் என்று டாக்டர் குருசாமி சித்தர் கூறுவதே இச்சொல் மாற்றத்தை மெய்ப்பிக்கும்.

பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணம் மதுரைகாண்டம், இரத்தின வேலு முதலியார் இயற்றிய விருத்தியுரையில் - திருநாட்டுப் படலம் 7ஆவது

*பாடல்*

கல்லெனக் கரைந்து வீழும் கரும்புனற் குழவி கானத்
தொல்லெனத் தவழ்ந்து தீம்பால் உண்டொரீஇத்
திண்தோள்மள்ளர்
செல்லெனத் தெழிக்கும் பம்பைத் தீங்குரல் செவிவாய்த் தேக்கி
மெல்லெனக் காலிற்போகிய பணைதொறும் விளையாட்டெய்தி

*'கல்லென்று சத்தித்துக் கொண்டு பொதிய சலத்திலிருந்து வேகமாக வருகின்ற நீரினையுடைய தாமிரபரணி என்னும் பெண் குழந்தை, முல்லை நிலத்தில் ஒல்லெனும் சத்தத்துடன் தவழ்ந்து இனிய பாலை உண்டு அவ்விடம் பெயர்ந்து, நீங்கித் திண்ணிய தோளையுடைய பள்ளர்கள் மேகம் போல் முழங்கும் பம்பையினது மதுரமாகிய ஓசையைக் காதிலே நிரப்பி, காலினால் மெல்லெனச் சென்று வயல்கள் தோறும் விளையாடுதலை (ஆற்றுக் காலாட்டியர்) பொருந்தி' என விருத்தியுரையில் "மள்ளர்" என்ற சொல்லுக்குப் பள்ளர் எனப் பொருளுப கூறி ஆற்றுக் காலாட்டும் செயலையும் விதந்து கூறுகிறார்*

களமர்கள் பொன்னேர் பூட்டித் தாயர் வாய்க்கனிந்த பாடற்
குளமகிழ் சிறாரினேறு மொருத்தலு முகவை தூங்க
வளமலி மருதம்பாடி மனவலி கடந்தோர் வென்ற
அளமரு பொறிபோலேவ லாற்றவாள் வினையின் மூண்டார்

*மருத நிலமக்கள் மருதப் பண்பாடிப் பொன்னேர் பூட்டலும்,*

பலநிற மணிகோத் தென்னப் பன்னிற ஏறுபூட்டி
அலமுக விரும்பு தேயவாள்வினைக் கருங்கான் மள்ளர்
நிலமக ளுடலங் கீண்ட சால் வழி நிமிர்ந்த சோரிச்
சலமென நிவந்த செங்கேழ்த் தழன்மணி யிமைக்கு மன்னே (19)

*பல நிறமுடைய எருதுகளைப் பூட்டி, கலப்பையின் முகத்திலுள்ள கொழுப் படைதேய, வேளாண் தொழில் செய்யுங்கரிய கால்களை உடைய மருதநில மக்கள் பூமிதேவியின் உடலைக் கிழித்து, படைச்சால் வழியில் உண்டாகிய உதிரநீர் போல், மேலெழுந்த செந்நிறமமைந்த நெருப்புப் போன்ற இரத்தினங்கள் விளங்கா நிற்கும்.*

ஊறுசெய் படைவாய் தேய உழுநரு நீர்க்கால் யாத்துச்
சேறுசெய் குநருஞ் தெய்வந் தொழுதுதீஞ் செந்நெல் வீசி
நாறுசெய் குநரும் பேர்த்து நடவுசெய் குநருந் தெவ்வர்
மாறுசெய் குளைகட் டோம்பி வளப்படுக் குநரு மானார் 20

என்ற பாடல் சேறு செய்குநர் தெய்வமாகிய இந்திரனைப் பணிந்து என்று உரை எழுதி,

கடைசியர் முகமுங் காலுங் கைகளும் கமல மென்னார்
படைவிழி குவளை யென்னார் பவளவாய் குமுத மென்னார்
அடையவுங் களைந்தார் மள்ளர் பகைஞரா யடுத்தவெல்லை
உடையவ னாணை யாற்றா லொறுப்பவர்க் குறவுண்டாமோ?

உழவர்கள் பள்ளர் பெண்களாகிய தங்கள் மாதர்களை முகம் கால் கைகள் ஆகியவை செந்தாமரை மலரையும், வேற் படை போன்ற கண்கள் நீலமலரையும் பவளம் போன்ற வாய்கள் குமுத மலரையும், ஒத்திருப்பன வென்று உறவாக நினையாமல் அம்மலர்கள் எல்லாவற்றையும் பயிர்க்குப் பகையாக நெருங்கின சமயத்தில் இறைவன் கட்டளை வழியின்று தண்டிக்கும் உறவினர் என்றார்.

கற்றவை களைந்து தூற்றிக் கூட்டியூர்க் காணித் தெய்வம்
அற்றவர்க் கற்றவாறீந் தளவைகண்டாறி லொன்று
கொற்றவர் கடமைகொள்ளப் பண்டியிற் கொடுபோய்த்தென்னா
டுற்றவர் சுற்றம் தெய்வம் விருந்தினர்க் கூட்டியுண்பற்ற 28

உழவர்களாகிய மருத நிலக்கிழவர்கள் திரளாகிய வைக்கோல்களைப் போக்கி நெற்களைத் தூற்றிப் பொலிவுகளாகக் குவித்து, ஊர்க்காணி தெய்வங்களுக்கும் தரித்திரர்களுக்கும் அளவிட்ட முறைப்படிக் கொடுத்து அதன்மேல் மிச்சத்தை அளவிட்டு ஆறிலொரு கூறு பாகத்தை அரசர்கள் தமது இறைப் பொருளாகக் கொள்ள, மற்றதைப் பண்டியில் கொண்டு சென்று - தென்புலத்தார் தெய்வம். விருந்து, ஒக்கல், தாம் என மள்ளாண்டை செய்து மள்ளர்கள் உண்டு மகிழ்வார். கொங்கு நாட்டில் சேலம், கரூர், திருச்சி, ஈரோடு மாவட்டங்களில் உழவர் இனக்குடிகள் அனைவரும் குறிப்பாக தேவேந்திர குல வேளாளர் தம் தவசக் களத்தில் 'மள்ளாண்டார்' என்னும் தெய்வக்கல்நட்டு, முதற்படையல் செய்து வழிபடுகின்றனர்.

மள்ளர் என்போர் களமராகவும், உழவராகவும் கடையர் கடைசியர் ஆகவும், ஆற்றுக்காலாட்டியராகவும் பண்ணையாராகவும் பண்ணாடியாகவும் கிழாராகவும் நெல்லளக்கும் அளவராகவும் மூப்பனாராகவும், நாடாண்ட நாட்டாராகவும், காலாடி, பணிக்கர் பலகனாராகவும தேவேந்திர குல வேளாளர்கள் ஒவ்வொரு ஊருக்கும் ஒவ்வொரு பெயராக பல்வேறு பெயர்களில் தமிழ் நாட்டில் வாழ்ந்து வருகிறார்கள் என உரையாசிரியர்கள் உரைப் பகுதியில் கூறியதைப் பார்த்தோம். இனி உள்நாட்டு

வெளிநாட்டு அறிஞர்கள் மள்ளர் என்போர் யார் என்று திட்டவட்டமாகக் கூறுவதையும் பார்ப்போம்.

வரலாற்றறிஞர் கே.ஆர். அனுமந்தன் பள்ளர் தமிழகத்தின் பண்டைக்கால மக்கள் எனவும் அவர்கள் பெரும் நிலக்கிழாராகவும், வேளாண்மைத் தொழிலில் குறிப்பாக நன்செய்ப் பயிர் சாகுபடியில் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றவர் எனவும் கூறுவார். டாக்டர் ஜி.ஒப்பர்ட் மள்ளர் பள்ளரானது உச்சரிப்பு வேறுபாடே ஆகும் என்பார். டி.கே. வேலுப்பிள்ளை பழந்தமிழ் இலக்கியத்தில் வரும் மள்ளர் பிற்காலத்தில் பள்ளர் என வழங்கினர் என்பார். பள்ளரல்ல மள்ளர் ஆம் மன்னர் என்பார் எம்.சீனிவாசன் அய்யங்கார் பள்ளர் அல்லது மள்ளர் பாண்டிய படை மறவர் ஆவர் என்று குறிப்பிடும் இவர் மேலும் பண்டைத் தமிழகத்தில் பள்ளர் என்ற வகுப்பு இல்லை. அவருக்குப் பதில் மள்ளர் என்ற வகுப்பும் பள்ளருள் ஒருபிரிவாகிய கடையர் என்ற வகுப்பும் இருந்தது. இவர் விவசாயத் தொழிலாளராகவும் படை மறவராகவும், பாவாணராகவும் இருந்தனர் என்பார். மொழிஞாயிறு தேவ நேயப் பாவாணர் பள்ளர் என்பது மள்ளர், மருதநிலத்தில் வாழும் உழவர் என ஆயிற்றென்பார். புலவர் கி.ஆ. குப்புராசு பள்ளத்தில் சேறும் சகதியும் நிறைந்த நன்செய் நிலத்தில் (பள்ளவயல்) உழவு செய்ததால் பள்ளுழவு, பள்ளர் உழவு என ஆகிப் பள்ளர் உழவர் - பள்ளர் என ஆகிற்று என்பார். கோவை கிழார் என்னும் சி.எம். இராமச் சந்திரஞ் செட்டியார் பின்னாளில் ஒடுக்கப்பட்ட வகுப்பார்களாகிய மள்ளர்களும் கோவில் விழாக்களில் கலந்து கொண்டிருப்பார்கள் என்ற கருத்தைப் பள்ளுப் படலம் திருவிளையாடல் என்ற ஐதிகத்திலிருந்து நாம் ஊகிக்கலாம் என்பார்.

திரு கணபதி பள்ளர் பண்டைக் காலத்தில் மள்ளர் என வழங்கியதாகவும், அவர்கள் நாட்டின் தலைக்குடிகள் என்றும் காட்டை வெட்டி நாடாக்கி, குளம் தொட்டு வளம் பெருக்கி வேளாண்மை செய்து நாகரிகத்தைத் தோற்றுவித்தவர் என்றும் இவர்களிலிருந்து பிரிந்து வெவ்வேறு இலாபகரமான தொழில்களை மேற்கொண்டு பொருளாதாரத்தில் மேம்பட்டவர், சனாதனக் கொள்கைகள் நாட்டில் பரவியதின் விளைவாக சமூக நிலையில் உயர் இடத்தைப் பெற்றனர் என மள்ளர் மாண்பு என்ற நூலில் குறிப்பிடுவார். ஹச்.ஏ. ஹட்சன் மதுரை மாவட்ட மேன்யுவெல் பக்கம் **29** - இல் கி.பி. 9-10ஆம் நூற்றாண்டுகளில் தொண்டை மண்டலம் சோழரால் வெல்லப்பட்டபோது பல்லவர் படையைச் சேர்ந்த போர் வீரரில் நகரில் தங்கியவர் பள்ளி, படையாட்சி

எனவும், ஊர்ப்புறங்களில் தங்கியவர் பள்ளர் எனவும் வழங்கலாயினர் என்பார். டாக்டர் வின்சிலோ என்பவர் கி.பி.19ஆம் நூற்றாண்டில் வெளியிட்ட தமிழ் ஆங்கில அகராதியில் தற்காலத்தில் பள்ளர் என வழங்குபவர் பழங்காலத்தில் மள்ளர் என வழங்கினர் என்கிறார். சேலம் மாவட்டம் கணக்கன்கிரி ஊர்ப்பற்றி 1961ஆம் ஆண்டு தயாரித்த கையேடு பள்ளர் என்பவர் மருத நில மக்களாகிய மள்ளர் என வெளிப்படுத்துகிறது.

திரு. ச.சோ. இலக்குமிரதன் பாரதி பள்ளர் என்பது மருதநிலத் தலைமக்களாகிய மள்ளர் (பள்ளர்களாகிய தேவேந்திர குல வேளாளர் ஆவார்) என நமது சமூகம் என்ற நூலில் 218ஆம் பக்கத்தில் குறிப்பிடுகிறார். பள்ளர் என்பவர் பெருநிலக்கிழாராகவும், தோப்பு, துரவு, வயல் வாய்க்காலுக்கு, நன்செய் மிராசுதாரர்களாகவும், புன்செய் கிழாராகவும் இருந்தவர். எனவே வயற்காரர், வாய்க்காரர் எனப் பெயரிட்டு வழங்கினர் எனப் பள்ளர் பேரவையின் ஸ்தாபகரும் காவல் துறை கண்காணிப்பாளருமான மு. இராமதாசு கூறுவார்கள். ஜான்பெனிமோர் 'பாலஸ்தீன் தமிழ்க் குடி நாடே' - என்ற நூலில் 'பெல்லா' பெ(F)ல்லா என்பவர் இந்தியாவில் உள்ள பள்ளர்கள் என்று புலப்படுகிறது. இவரே மல்லர் என்ற மள்ளரின சூரிய வேளாளராவர் எனக் கூறுகிறார். சாமி சிதம்பரனார் மருத நிலத்தின் தெய்வம் வேந்தன் என்று தொல்காப்பியம் கூறுகிறது. இதனால் தமிழகத்தில் மருத நிலத்தில் அரசன் இருந்தான் என்று அறியலாம். பயிர்களைச் சேதமில்லாமல் காக்கத் தோன்றிய வேளாண் விஞ்ஞானி வீரர் பரம்பரையினரே பிற்காலத்தில் அரசராயினர். வேந்தராயினர் என்று கூறுவார். பழந்தமிழ் வாழ்வும் வளர்ச்சியும் என்ற நூலில் விரிவாக விளக்கம் பெறலாம். முனைவர் அருணா - இராசகோபால் 'களமரென்னும் காராளரே உழவர் என்றும் பள்ளர்' என்றும் தமிழகச் சாதிகளின் தோற்றமும் வளர்ச்சியும் வீழ்ச்சியும் என்ற கட்டுரையில் வேளாண் பல்கலைக்கழக வெளியீட்டில் வெளிப்படுத்துவார்.

ஏருடையான் வேளாளன்; வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான் என ஏடுபோற்றும் வாழ்குடி உழவராகயிருந்து வந்தவர்க்கு இலைவிரித்து, இனிவருகின்றவர்களுக்கு உலை வைத்து உபகாரம் செய்யும் வேளாண் சீலர்கள். வீழ்குடி உழவராகி ஒரேர் உழவராகி, ஓட்டாண்டியானதேன்? வளப்பமிக்க வளமையர் நெற் கதிரின் நிழலிலே வாழ்ந்தவர்கள் - நெல்லளந்த வள்ளல்கள்

பள்ளர்கள் ஆனதேன்?

**சீர் சான்ற உயர் நெல்லின்**
**ஊர் கொண்ட உயர் கொற்றவன்**

என மதுரைக் காஞ்சியால் போற்றப்படுவோர். நெல்லு வகையை எண்ணினாலும் எண்ணலாம் பள்ளு வகையை எண்ண முடியாது எனப் பல்பெயரால் விளங்கும் பள்ளர்கள் பரவி சிதறிக் கிடந்த நெல்லைப் பார்த்து, பள்ளனூட்டுலே நெல்லு விளைஞ்சு குவிஞ்சாப்போலே தாறுமாறாக சிதறிக் கிடக்கும் மள்ளர்களைப் பற்றி பாரதியார் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் டாக்டர் சிவசண்முகம் அவர்கள் கூறுவதாவது :

'தமிழர் பண்பாட்டு வரலாறு' என்ற நூலில், தமிழ் மொழியில் 'ம' என்னும் ஒலி 'ப' என்னும் ஒலியாக அமைந்துள்ள மாற்றத்தை கூறும் பொழுது, முதலில் இவ்விரு ஒலிகளுக்கும் இடையே உள்ள ஒலியியல் அடிப்படை உறவைக் காட்டுகிறார். இவ்விரு மெய் ஒலிகளில் 'ப' என்னும் மெய்யொலி அடைப்போலி என்னும் வகையைச் சார்ந்தது. 'ம' என்னும் மெய்யொலி மூக்கொலி வகையைச் சார்ந்தது. இஃது இவ்விரு மெய்யொலிகளுக்கு மிடையே உள்ள வேறுபாட்டைக் காட்டுகிறது. ஆனால் இவ்விரு மெய்யொலிகளுக்கும் இடையே உறவு உள்ளது. ஒலியியல் அடிப்படையில் இவை இரண்டும் இதழ் ஒலிகள். அதாவது இவ்விரு ஒலிகளும் பேச்சுறுப்புகளான வாயின் மேலும் கீழும் உள்ள இதழ்கள் என்னும் இருபகுதிகளும் சேர்ந்து பின்னர் பிரிவதால் பிறக்கும் ஒலிகளாகும். எனவேதான் இவ்விரு ஒலிகளையும் இதழ் ஒலிகள் என்று அழைப்பர். ஒலியியலாளர் இரு ஒலிகளுக்கும் இடையே உறவு இருக்கும் பொழுது ஓர் ஒலி மற்றோர் ஒலியாக மாறுவதற்கு வாய்ப்புகள் ஏற்படுகின்றன. இதன் விளைவாகத்தோன்றியதே தமிழ்மொழியில் மள்ளர் என்ற சொல்லில் உள்ள மகரம் திரிந்து பகரமாக அடைந்த மாற்றம் என்று சொல்ல வாய்ப்புள்ளது. மகரம் பகரமாக மாறியது தமிழ் மொழியின் எல்லா இடங்களிலும் மாறாமல் இந்த குறிப்பிட்ட சொல்லளவில் மட்டும் நிகழ்ந்து உள்ளது. எடுத்தக் காட்டாக

1. விரும்பு - விருப்பு (வினைச்சொல் பெயர்ச் சொல்லாதல்)
2. கரும்புச்சாறு - கருப்பஞ்சாறு (நிலைவழக்கு கிளை வழக்காதல்)
3. கூம்பு - கூப்பு (பெயர் வினையாகல்)

4. திரும்பு - திருப்பு (செயற்படுபொருள் குன்றியவினை செயப்படு பொருள் குன்றாவினையாதல்)

5. சம்பந்தி - சம்மந்தி சம்பந்தி (வடசொல் நிலைவழக்குச் கிளைவழக்காதல்)

மேலே கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டுகளில் முதல் நான்கில் மகர ஒலி பகர ஒலியாக மாறி இலக்கண ரீதியிலான ஏதேனும் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தி உள்ளது. இம்மாற்றங்கள் யாவற்றையும் நாம் நுட்பமாகப் பார்ப்போமானால் அருகருகே வரும் மகரமும் பகரமும் இருபகரங்களாகவோ அல்லது மகரங்களாகவோ மாற்றப்பட்டுள்ளன. இம்மாற்றங்கள் ஓரினமாதல் என்று அழைக்கப்படுகின்றன.

எனவே மள்ளர் என்ற பழந்தமிழ்ப் பெயரை இடையே உச்சாபேதத்தாலும் உட்பகை உணர்வாலும் பள்ளர் என்றனர். இதன் உண்மையை ஊரறிய உணர்த்துவோம்.

உழுவார் உலகிற்கு அச்சாணியானவர். உழுதுண்டு வாழ்ந்தவர், ஈத்துவந்தவர், நெற்கதிரின் நிழலில் நின்றவர், ஏரும் போரும் கண்டவர், பாட்டும் கூத்தும் பயின்றவர், கோயில் குளம் தொட்டவர், ஆட்சி அதிகாரம் பெற்றவர் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்.

வீரமாமுனிவர், மகாவித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, எழுபது - என்பதிற்கும் மேற்பட்ட பள்ளு நூல் ஆசிரியர்கள், பதிப்பாளர்களும் இன்றைய அறிஞர்களான தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் மேசர் கதிர்மகாதேவன், பாரதிதாசன் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் ஜெகதீசன், நாட்டார் வழக்காற்றியல் அறிஞர் முனைவர் தே. லூர்து, மதுரை காமராசார் பல்கலைக்கழகத் தமிழியற் புல ஒருங்கிணைப்பாளர் முனைவர் சு. வேங்கடராமன், தூத்துக்குடி வ.உ.சி. கல்லூரிப் பேராசிரியர் ஆ. சிவசுப்பிரமணியம், பாரதியார் பல்கலைக்கழக தமிழ்த்துறை முதுநிலை விரிவுரையாளர் முனைவர் தே. ஞானசேகரன், முனைவர் சி. பரமேஸ்வரி, மேனாள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் கருணாகரன், மதுரை செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்கள் முனைவர் நிர்மலா மோகன், முனைவர் வீ. காந்திமதி, மதுரை காமராசர் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறைத் தலைவர் முனைவர் இராமோகன், புதுச்சேரி பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் அ. அறிவுநம்பி,

பாரதியார பலகலைககழக மொழியியல் துணைப் பேராசிரியர் முனைவர் வே. தயாளன், பாரதிதாசன் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர். கி. இராசா, புதுச்சேரி மொழியியல் மற்றும் பண்பாட்டு ஆய்வு மையப் பேராசிரியர் முனைவர் பக்தவச்சலபாரதி, கோயமுத்தூர் அருங்காட்சியக் காப்பாளர் முனைவர் சி. மகேசுவரன், நிலகிரி மாவட்ட தொல்லியல் காப்பாட்சியர் முனைவர். இரா.ப. கருணானந்தம் மற்றும் பல அறிஞர்களும் பேராசிரியர்களும் மள்ளரும் பள்ளரும் ஒன்றென்பார்கள்.

**44. மன்றாடி**

**45. முதலி**

**46. மூப்பன் - மூப்பனார் - தேவேந்திர மூப்பனார் மூப்பர்**

மூப்பன், மூப்பர் என்ற சொல் வயதில், அறிவில், அனுபவத்தில் முதிர்ந்தவர்களுக்கு ஆகிவந்த சொல்லாகும். ஆனால் அந்த மூப்பர் என்ற சொல் கரூர், புலியூர், தொட்டியம், முசிறி, திருச்சி போன்ற இடங்களில் தேவேந்திர குல வேளாளர் என்ற மள்ளரின மக்களுக்கு வழக்கத்திலிருந்து வரும் சாதிப்பட்டப் பெயராகும். மூப்பர் என்ற சொல் கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம், செல்வம், செல்வாக்கு, உழைப்பு, ஒப்புறவு, உபகாரம் என்ற உயர்ந்த பண்பாட்டை சீர்தூக்கி மூப்பனார் என்று அர், ஆர்விகுதி போட்டு அழைக்கப்படுகிறார்கள்.

பிராமணர் உழுதுபயிரிடவில்லை. வேளாளர், அளவர், பள்ளிகள் (வன்னியர்) பரம்பர் (ஆதிதிராவிடர்) உட்பட உழுது பயிரிடுகிறார்கள். பிராமணர்க்குக் காணியாட்சிக் கிடையாது என கடலூரில் உள்ள திருப்பாதிரிப் புலியூர் பாடலீசுவரர் கோயிலில் உள்ள கல்வெட்டு (தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி 17 எண் 759 ஆம் கல்வெட்டு அறிவிப்பதாக பா. கண்ணையன் - நில உரிமைக்காகத் திக்குளித்த கல்வெட்டுக் கதை. 27.12.1998 தினமணிக்கதிரில் கூறப்படுகிறது. இவ்விடத்தில் **அளவன்** என்போர் குடும்பர் என்ற உட்பிரிவுளடங்கும் மள்ளராவார் என அறியலாம். குவிந்துகிடக்கும் கூலங்களில் ராசியில் வள்ளம் கொண்டு அளந்து போடுவர். மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை நிலமளக்கும் அளவர் மள்ளர் என்றகுடி மகனாவார்.

தேவேந்திர குலத்தாரைத் தவிர கொங்கு நாட்டில் சாணாருள் ஒருசாராரும் மதுரை மாவட்டத்தில் மேற்குப்

பகுதியில் வலையரும் மூப்பன் என்ற பட்டந்தரித்து வருகிறார்கள். வலையர் என்று சொல்லப்படும் முத்தரையரும், முந்துராசா முந்திரிய ஊராளிக் கவுண்டர் என்பாரும் மூப்பன் என்ற பட்டந்தாங்கியவராவர். பள்ளக் கவுண்டர் பெரிய தேவக் குடும்பன் என்றும் காணப்படுகிறது. இன்னோர் குடும்பர் என்று அழைக்கப்பட்டவராவார்.

செங்கோட்டை என்ற பொதிய மலையின் சுற்று வட்டாரத்திலுள்ள மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள் தம்மை பாண்டியர் என்று உரிமை பாராட்டி, திருவிதாங்கூர் பத்மநாபபுரம் நீதிமன்றத்தில், வழக்குத் தொடுத்து, பாண்டியர் என்ற பட்டம் 'பள்ளர் என்ற மள்ளர் இனத்தார்க்கே' என்று தீர்ப்புப் பெற்றதை அறிஞர் மட்டத்தில் அனைவரும் அறிவர். அவ்வாறு அழைக்கப்பெறும் பாண்டியர் பட்டம் எங்களுக்கும் பங்குண்டு என வற்புறுத்திக் கூறுவோர் ஐந்து சாதியாராவார்கள். 1. மள்ளர், 2. மறவர், 3. வலையர் 4. பரவர், 5. நாடார் என்போராவர். இவர்களும் இவரை ஒட்டிய புதுப் பெயர், பட்டந்தாங்கிய மக்களும் ஒரு சிலர் மூப்பர் என்ற பெயரைப் பயன்படுத்துகின்றனர். தஞ்சாவூர் மாவட்டத்தில் பாபநாசம் தாலூக்காவிலும், திருச்சி மாவட்டம் உடையார்பாளையம் தாலூக்காவிலும் உள்ள 'சுருதிமான்' வகுப்பார் அண்மைக் காலம் வரை மூப்பன் என்று வழங்கினர். இவருள் பொருளாதாரத்தில் முன்னேறியவர் அதை இழிசொல்லாகக் கருதி மூப்பனார் என்று அழைக்க முற்பட்டுள்ளனர். பொருளாதாரத்தில் கீழ்நிலையில் உள்ள இம்மரபினர் மூப்பன் என்றே தொடர்ந்து அழைக்கப்படுகிறார்கள்.

திருச்சி மாவட்டத்தில் தேவேந்திர குலத்தார் வேளாண்மைத் தொழிலுக்கு வேலையாட்களைச் சேர்த்து, வேலை வாங்குபவரை, மூப்பன், காரியக்காரன், கங்காணி, மேஸ்திரி, சூப்பர்வைசர், பண்ணாடி என்றும் அழைப்பதுண்டு. முசிறி தாலூக்கா அரசலூர் கிராமக் கல்வெட்டு ஒன்றில் 'பள்ள மாணிக்க மூப்பன்' (தென் இந்தியா கோயில் சாசனங்கள் தொகுதி 11 எண் 796) என்று பொறிக்கப்பட்டுள்ளது. ஊர்ச் சபைகளுக்கு 'புள்ளிமூப்பன்' 'நாட்டு மூப்பன்' செட்டி மூப்பன் என்ற சமூகத் தலைவர்கள் மள்ளரினத்தின் மத்தியில் உண்டு. தேவேந்திர குல வேளாளர் சமூகப் பஞ்சாயத்து சபைத் தலைவர்கள் ஊர் மூப்பன், ஊர்த் தலைவர் என்று அழைக்கப்படுகிறார்கள். அளவன் என்பார் உப்பளத்தில் பணியாற்றுபவர். அவர்கள் பண்ணையன் மூப்பன் என்ற பட்டம் தரிப்பவர்கள் என்று தென் இந்தியக் குலங்களும் குடிகளும் என்ற நூல் எழுதிய

தர்ஸ்டன் குறிப்பிடுகிறார். செட்டி மூப்பன் என்ற சொல், சேலம் மாவட்டத்தில் ஆத்தூர், முல்லைவாடி, கங்கவல்லி என்ற ஊர்களில் தேவேந்திர குல வேளாளர்களை அழைப்பர் என கோவை தொல்லியல்துறை அறிஞர் கௌதமசித்தார்த்த மள்ளர் கூறுவார்.

ஆக குடும்பர் என்ற தேவேந்திர குல வேளாளர் தம்முள் பாண்டியர், அளவர், கணக்கர், நாட்டார், மூப்பனார் என்போரெல்லாம் குடும்பு முறையில் கட்டுப்பட்ட துறை வாரியத்தின் அங்கம், குடும்பர் குலம் அல்லது கூட்டத்தைச் சார்ந்தவர்கள்தாம் என்பதை அறிவோமாக!

**47. செட்டி மூப்பன்**

**48. நாட்டு மூப்பன்**

**49. புள்ளி மூப்பன்**

**50. வலவன், வளவன்**

**51. வாதிரியார்**

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்"

"செய்யும் தொழில்எல்லாம் சீர்தூக்கிப் பார்க்கின்
நெய்யும் தொழிலுக்கு நிகருண்டோ கண்டீர்"

என்ற பாடல்களுக்குச் செந்தக்காரர்கள் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள். மருத நிலத்தார் தந்நிலத்தையும், ஏனைய நிலத்தையும் ஆட்சி செய்யும் ஆளுமை படைத்தவர்கள். பல்தொழில் வளம் பெருக, நாகரிகத்தின் உச்சகட்டத்தை எய்தியவர்கள். இந்திரபோகம் என்னும் இன்பத்தில் திளைத்தவர்கள். கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்ற போக்கினைக் கொண்டவர்கள்.

இதனையே தொல்காப்பியத் தமிழர் எப்படி இருந்தார்கள் என்று சாமி சிதம்பரனார் கூறுவதைப் பாருங்கள். மருதநிலந்தான் நாகரிகத்தின் பிறப்பிடம், நீர்வளம் நிறைந்த இடத்திலே தான் நாகரிகம் பிறந்தது. நாகரிகத்தின் சின்னந்தான் அரசும்-அரசனும். பண்டைக் காலத்தில் மக்களைக் காத்து, அவர்கள் சமுதாய வாழ்விலே முன்னேற்றத்திற்குத் துணை செய்தவன் அரசனே. மக்களும் தங்களுக்குத் துணை செய்த மன்னவனைத் தெய்வமாக - தெய்வப் பிறவியாக மதித்து வணங்கினர். ஆதலால் வேந்தனையே மருத நிலத்தின் தெய்வமாக வைத்தார்

தொல்காப்பியர். வேந்தர்களில் முடியுடை வேந்தர்களும், குறுநில மன்னர்களும் என்று இருவகையினர் இருந்தனர். குறுநில மன்னர்கள் எல்லாம் முடியுடை வேந்தர்க்குள் அடக்கம். பெருநில வேந்தர்களே பெருநிலக்கிழார்கள். குறுநில மன்னர்கள் அல்லது சிற்றரசர்கள் தோன்றிய மருதநிலத்திலேதான், முதன் முதல் நிலப்பிரபுத்துவம் உண்டாயிற்று. வாணிப வளம் பெருகியது. நுண்கலைகள் பல்கிப் பெருகின. வேளாளர்களே - நிலக்கிழவர்களாக - கிழார்களாக உருமாற்றம் பெற்றார்கள். நாகரிகத்தின் உச்ச கட்டத்தை அடைந்தார்கள். மகிழ்நர்களாக மகிழ்ச்சிக் கடலில் மிதந்தார்கள்.

ஆடையில்லா மனிதன் அரை மனிதன் தானே, பட்டினும் பஞ்சினும் நுண்ணிய வேலைப் பாடமைந்த, நெய்தற் தொழில் பல்வேறு வகையில் தத்தம் திறத்திற்கேற்ப ஏற்றம் பெற்றது. தேவேந்திர குல வேளாளர் மக்கள் - உழு தொழிலே -உயிர் என வாழ்ந்த மக்கள், உண்ண உணவளித்த - சமூகம் - உடுக்க உடையும் கொடுத்தது.

**சோறும் கூறையும்**

**"உண்பது நாழி - உடுப்பவை இரண்டே", "ஆடையில்லா மனிதன் அரை மனிதன்"** என்ற பழமொழிகள் சமூக மாறுதல்களை எதிர்கொள்ளும் போது வெளிப் போந்தவையாகும். திருமணம் செய்யப் புகுந்த மள்ளர் இனச் செல்வன் - தான் நெய்த கூறைச் சேலையை மணமகளுக்குக் கொடுக்க வேண்டும் என்பது ஒரு சம்பிரதாயமாக, மரபாக இருந்ததாம். ஒவ்வொரு மள்ளர் இனத்தாரின் வீட்டிலேயும், கருவுத்தடி, கலப்பை, மேழியும், நுகமும், தாம்புக் கயிறுமாகக் காட்சியளிப்பதைப் போல் தறியும் - தறியடி குழியும் - நூலும் பாவோட்டும் கருவிகளும், ஒவ்வொரு வீட்டிலும் இருந்ததாக எம்முன்னோர் கூறியிருக்கிறார்கள். அந்த வளமை நாளடைவில் அருகிவிட்டது. எள்ளும், வேப்பங் கொட்டையும் இலுப்பங்கொட்டையும், தேங்காயும், கொட்டை முத்துவும் இடித்து குத்தி வழித்து எண்ணெய் காய்ச்சியது எம்மூர்த் தெருவில் என் போன்ற வயதுடையவர்களுக்குத் தெரியும். இன்று சொன்னால் கற்பனைக் கதையாக நினைக்கத் தோன்றும். இதே நிலை தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் கல்வெட்டியல் துறைத்தலைவர் புலவர். செ.இராசு அவர்கள் சேதுபதி செப்பேடுகள் என்றதொரு தொகுதி வெளியிட்டுள் அல்லிக்குளம் செப்பேடு 10.10.1659ல் சேதுநாட்டில் தமி... இசுலாமியர், அராபியர், பட்டுநூற்காரர். இள... பஞ்சுக்காரர், வள்ளுவர், பறையர், பனைஏறி இடையர்...

யாரொருவர் தறி போட்டு நெய்தாலும் நெசவன் ஒவ்வொருவனும் தறி ஒன்றினுக்கு பறி வட்டத்திற்கு ஒரு பணம் தர வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. மற்றும் ஒரு செப்பேட்டில் தூத்துக்குடி, சேதுபதி நாட்டில் துலுக்கர், சோனகர், பட்டுநூல்க்காரர், ஈழும்புஞ்சைக்காரர், வள்ளுவன் பறையன் பனைஏறி, சாணான் ஆகியோர் நெசவுத் தொழிலில் ஈடுபட்டனர். நெசவன் என்ற புதுச் சொல் காணக்கிடைக்கிறது. உழவன், நெசவன், வளவன், வாதுரியான், மள்ளன், பலுக்கன் என்ற நயம் பொருந்திய சொற்கள் காணக் கிடைக்கின்றன. என்னை நீ அதிகாரம் செய்ய கொட்டை நூத்தா சோறு போடறே, என்ற சொல்லின் பொருளே, வீடுதோறும் கொட்டை நூற்பது, துணி நெய்வதற்கே' என்ற கூற்றை மெய்ப்பிக்கும், கொட்டை - பருத்திக் கொட்டை - பஞ்சால் நூற்கும் நூலாகும்.

பரமன் குறிச்சிப் பள்ளர்கள் நெசவுத் தொழில் செய்து வந்தார்கள். வெள்ளையரது வியாபாரச் சுரண்டலினால் இவர்களது நெசவுத் தொழில் நசிந்து போயிற்று என்று கட்டபொம்மன் கதைப்பாடல் என்ற ஆய்வுக் கட்டுரையில் பேராசிரியர் ந.வானமாமலை கூறுவார். இச்செய்தி பால்வாதிரியார் சமூகவரலாறு – பழக்க வழக்கங்கள் என்ற நூலில் விரிவாகப் பேசப்படுகிறது.

வேளாளர்களுக்கு - உழவு, பசுக்காவல், வாணிபம், குயிலுவம் (இசைக் கருவிகளை இயக்குதல்) காருகவினை (நெய்தல் தொழில்) என்று திவாகர நிகண்டு பேசும். கோலிய மள்ளரும், வாதிரியாரும் தேவேந்திர குல வேளாளர்கள் என்பதால் உண்ண உணவும் - உடுக்க உடையும் தந்து நாட்டைப் பாதுகாத்து, செம்மையான ஆட்சி செய்யும் மரபினர் தேவேந்தர் குலத்தார் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

"தமிழகத்தில் ஒன்னரை கோடி மக்கள் தொகை கொண்ட தேவேந்திர குல வேளாளர்கள், மருத நிலப் பண்ணையார்கள். பள்ளர், குடும்பர், பண்ணாடி, காலாடி, மூப்பன், வாதிரியார், பணிக்கன், பனிச்சவன், வாய்காரன், பட்டக்காரர், (பட்டாதாரர்) தேவேந்திர குலத்தார் என்று பல்வேறு பெயர்களில் அரசு பதிவு இதழ்களில் குறிப்பிட்டுள்ளது. இப்பிரிவுகள் அனைத்தையுமே ஒரே பிரிவாக "தேவேந்திர குல வேளாளர்" அல்லது "தேவேந்திர வேளாளர்" என்று அறிவிக்க வேண்டும் எனத் தமிழக சட்ட மன்றத்தில் 4.5.1995 ஆம் நாள் சங்கரன் கோயில் சட்டமன்ற உறுப்பினர் மாவீரன் மானமிகு.

வே. கோபாலகிருஷ்ண தேவேந்திரர் கேட்டுக் கொண்டுள்ளார் (மள்ளர் மலர் சூன் 1995).

தமிழ்நாட்டில் குறிப்பாகத் தூத்துக்குடி, நெல்லை மாவட்டங்களை உள்ளடக்கிய பரமன் குறிச்சியை மையமாகக் கொண்டு சுமார் 50 கிலோ மீட்டர் சுற்றளவிற்குள், நெல்லை மாவட்டத்தில், பொன்னிவாய்க்கால், இராமலிங்கபுரம், நம்பிப்பத்து, வள்ளியம்மைபுரம், அருளானந்தபுரம், மடப்புரம், மகிழ்ச்சிபுரம். தூத்துக்குடி மாவட்டத்தில் பரமன் குறிச்சி, சாயர்புரம், தூத்துக்குடி, வேப்பலோடை, திருவைகுளம், பனையூர், விளாத்திகுளம் (சூரன்குடி) குமரிமாவட்டத்தில் தெங்காம்புதூர், இராமநாதபுரம் மாவட்டத்தில் செவல்பட்டியிலும் சுமார் 25000 வாதிரியார்கள் வாழ்கிறார்கள். பிற சாதியினர் இவர்களை, இவர்தம் குடியிருப்பை பள்ளர், பள்ளக்குடி, பள்ளச்சேரி, பள்ளபட்டி, பள்ளபாளையம் என்றே அழைத்து வருவதாக தேவேந்திர குல வேளாளர் சாதியைச் சார்ந்த வாதிரியார் பிரிவு - வேந்தர் குடி த.செயக்குமார் தேவேந்திரர், பாரத ஸ்டேட் வங்கியின் மேலாளர் உறுதிபடக் கூறியதில் எவ்வித சாட்சியமும் வேண்டியதில்லை. கோலிய மள்ளர் என்போரும் வாதிரியார் என்போரும் உண்ண உணவும் உடுக்க உடையும் கொடுப்போர். இவர்கள் வேளாண் தொழில் செய்தவராவார். இவர்கள் வாழும் கரிசல் மண்ணில் பருத்தி விளையும். தேவேந்திரகுல வேளாளர்கள் பருத்தியில் எடுத்த கொட்டையையும், பஞ்சுத்திரட்சியில் சந்தையில் விற்று, மாற்றுப்பண்டங்கள் வாங்குவதாக போடி, மீனாட்சிபுரம், தேனி, தேவாரம், கம்பம் போன்ற பகுதிகளில் நாட்டுப் பாடல்களாக மக்கள் மத்தியில் பாடப்பட்டு வருகிறது.

## 52. வாய்க்காரர் - வயற்காரர்

'செய்' என்றால் வயல் என்று பொருள். நன் செய் என்றால் நல்ல விளைச்சலைத் தருகின்ற ஒருபோகம் இருபோகம் என நெல் மகசூல் காணும் நிலம் என்பதாகும். முப்போகமும் நெல் நடவு செய்யும் வயலும் வயற்காடும் உண்டு. காவேரி என்றும் பொன்னி என்றும் போற்றப்படும் வற்றாத ஜீவநதி பாயும் இடம் தஞ்சைத்தரணி. தஞ்சைத் தரணியில் திருத்துறைப் பூண்டி, களப்பால், பட்டுக்கோட்டை என்ற ஊர்கள் மற்றும் அதன் சுற்றுப் புறங்களை நெற்களஞ்சியமாக உருவாக்கியவர் தேவேந்திர குல வேளாளராவார்கள். இப்பகுதிகளில் பழனத்தில் உழும் மள்ள உழவர்களுக்கு வாய்க்காரர் என்று பெயர். பாதகம்

செய்பவர்களைக் கண்டால் பயங்கொள்ளாது, மோதி மிதித்து அவர் முகத்தில் உமிழும் நெஞ்சுரங் கொண்டவர்கள். உரிமைக்குக்குரல் கொடுப்பதோடு, உறவுக்குக் கைகொடுப்பவர்கள். களப்பாள் களமார்கள்.

வாய்க்காரர் என்ற சாதியாரின் பெயர் இடுகுறிப்பெயரா? காரணப் பெயரா? என்று ஆராய்ந்து பார்த்தால், வாய் கொடுத்து, வாதம் பண்ணி வம்பு வழக்குச் செய்து இவர்களிடமிருந்து மீள யாரால் முடியும் என்ற விடை கிடைக்கும் என்றாலும் வேறு பொருளுமுண்டு என்று, மதுக்கூர் காளிமுத்து தேவேந்திரர் மள்ளர் மலரின் மூலம் விளக்கம் தருகிறார்.

சேர சோழ பாண்டியர் என்று சொல்லக்கூடிய மூவேந்தர் குடியில் வந்த மூத்த குடிதான் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள். சோழநாடு சோறுடைத்து என்று செம்மாந்து கூறக்காரணம், சேற்றுக்கால் செல்வர்களாகிய மள்ளர்கள் தத்தமக்குச் சொந்தமான வயல்களில் வேளாண் தொழில் செய்து வெள்ளாமை செய்ததால் தான் வந்தவர்க்கு இலை விரித்து, இனி வருகின்றவர்களுக்கு உலை வைத்து உண்ண உணவும், உடுக்க உடையும் கொடுப்பவர்களாயிருந்ததுதான்.

ஒரு காலத்தில் தமிழ் நாட்டிலுள்ள வயல்களுக்குச் சொந்தக்காரர்களாகயிருந்து பெரும்நிலக்கிழார்களாக இருந்த, பண்ணாடிமார்கள், மூப்பனார்கள், குடும்பனார்கள், நாயக்கர்கள் தத்தம் உடமைகளை இழந்து, ஒட்டாண்டியானார்கள். வயலுக்குச் சொந்தக்காரன் வாரத்திற்கு ஓட்டுகிறான். குடகூலி செய்கிறான். பருவம் பார்க்கிறான், தண்ணி கட்டுகிறான், அடே ராமப்பையா...

சமுதாயத்தில் அடக்கு முறைக்கு ஆளானாலும், ஆண்ட பரம்பரையினர் ஆளுமையை முற்றாக விட்டுவிடவில்லை. எதிர்த்துப் பேசுகிறார். வாயடிக்கிறார். எனவே, அவரை வாயாடி, வாய்க்காரர் என்று கூறுவதோடு, சோழ மன்னர் ஆண்ட காலத்தில் வயல்களுக்கு சொந்தக்காரர்களாக இருந்தோம், அதனால் வயல்காரர் என்ற பட்டம் கிடைத்தது. அது மருவி வாய்க்காரர் ஆனது என்றும் கூறுவார். வாய் என்பது ஏரி அல்லது அணையிலிருந்து தண்ணீர் வெளிவரும் மதகுப்பகுதிக்கு தூம்பு என்ற பெயராகும். அதையும் அதன் வழியாக வரும் நீரையும் கட்டுப்படுத்துபவர் வாய்க்காரர், அதற்கு உரிமையுடையவர் வாய்க்காரர் எனவும் கூறுவர். வாயிலிருந்து பாசன நீரைக்கொண்டுவருவது வாய்க்கால்(கால்வாய் என்பது பொருளற்றது.

தொழிலை அடிப்படையாக வைத்து மக்களுக்குள் பிரிவுகள் ஏற்பட்டு வந்த நிலைமாறி, சாதிகள் என்னும் நிலை உருவானதை, சோழப் பேரரசு காலத்தில், தெளிவாகக் காணமுடிகிறது. இச்சாதிப் பிரிவுகள் காஞ்சிபுரத்தை மையமாக வைத்தே தோன்றியதாகப்பல சாதிவிளக்கச் சுவடிகள் மூலம் அறிகிறோம். பல்லவர் காலச் சோழர்கள் தொண்டை நாட்டை ஆட்சி செய்தபோது, சாதிகள் வலுப்பெற்று முதலாம் இராசராசன் காலத்தில் கால்கொண்டது எனவும் ஊகிக்கலாம்.

வேற்று நாட்டினர் வரவும், உள்ளூர் ஆதிக்கச் சாதிகளின் சூழ்ச்சியும் நம்முடைய உடமைகள் நம்மைவிட்டு ஒவ்வொன்றாக, பறி போனது என்று டாக்டர் க. கிருஷ்ணசாமி எம்.எல்.ஏ தமிழ் நாட்டுச் சட்ட மன்றத்தில் தெளிவாக வலியுறுத்திக் கூறினார்கள். நிலக்குடி மக்களாகிய உழக்குடிமக்களாம் தேவேந்திர குல வேளாளர் தம் விளைகழனி விளைவிப்போர், மண்ணுக்குச் சொந்தக்காரர்கள். ஆதிக்க சாதியார்கள்- அடாவடிப்போக்கால் வேளாளக் கட்டுமானத்தால் தம் உடமையைப் பறிகொடுத்ததால், வயிறெறிந்தனர், எனவே வாய்க்காரர் 'வயல் வள மள்ளர்' - எனத்திருவாரூர் கமலாலய புராணம் கூறுகிறது.

"தேர்வேந்தர் போர்க்களத்தில் சிலர் வெல்வர் சிலர் தோற்பர். ஏர்வேந்தர் போர்க்களத்தில் இரப்பவரும் தோலாரே" என்ற தோலாமொழியை நினைவுகூர்ந்து, நிமிர்ந்து நிற்கலாம்.

## 53. வாரியன்

## 54. வெண்களமர்

## 55. வெள்ளாளர் / வெள்ளாள தேவேந்தர், குன்னத்தூர்க் கோயிலில் வரையப்பட்ட கல்வெட்டு எண் 205/210/8167-68

## 56. வேந்தர் (பெருங்குடி வேந்தர்)

## 57. வேள்

வேள் என்றால் மண் என்று பொருள். மண்ணைப் பயன்படுத்துவோர் ஆட்சி செய்வோர்; வேள் + ஆளர் = வேளாளர் என்பர். வேளார் என்றும் வேட்கோ என்றும் மண்ணுக்கு உடையாராக இருத்தலால் மண்ணுடையார் என்றும் பொருள் கொள்ளுதலும் உண்டு. இன்னோரை வேட்கோ குயக்கோ, உடையார் என விரிப்பர். வெள்ளத்தை

முறைப்படுத்தி ஆட்சி செய்வோர் வெள்ளாளர் என வழங்குதலுமுண்டு. ஆக நிலத்தையும் நீரையும் பயன்படுத்தும் முறை ஏரின் உழுநர்க்கு இயல்பாய் அமைந்ததொன்றாகும். நிலத்தை இருவகையாகப் பிரித்து வளம் நிறைந்த, நீர் நிறைந்த பழனத்தை நன்செய் என்றும் வளங்குறைந்த மேட்டாங்காட்டை புன்செய் என்றும், பெயரிட்டு வழங்குவர். நீர் நிறைந்த ஆற்று, குளத்துப் பாசனங்களையுடைய பழனங்களில் பயிரிடுவோர் வேளாளர் என்றும் காருக்காகத் காத்திருக்கும் கார்காத்தார் புஞ்சை வெள்ளாமையைச் செய்யும் உழவர்களை வெள்ளார் என்றும் வகைப்படுத்தியுள்ளனர். அதுமட்டுமல்ல இவர்களை வளமையர், சதுர்த்தர், களமர், மேழியர் வேளாளர், ஏரின் வாழ்நர், காராளர், புனைஞர், பின்னவர் என்று பல பெயருக்கு உரியவர்களாக நிகண்டுகள் கூறுகின்றன. மண்மகள் புதல்வர்களாகிய இவர்களை மண்ணில் ஆடிப்பாடி தொழில் செய்வோரை 'மண்ணாடி' என்று அழைக்கப்படுகின்ற நிலையும் காண்கின்றோம். மண்ணாடி - பண்ணாடி என்ற சொற்கள் ஒரு சொல் நீர்மையன. பொதுவாக மண்ணின் கூறுபாடுகள் பலதரத்தன, செம்மண், களர்மண், களுப்பு மண், உவர்மண், சதுப்புமண், களிமண் எனப் பலவகையினதாகும். மண்ணின் நிலைக்கு, தன்மைக்கேற்பவே இன்னபயிர் இந்த மண்ணிற்கு ஆகும் - ஆகாதென வேளாண் தொழில் வளமையர், நிபுணர்கள் அனுபோக அறிவு பெற்ற களமர்கள் முடிவெடுப்பர். மேழி பிடிக்கும் ஏராளர்கள் ஆகிய களமரே இறுதி முடிவெடுக்கும் சதுர்த்தராவார்.

மருத நிலத்து மக்களாகிய பண்ணாடி என்ற பட்டந்தாங்கிய தேவேந்திர குல வேளாளர்களை பாலக்காடும் அதற்கு அண்மையில் உள்ள நல்லே பிள்ளைச் சித்தூரும் இம்மக்களுக்கு வாழ்விடமாக அமைந்த வரலாறு சுவையானது. என்றாலும் கோவையும் அதனை ஒட்டிய பகுதிகளிலும் 'மண்ணாடி' என்று அழைக்கப் பெறும் மக்கள் வாழ்கிறார்கள். ஆழமாக விசாரித்த அளவில் இன்னோர் கொங்கு நாட்டில் வாழும் குடிமக்கள் என்பது உறுதியாயிற்று. இன்னோர் கொங்கு வேளாளர் என்றும், தேவேந்திர வேளாளர் என்றும் அழைக்கப் பெறும் தொடர்பு கொண்டவராகக் காண்கிறோம். மள்ளராகிய தேவேந்திர குல வேளாளர்களுக்குப் பண்ணாடி என்ற பட்டம் கோவை, சேலம், ஈரோடு போன்ற மாவட்டங்களில் வழங்கப்படுகிறது. மண்ணாடி என்ற சொல்லும் பண்ணாடி என்ற சொல்லும் பெரும்பாலும் உச்சா பேதத்தால் வேறுபட்டு, பண்ணை

என்றால் நிலம், புலம், வயல், மண் என்ற பொருள் தருவதைப் போல் மண் என்ற சொல்லும் நிலம், புலம், வயல், மண் என்ற பொருளைத் தருவதாக உள்ளது. 'ப' கரம் மகரமாக மாற்றம் பெறுவது ஒன்றும் புதியதல்ல. எனவே மண்ணாடி என்போர் பண்ணாடி என்பதில் எள்ளளவும் ஐயமில்லை என்பதை உறுதிப்படுத்தினர். இந்தக் கருத்தை பேரறிஞர் தேவஆசீர்வாதம் அவர்கள் "மண்ணாடி என்ற சொல் மன்றாடியின் திரிபு என்பர். மன்றாடி என்பது மன்றம் + ஆடி ஆக மன்றத்திற்குத் தலைவர் என்று பொருள் கொள்ளலாம். மன்றாடியின் தலைமை அதிகாரம் 'மன்றாட்டு' எனப்படும். இது 'மன்னாட்டு' எனமாறி, இன்று 'பன்னாட்டு' எனத்திரிந்துள்ளது. 'பன்னாட்டுப் பண்ணுகிறான்' என்பது உலக வழக்கு. தமிழ் வேந்தர் ஆட்சிக் காலத்தில் ஊர்ச் சபைகளை மன்றம் என்றும் வழங்கிவந்தனர். இடைக்காலத்தில் இம்மன்றங்கள் பல வாரியங்களாகப் பிரிக்கப் பட்டு, பொறுப்புகள் கவனிக்கப்பட்டு வந்தன. எல்லாக் காரியங்களையும் ஒருங்கிணைந்து செயலாற்றுவது குடும்பு, வாரியம் என வழங்கப்பட்டது. ஆக குடும்பன், மன்றாடி என்ற சொற்கள் ஒரு பொருளையே குறிக்கும். மண்ணாடி என்ற சொல்லும் மன்றாடியின் திரிபாயிருக்கலாம். மன்றம் என்னும் சொல்லுக்குச் சபை, நியாய சபை, ஊருக்கு நடுவாயுள்ள மரத்தடிப் பொதுவிடம் முதலிய பொருள்கள் தமிழ்ப் பேரகராதியில் இடம் பெற்றுள்ளது. பொது சபையில் வழக்கினை எடுத்துப் பேசுவோர்க்கும், வழக்கினைத் தீர்ப்பவருக்கும் மன்றாடி என்றுபெயர் வழங்கியதாக தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் கல்வெட்டியல் துறைத் தலைவர் புலவர் செ. இராசு கூறுவார். "பழைய மன்றாடி போலுமிவன்" எனப் பெரிய புராணம் பேசும். ஊருக்குப் புறத்தே பரந்துபட்ட பாழிடம் இருக்கும். அவ்விடத்தை புறம்போக்கு என்பர். புறம்போக்கு என்பது, பலத்தரத்தனவாகும். புறம் போக்கு என்றால் Unauthorised Land என்று பொருள். இதனையே மந்தைவெளி என்பர். ஆடுமாடு, கன்று காலிகளை மேய்ச்சல் காட்டுக்கு ஓட்டிச் சென்றுவிட்டு வரும்போதும் போகும்போதும் தலைச்சேருகின்ற இடமே மந்தைவெளியாகும். இவ்விடத்தை பேராசிரியர் டாக்டர் ந. சுப்பிரமணியம் அவர்கள் மன்றம் என்றும் சிற்றூரின் நடுவில் ஒரு பெரிய மரத்தடியில் அதைச் சுற்றி அமைக்கப்பட்ட திண்ணை, இந்தத் திண்ணை ஒரு மேடை போன்றிருக்கும். ஆகவேதான் பிற்காலத்தில் நாடக மேடைகளை மன்றம் என்றனர். இம்மன்றத்தில் கிராமத்திலுள்ள இடையர்கள் தங்கள் மாடுகளைக்

கொணர்ந்து கட்டி வைப்பர். ஆதலால் மாட்டிடையர்களுக்கும் மன்றாடிகள் என்னும் பெயர் உண்டு என்று கூறுவார்.

வேளாண் தொழில் செய்பவர்களை உழுதுண்பார் - உழுவித்துண்பார் என்று கூறுபடுத்திப் பார்ப்போர் மன்றாடி என்ற சொல்லினை, தனக்காக மன்றத்தில் மன்றாடுபவரும், பிறர்க்கென மன்றாடுபவரும் என்றும் ஏன் பார்க்கவில்லை? ஊர் மன்றத்தில் 'வழக்கில் தோற்று தண்டம் வைப்பர்' தண்டம் செலுத்த ஏலாதவர் தாளாது 'தாளாது' என அட்டம் விழுவர். அவ்வாறு அட்டம் விழ விழ தண்டம் குறைக்கப்படும். அன்னோரை மன்றாடி எனத் தேவேந்திர குல வேளாளர் ஊர்ச் சபைக் கூட்டத்தில் அழைக்கப்படும் சொல்லாகப் பயன்படுகிறது. "மன்றாடி" குறை இரந்து கேட்போர், கெஞ்சிக் கேட்போர் என்ற பொருளுடைய சொல்லாகவும் கொள்ளலாம். ஆக, பண்ணாடி என்ற மதிப்புள்ள சொல் நிலபுலம் நிறைந்த நிலக்கிழாராகவும் மண்ணாடி என்ற சொல் மண்ணளந்த உழவராகவும் களமராகவும் கொள்ளலாம். முருகன், மன்மதன், தேவேந்திரர், திருமால், இருங்கோவேள் முதலிய மள்ளர் இனத்து மன்னர்கள் இலக்கியங்களில் வேள் என்று சுட்டப்படுகின்றனர்.

## பலநாட்டுக் குடும்பர்கள்

### 58. அகத்தியக் குடும்பர்

### 59. குளமங்கல நாட்டுக் குடும்பர்

### 60. தலைக்கா நாட்டுக் குடும்பர்

### 61. துவராபுரி நாட்டு குடும்பர்

பதினெண் வேளிர் குடும்பங்களை துவராபுரி நாட்டிலிருந்து அகத்திய முனிவர் அழைத்து வந்து குடியமர்த்தியதாக கபிலரின் புறநானூற்றுப் பாடலுக்கு (201) விளக்கவுரை எழுதிய ஆசிரியர்கள் கூறுவார்கள். 'நத்தம் செப்புப் பட்டயம்' - கி.பி. 1728 (தமிழர் பண்பாட்டு வரலாறு - 1996) துவாரபுரிக் குடும்பர்கள் பற்றிக் கூறுகிறது. துவராபுரி நாடு என்பது இங்கு தமிழகத்தின் ஒரு பகுதியாக இருந்திருப்பது தெரிகிறது.

புறநானூறு பாடல் 77ம், அகநானூறு பாடல் 36ம் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை எதிர்த்து வந்த ஏழு 'வம்ப மள்ளர்' இரு

பெரும் வேந்தராகிய மாந்தரஞ்சேரல் இரும்பொறை, செம்பியன் (சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்னும் ஐம்பெரும் வேளிர் திதியன், எழினி (அதியமான் நெடுமானஞ்சியின் மகன்), இருங்கோவேள், எருமையூரன் (எருமை வெளியன்) மற்றும் பொருநன் எனப் பட்டியலிடும். இருங்கோவேள் 'புலிகடிமால்', புலியை வென்ற மல்லர் என்றும் கூறப்படுகிறார். இந்த இருங்கோளர்கள் குடும்பர் என்று கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறார்கள். தென்னிந்தியக் கோயில் கல்வெட்டுகள் தொகுதி 5 எண் 278-இல் இடைக்காலச் சோழ மன்னனான வீரராஜேந்திர தேவரின் 10-ஆவது ஆண்டில் மதுரை மாவட்டம் மேலூர் வட்டம் பொங்கலூற்கா நாட்டு கீரனூரில் வாழ்ந்த (குடும்பர்) குடுபர் சுந்தன் அதிசய சோழனான குலோத்துங்க சோழ இருங்கோளன் திருவாகீஸ்ரமுடையார் கோயிலுக்கு நிலங்கள் விட்டது பற்றிக் கூறும்.

இதே குடும்பர் சுந்தன் அதிசய சோழனான குலோத்துங்கச் சோழ இருங்கோளரின் இருமனைவியர் ரவி கூத்தாண்டியும் இளையாண்டியும் மேற்படி கீரனூர் திருவாகீஸ்வரமுடையாருக்கு நிலங்கள் கொடையாகக் கொடுத்தது பற்றி தென்னிந்தியக் கோயில் கல்வெட்டுகள் தொகுதி 5 எண்கள் 573 மற்றும் 266 கல்வெட்டுகள் கூறுகின்றன.

துவராபுரிக் குடும்பர்கள் என்பார் இந்த இருங்கோளர் வம்சத்தில் வந்தவர்களாகும்.

## 62. பளுவஞ்சி நாட்டுக் குடும்பர்

## 63. பாலக்கரை நாட்டுக் குடும்பர்

## 64. பெருமா நாட்டுக் குடும்பர்

## 65. பொய்கை நாட்டுக் குடும்பர்

## 66. வளநாட்டுக் குடும்பர்

# கூட்டமுறைகள்

நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற பஞ்சபூதங்களில் கூட்டுச் சேர்க்கையே பிரபஞ்சம், இப்பிரபஞ்சத்தின் ஒரு பகுதியே இவ்வுலகம். இவ்வுலகமானது மாற்றத்திற்கு உட்பட்டது. மாற்றங்களே இவ்வுலகினை இயக்கவல்ல இயங்கியலாகும்.

முப்புறமும் கடலால் சூழப்பட்ட திரையிடமே திராவிடம் என்றும், தமிழகம், தமிழ்நாடு என்றும் பேசப்படும் நாடாகும். தமிழ்நாட்டில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நானிலமும் பாலை என்ற முறைமையில் திரிந்த நிலத்தையும் சேர்த்து ஐந்தாகப் பகுத்து, நானிலம் ஐந்திணை எனக்கூறுவர். இப்பரந்து பட்ட நிலத்தில் வாழும் மாந்தர் தமிழர் என்று அழைக்கப்படுகிறார்கள்.

நானிலத்தில் ஐந்திணையாகக் கொண்டு வேந்தராக வீற்றிருப்பவர் மருதநிலம்வாழ் மள்ளராவார்கள். "சங்க இலக்கியங்களிலும் இடைக்கால இலக்கியங்களிலும், மன்னர்களாகவும், படை மறவர்களாகவும், தலைமக்களாகவும் கடவுளர்களாகவும் மருதநில மள்ளர் சிறப்பாகச் சித்தரிக்கப்பட்டுள்ளார்கள் என்பார் 'பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபு என்ற நூலினையாத்த டாக்டர் சு. வேங்கடராமன். இக்கூற்று ஏற்புடைத்தே. எந்தவொரு வேந்தனும் தனது ஆட்சி, அதிகாரத்தை நிலைநிறுத்த, தன்னைச் சார்ந்தவர்களை புடைசூழ வைத்துக்கொள்வர். நானில ஐந்திணை மக்களின் நடுநாயகமாக - மருதநிலத் தலைமகன் - "வேந்தன் மேயத் தீம்புனல் உலகம் என்ற வளப்பம் மிகுந்த நாட்டைத் தன்பரிசனத்தால் உணவளித்துக் காத்து செங்கோல் ஆட்சி செய்து வந்தார்.

'ஏரோர் களவழியன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும்

- தொல்காப்பியம், புறம். 24.

என்ற நூற்பா ஏர்க்கள, போர்க்கள இயைபினைச் சுட்டும். இங்கு ஏரின் உழவரே போர்க்கள மள்ளர்களாகவும் விளங்குவதால், ஏரையும் போரையும் இணைத்துக் காட்டி இலக்கணம் செய்துள்ளார் தொல்காப்பியர். செந்நெற் கதிரோடு, அறுகையும் குவளையையும் கலந்து தொடுத்த மாலையை மேழியே கட்டிப் பாரை இரண்டாகப் பிளப்பாரைப் போற்றுவார் தொழப் பொன்னேர் பூட்டி நின்றோர் ஏரைப்பாடும் ஏர்மங்கலம் என்று துறைவிளக்கப்

தருவதைப் போல் குடை மங்கலம், வாள் மங்கலம், மண்ணுமங்கலம் போன்ற தோர் துறையாகும் என்று பேராசிரியர் டாக்டர். தே. ஞானசேகரன் கூறுவார். எனவே தொல்காப்பியர் கூற்றுப்படி ஏர்க்கள மள்ளரும் போர்க்கள மள்ளரும் ஒருவரே ஆவார். இது பற்றியே

"அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்"

எனத் திவாகர நிகண்டும்

"செருமலை வீரரும் திண்ணியோரும்
மருதநில மாக்களும் மள்ளர் என்ப"

எனப் பிங்கல நிகண்டும்,

"ஏராளர் நாட்டும் வாளுழவர் மள்ளர்
செயமிகு மறவர் தானைத் தலைவர்"

எனச் சூடாமணி நிகண்டும்,

மருதநிலத்தை ஆட்சி செய்த இனத்திற்கு, உழைத்த உழவர்க்கு களத்தில் பொருத களமர்கட்கு மள்ளர் என்று தனிச் சிறப்பான தொரு பெயரிட்டழைத்தனர்.

இது பற்றியே தமிழிலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்) என்ற அரிய நூலை யாத்த மள்ளரிய டாக்டர் குருசாமி சித்தர் "தமிழ் மன்னர்கள் மாறன்குடி, வழுதிகுடி, செழியன் குடி, அந்துவன்குடி, குட்டுவன் குடி, பொறையன் குடி, வளவன் குடி, என்றும் சந்திரன் குலம். இந்திரன் குலம், சூரியன் குலம், அக்கினி குலம் என்றும் ஏதோ அவர்கள் தனித் தனி இனம் என்பது போல மள்ளர் இனம் என்பதை மறைக்கக் கூறுவதற்கு ஒரு முடிவு கட்ட, மள்ளர்/மல்லர் என்ற சொல் ஒரு மரபு, இனம், வம்சம், குலம், சாதி என்ற சொற்கள் ஒரு பொருளையே குறிக்க உபயோகப்படுத்தப்பட்ட சொல்லாகும்" என்று தெளிவாக வரையறுத்துக் கூறுவார்.

வந்தவர்க்கு இலை விரித்து, இனி வருபவர்கட்கு உலை வைத்து, உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் செய்யத் தொழிலும், தொழில் செய்ய கருவிகளும் தந்தவர் மள்ளர். அத்தகு உபகாரம் செய்தவர்க்கு 'வேளாளர்' என்று பெயராகும். இவரே பசுங்குடி பன்னிராயிரவர் வேளாண்மை என்றாலே உபகாரம் என்று பொருள். வேளாளன் என்பான் விருந்திக்க உண்ணாதான். ஏருடையான் வேளாளன் என்றும் கூறுவர்.

கொங்குப் பாண்டியன் சுந்தர பாண்டியன் காலத்தில் குன்னத்தூர் கோயிலில் வரையப்பட்ட கல்வெட்டு "வெள்ளாள தேவேந்திரர்" என்று குறித்துள்ளது. (கல்வெட்டு எண் 205/201/8/67-68). வீரபாண்டியன் காலத்தில் பெருமாநல்லூரில் வரையப்பட்ட கல்வெட்டில் சிறியன் செயங்கொண்ட சோழ காமிண்டன் என்ற வெள்ளாள தேவேந்திரர் குலத்து படைத்தலைவர் முகமண்டபத்தில் ஐப்பசி மாதத்தில் விளக்கு எரிக்க கொடுத்த 'பழஞ்சாலகை அச்சு, தர்மம் பதிவாகியுள்ளது. (கல்வெட்டு எண் 212/ 65-66. கொங்கு வேளாளர் வரலாற்று ஆசிரியர் திரு டி.எம். காளியப்பா, 1992 - பக் 143).

இது பற்றியே கட்டி மகிபன்பள்ளு 13ஆம் பாடலில் "சிறைபட்ட அண்ட சராசரத்தில் உள்ள அனைவர்க்கும் ஆங்காங்கே நெற்பயிர் விளைவித்து, உணவு உற்பத்தி செய்து, தருமம் செய்து, ஓங்கு புகழ் தரித்து வரும் உழவர் குலம். கங்கை குலத்தோர்க்கு உழவு செய்யும் நுகம், ஏர், மேழி முதலியன கொடுத்து அவர்களை மேன்மையுறச் செய்த குலம், சூழ்ந்து போர் செய்யும் தானைகளையுடைய மன்னர்களுக்குப் போர்மறவர்களாக ஆதிக்கம் உள்ள குலம், படையை ஆட்சி செய்யும் குலம், படைவகைகளை, போர் முறைகளை வகுக்கும் குலம் தேவேந்திரப் பள்ளர் குலம் என்கிறார்.

தளைக்குஞ் சராசரமு முளைக்கும் நெல் முளை கொண்டு
தருமம் புவியோங்கியே தரிக்கச் செய்தேன்
கிளைக்குந் தினத்திலொரு தினத்திற்கு உழுநுகப்போர்
கீர்த்தியுடன் கொடுத்து மேட்டிமை செய்தேன்
வளைக்குந் தானை மன்னவர்க்கு அதிகப் படையாதிகம்
வகுக்கும் மதி தேவேந்திரப் பள்ளனும் நான்

- கட்டிமகிபன் பள்ளு, பாடல் 13

என தன் சுத்துவக்கும் இன்பத்தை விதந்து பேசுகிறது.

கி.பி. 1528ஆம் ஆண்டைய பழனிச் செப்புப் பட்டயம் மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர்களுக்கு பன்னீராயிரம் கோத்திரங்கள் உள்ளன என்று எண்பதிற்கும் மேற்பட்ட உட்பிரிவுகளைப் பட்டியலிடுகிறது. வட வேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்திலும் கடல் கடந்த தமிழீழத்திலும் பல பகுதிகளில் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பெற்று வருகிறார்கள்.

மள்ளர், உழவர் வேளாளர், வெள்ளாளர், பள்ளர், குடும்பர், பண்ணாடி, பலகான், காலாடி, மூப்பன்,

பணிக்கன், ஆற்றுக்காலடியர், வாய்காரன், வாதிரியார், நாட்டார், அளவர், கணக்கன், நோக்கர், தொண்டைமான் எனப் பல்வேறு பெயர்கள் ஆய்வாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டு வருகிறது. கல்வெட்டு, செப்புப்பட்டயம், இலக்கியம், ஓலைச்சுவடி, நாட்டார் வழக்காற்றில் மேலும் மேலும் புதிது புதிதான சான்றாதரங்கள் காணக் கிடைக்கின்றன.

காடு திருத்தி நாடாக்கி வயல்வளம் சேர்க்கும் உழக்குடி மக்கள் பசிப்பிணி நீக்கும் மருத்துவனாகிய மருத நிலத்தலைமகன், 'ஆதாரமாகிய நீரனைத்தையுமே சார்புறத் தாங்குவது பள்ள மதற்குரிய தன்மையால் பள்ளனெனச் சாற்றும் பேர் பெற்று, மருத நில தேவேந்திர குல வேளாளன், 'தேவேந்திரப் பள்ளனும் நானே', 'புரந்தரன் குலமும் நானே', 'வெள்ளாள தேவேந்திரர்" என்று பள்ளு நூல்களாலும், கல்வெட்டுக்களாலும் பெருமை பொங்கப் பேசப்படுவதனாலும் பள்ளு நூல்களுக்கு முந்திய பழனிச் செப்பேட்டினாலும் அறியலாம்.

ஆதியில் உங்களை யெங்கள் பிள்ளையாக யெடுத்துக்
கொண்டபடிக்கு உங்கள் வயத்தில் பிறந்த பிள்ளைகளுக்
கெல்லாம் யெங்களுடைய தேசத்தில் காணி பூமிகோயில்
குளம் கல்வெட்டி காணி கொடுக்கிறோம்

- பழனிச் செப்புப் பட்டயம்

என்று கல்வெட்டி காணி செய்து கொடுத்தார்கள். அவ்வாறு கொடுக்கப்பட்ட அனைத்துக் கொடைகளையும் பெற்றவர் வள வாழ்வு வாழ்வதைப் பள்ளு நூல்களும் பல்வேறு வகையாகக் குறிப்பிடக் காண்கின்றோம்.

கலப்பையாவும் வணிகர்கைக் கொண்டனர்
காணுங்காலை நகைப்பையாவென்பார்

- பொய்கைப்பள்ளு 101

............... மேழியை
விந்தை யாகிய வேளாளர் எங்கள்
விருதென்றே கொண்டு போனார்

- செங்கோட்டுப்பள்ளு 427-28

............. மேழியை இப்புவி
நாட்டுக்கங்கைக் குலத்தோர் கொடுபோனார்

- திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளு - 83.

விருதுக்கே காரைக் காட்டார் வழக்கிட்டு மேழி
சேரமுன் வேண்டியே கொண்டார்.

- முக்கூடற்பள்ளு

வயல் வள மள்ளர், - நிலவுடமைப் பள்ளர் - நெல்மலி நீர்நாடர். வளம் இழந்து வறியவர் ஆனார். "சேர, சோழ பாண்டிய ராசாக்கள் தெய்வேந்திர குல வேளாளர்களுக்கு காணியாட்சி நிறுவிக் கொடுத்ததைக் கூறும் "மோரூர் நல்லபுள்ளியம்மன் பள்" பண்ணை ஆண்டையாகிய பண்ணையார் மள்ளர் குலத்தில் ஒரு உட்பிரிவாகிய பண்ணாடி என்று குறிப்பிடுகிறது.

செந்நெல் செழித்தோங்கச் செய்யவென்று பண்ணாடி
தன்னுடைய பள்ளனுக்குப் பாக்கிலைத் தந்தானே

மோரூர் நல்லபுள்ளியம்மன் பள்ளு, பாடல் 115

மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள் தம் குலமும் முறையும் செய் தொழில் வேற்றுமையால் பல் பெயர் தாங்கினர். அது இடுகுறிப் பெயராகவும் பொதுப் பெயராகவும் காரணப் பெயராகவும் சிறப்புப் பெயராகவும் அழைக்கப் பெறுகின்றன. அவ்வாறு அழைக்கப்படும் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் பெயர்களைப் பாகுபடுத்தி, பல்வேறு அறிஞர்கள் தத்தம் நுண்மாண் நுழைபுலத்தால் கண்ட செய்திகளைத் தொகுத்துக் காட்ட விழைகின்றோம்.

தமிழகத்தில் நாயக்கர் ஆட்சியில் கோயில் கட்டும் பணியில் தீவிரமாக ஈடுபட்டனர். மக்கள் ரத்தநாளங்களில் எல்லாம் இறைப்பற்றும் மதப்பற்றும் சூடு குறையாமல் பாதுகாக்கப்பட்டது. ஆளவந்தாரின் ஆதரவால் ஆதாயம் தேடும் புலவர்கள் கவிஞர்கள் பாதுகாப்புக் கேடயமானார்கள். நாட்டில் கொடிய பஞ்சம் ஏற்பட்டாலும் வரி வட்டி என்னும் பெயரால் வசூல் செய்தனர். ஆதிக்கச் சாதியாரும் அடாவடிச் சாதியரும் தடி எடுத்தவன் தண்டக்காரன்' என்றாகி உழக்குடி மக்கள்தம் நிலங்களைக் கவர்ந்தனர்.

நீராயத்தைப் பெருக்காமல் நீராணியத்தை வளர்க்காமல் குளந்தோண்டாமல், கண்மாயைத் - தூரெடுக்காமல் விவசாயம் நலிந்தது. விதை நெல்லைக் குத்தித் தின்னும் நிலை ஏற்பட்டது. விவசாயிகள் சமூக நிலையில் தாழ்த்தப்பட்டனர். வீழ்குடி உழவர் வித்துண்டாங்கு என்ற சொல்லடைவுக்கு ஏற்ப மள்ளர் மக்கள் நிலை வீழ்ச்சியுற்றது.

நாடுகாவல், ஊர்க்காவல், பருவக்காவல், குளக்காவல் கோயில்காவல் - எல்லைக்காவல் என்ற பெயரால் ஆடுமாடு, கன்று காலி, விளைகதிர் கண்டு முதல்களைக் கவர்ந்தனர்.

கொள்ளை கொண்ட கொலையில் கொடியாரை நாயக்க மன்னர்களால் அடக்க முடியவில்லை. காலம், இடம், நேரம் குறித்து அரண்மனையிலேயே அடாது செய்தனர். ஆறலைக் கள்ளர்தம் அடாவடிச் செயலும் ஆதிக்கச் சாதியாரின் வேளாண் கட்டுமானமும் மள்ளர்களைத் தன்னிலையினின்று நிலைகுலையச் செய்தன.

பழந்தமிழ்க் கோயில்களில் அன்னைத் தமிழ் முழங்கிய நிலை குறைந்தது. தமிழுக்கு வீழ்ச்சி. வடமொழி வாழ்வு பெற்றது. பல சாத்திரங்களை ஓதி உணர்ந்த போகர் பரம்பரை - புலிப் பாணியார் பிறங்கடையாம் பண்டாரங்கள் கையில் பஞ்சாமிர்தமும் திருநீரும் பிரசாதமும் பெற மறுத்து, புதிய பூசுரர்களை அழைத்து வந்தனர். தேவாரம், திருவாசகம், திவ்விய பிரபந்தங்கள் ஓதுவது நிறுத்தப்பட்டன. வடமொழி மோகம், வடமொழி அர்ச்சனை, ஆகம முறைகள் ஏற்றங்கள் பெற்றன. தமிழ் மூவேந்தர் பரம்பரையினர் வீழ்ச்சியுற்றனர்.

மள்ளர் எனும் தேவேந்திர குலப்பிரிவுகளையும் கூட்ட முறைகளையும் ஆய்வியல் கண்ணோட்டத்தில் பல அறிஞர்களின் ஆய்வுகளை ஒப்பு நோக்கி புதிது புதிதாக கண்டு பிடிக்கப்பட்ட கல்வெட்டு, வரலாறு, செப்புப்பட்டயம் சிலாசாஸனம் வழக்காறு, நாட்டாரியல் தொன்மக் கதைகளில் கண்ட மள்ளரியச் செய்திகளை என் அறிவுக்கு எட்டிய வகையில் நான் உண்மை என்று உணர்ந்த செய்திகளை முறைப்படுத்தி, நெறிப்படுத்தி வகைப்படுத்தியுள்ளேன்.

## 67. அகத்திய மள்ளர்

அகத்தியர் என்பவர் சிவபெருமானால் தமிழ்நாட்டிற்கு அனுப்பி வைத்த ஒரு மாமுனி, சித்தர், புலவர், மேதை, இலக்கண இலக்கியம் கற்ற தமிழ் அறியும் பெருமாள். சிற்றகத்தியம் பேரகத்தியம் என்ற மிகப்பெரிய இலக்கண நூலை யாத்தவர். தொல்காப்பியர் போன்ற நுண்மாண் நுழைபுலமிக்க தண்டமிழாசான்.

இவர் தம் புலமையைப் போற்றி பல்வேறு காலங்களில் வாழ்ந்தவர்கள் அகத்தியர் என்ற உயர்வான பெயரைச் சூடிக் கொண்டார்கள். பல்வேறு காலங்களில் முப்பத்து ஏழுக்கும் மேற்பட்ட அகத்தியர்கள் வாழ்ந்ததாக அறிஞர்கள் கூறுகிறார்கள்.

ஆடகப் பொதுவில் நாடகம் இயற்றும் ஏடவிழ் கூந்தல் இறைவி பாகன் கண்ணுதற் பெருமாள் திருமணத்தில்

இருந்துள்ளார். சூரபதுமன் காலத்தில் அகத்தியர் வருகிறார். பாரத காலத்தில் அகத்தியர் வருகிறார். அதற்குப் பின்னிட்டும் முன்னிட்டுமாக பல நூறு ஆண்டுகளாக அகத்தியர் பெருமை பேசப்படுகிறது. அகத்தியக்குடும்பன் என்னும் மள்ளர் ஒருவர் தமிழ் மொழியை நன்றாய்க் கற்று, தன்னுடைய குலப் பாரம்பரிய அனுபோகத்தில் வந்த வைத்திய முறைகளைக் கூட்டிப் பல பாடல்களால் வைத்திய நூல் செய்தவர். அவர் தம்குடி வழியை - பிறங்கடையை அகத்தியப் மள்ளர் என்பார் என்று துடிசைக்கிழாரும், கா. நமச்சிவாய முதலியாரும் தாம் எழுதிய அகத்தியர் ஆராய்ச்சி என்ற நூல்களில் விரிவாகக்கூறியுள்ளார்கள்.

## 68. அக்கா மள்ளர்

அக்காள் தங்கை - அப்பா அம்மா, அண்ணன் தம்பி, மாமா மாமி, அத்தான் என்ற சொற்கள் தமிழ்மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களும் திராவிட மொழிகளைப் பேசுவோரும் பயன்படுத்தும் செந்தமிழ்ச் சொற்களாகும். அவற்றுள் நான்கு உறவுடைச் சொற்களை முன்னொட்டாகக் கொண்டு அழைக்கப்படுகிறார்கள். 1. அக்கா மள்ளர் - தாய் தந்தையரை அக்கா அண்ணா என்று அழைக்கும் தமிழ்ச் சமூகம் எங்கேனும் தமிழ் நாட்டில் இருக்கக்கூடும். கொங்கு வேளாளக் கவுண்டர்கள் தம் தந்தையை "அண்ணா" என்று அழைப்பதைப் போல மள்ளர் இனத்தில் ஏதேனும் ஒரு இடத்தில் பெற்ற தாயை - ஈன்ற மகவு - அக்கா என்று அழைக்கக் கூடும். அவ்வாறு அழைக்கப்படும் மள்ளர் தம் மரபை அக்கா மள்ளர் என்று அழைத்திருக்கலாம். எவ்விடத்தில் அவ்வாறு அழைக்கப்பெறுகிறார்கள் என்பதனை அறிந்தவர் அறிவித்தால் இனி மேலும் இணைக்கலாம். (வீராச்சிமங்கலம்.) தகவல் ஆசிரியர் பழனிசாமி

## 69. அக்கரை கண்ட மள்ளர் - அக்கரை கடைய மள்ளர்

வயல், வரப்பு ஆறு குளம், குட்டை, ஓடை என்ற நீர் செல்லும் ஆற்றின் கரைகளில் உழுது உழைத்து வாழ்பவர்கள் மள்ளர்கள் ஆவார்கள். இக்கரை தொட்டு அக்கரை காறும்.- வயல் வரம்புகளில் வரப்புக் கட்டி வயல் வெள்ளாண்மை செய்பவர்கள். உழுதுண்டு வாழும் உழவர்களாவார்கள். அக்கறையோடு அக்கரை வரை உழைத்தவர் ஆதலால் அக்கரை கண்ட மள்ளர் என அழைத்திருக்கலாம். ஆற்றங்கரை நாகரிகத்தின் ஆணிவேராவார்கள்.

நானில ஐந்திணை வாழ்வில் நீர்வளம் நிறைந்தது மருத நிலமாகும். மருத நிலத்தினூடே ஆறு, குளம், குட்டை என இருப்பது இயற்கை. வயலும் வயல் சார்ந்த இடங்களில் மூவகையான தரப்பாகுபாடு, நிலத்தில் காணக் கிடக்கிறது. சேறும் சகதியும் நிறைந்த பள்ளமான பகுதியில் சேற்றுழவு ஒட்டுபவர்களை, பள்ளுழவு செய்பவர்களை பள்ளர் என்று அழைப்பதைப் போல், கடைநிலத்தில் உழவு செய்யும் களமர்களை கடையர் என்றும் கடைசியர் என்றும் அழைக்கப்படுவார்கள்.

ஒரு பகுதியிலிருந்த உழவர்கள் அக்கரை கடையமள்ளர் என்று அழைக்கப்பட்டிருக்கலாம். உழவர்களை கடையர் கடைசியர் களமர் உழவர் என்று அழைக்கப் பெற்ற அருந்தமிழ்ச் சொல்லே, அக்கரை கடைய மள்ளர் என்ற சொல்லாகும். கரை, குலம், குடி, கூட்டம், கொத்து என்பதைப்போன்ற அடையாளச்சொல்லாகும்.

## 70. அகத்தா நாட்டு மள்ளர்

சரியாகப் பொருள் விளங்கவில்லை. தமிழகத்தில் நாடு என்ற பெயரில் பல்வேறு நாடுகளையும், அந்நாட்டிற்குப் பல்வேறு பெயர்களாகவும் கொண்டிருந்ததை அறிய முடிகிறது. ஒரு நாட்டினை பிறிதொரு நாடு வென்ற பின்னர், முன்பிருந்த பெயர் மாற்றம் பெற்றிருக்கக் காண்கின்றோம். சில குடும்பு அல்லது கிராமங்களை உடைய தொகுதி நாடாகும். அகத்தா நாட்டில் பல்வேறு மக்கள் தொகுதியினர் வாழ்ந்திருக்கக் கூடும். அம்முறையில் மள்ளர் என்று அழைக்கப் பெற்று நாயக்கர் ஆட்சியில் பள்ளர் என்று அழைக்கப்படும் ஏருழவர்கள் - தாம் வாழ்ந்த இடங்கருதி, புரிந்து கொள்வதற்கு அகத்தா நாட்டு மள்ளர் என்று பெயர் கொண்டிருக்கலாம். வேளாண் சமூகக் கட்டுமான சபை, குடும்பு நாடு என்று அழைக்கப் பெற்றிருக்கலாம்.

## 71 அணைக்கரை மள்ளர்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற நாநில ஐந்திணை வாழ்க்கையில் மருதநிலமே, குடிமுறையில் கோலோச்ச, அரசதிகாரத்தால் வரையறுக்கப்பட்டது. வரையறுக்கப்பட்ட குடும்பு முறையால் உருவாக்கியது; உழவும் உழவுக்கு உறுதுணையான தொழில்களும் அத்தொழில் வழி அமைப்பு நிறுவனங்களும் தோன்றின. விவசாயம் என்பது இன்றைக்குச் சாதாரணமானது. ஆனால் அன்றைக்கு காடுகெடுத்து நாடாக்கி, குளம்தொட்டு வளம் சேர்த்தது என்பது எளிதல்ல. குளங்கள் வெட்டி வடிகால்

வசதிகளைப் பெருக்கி பெருக்கெடுத்து ஓடிவரும் பேராற்று வெள்ளத்தை நிலை பெறச்செய்வதே அணைக்கட்டாகும்.

2000 ஆண்டுகளுக்கு முன்பே சோழன் கரிகாற்பெருவளத்தான் கட்டிய அணையே கல்லணை. அக்கல்லணையால் சோழ நாடு செல்வம் கொழிக்கும் சீமையாயிற்று. ஆற்றங்கரையின் இருமருங்குகளிலும், அணைக்கரைப் பகுதிகளிலும் சேத்துக்கால் செல்வர்கள் சிறப்புற்று வாழ்கிறார்கள். வெள்ளையானை, வெள்ளைக் கொடி பிடித்து வெண்சக்கரக் குடையின் கீழ் வாழ்ந்த தேவேந்திர குலமக்கள் திரட்சியாக வாழ்ந்து வருகிறார்கள். அன்னோரே ஆற்றுக்காலாட்டியராகவும், நீராணியமாகவும், நீராதிக்கம் செய்யும் குடும்பமாராவார்கள்.

8.1.1999 தேதிய தினமணி நாளேட்டில் வந்த கல்வெட்டுச் செய்தியில் "தேவேந்திரகுல வேளாளர் சமூகத்தைச் சேர்ந்த வெண்ணிக் காலாடியார் வம்சா வழியினர்க்கு கோவிந்தப்பேரி கண்மாய் சம்பந்தமாக ஏற்படும் சகல பராமரிப்புகளும் அடக்கம்". என்று டாக்டர் இராசய்யா கூறுகிறார்.

இந்திய - பாராளுமன்றத்தின் முன்னாள் உறுப்பினர் அமரர் செல்லச்சாமி குடும்பத்தாரின் பராமரிப்பில் உள்ள ஒரு பட்டயம் "பிறக்குடைய குடும்பன் மகன் சிவனுக் குடும்பனுக்கு" சிந்தாமணி பெரியகுளம் கண்மாய்ப் பராமரிப்பு வழங்கப்பட்டுள்ள தகவல் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மேற்கண்ட செப்புப்பட்டயம், கல்வெட்டு இவற்றால் கண்மாய், குளம் பராமரிப்புச் செய்யும் பாத்தியமும் ஏரிவாரியத்தில் ஏற்ற முற்று, நீராணிக்கத்தில் நிகரற்ற நிபுணத்துவமும் பெற்றவர்கள் குடும்பமார்கள் என்பதை உறுதிசெய்யலாம்.

### அணைக்கட்டு மள்ளர்

ஆற்றங்கரை நாகரிகத்திற்கு அடிப்படையான வெள்ளத்தை ஆட்சி செய்யும் வெள்ளாளர்கள் குடும்பு முறைகளை, நாட்டார் சபைகளை ஏற்படுத்தியதோடு அணைகளையும் கட்டினர். அணை கட்டுவதற்கு முன் அவ்வணைக்கரைப் பகுதியில் சம்சாரியாக (விவசாயி) வாழ்ந்தனர். காடுகரை, நிலபுலம் சொத்துப் பத்துக்குச் சொந்தங்களாக தேவேந்திரகுல வேளாளர்கள் வாழ்ந்து வந்தார்கள். அத்தகையவர்களுள் "அணைக்கரையார்" என்று அழைக்கப்பட்ட குடிவழியினருமுண்டு.

150 ஆண்டுகளுக்கு முன்பு பவானி ஆற்றின் குறுக்கே கொடிவேரியில் ஒரு அணைகட்டப்பட்டது. அவ்வணை நீரில் 24500 ஏக்கர் நிலத்தில் நஞ்செய் விவசாயம் செய்தனர். இருபோகமும் மகசூல் எடுக்கப்பட்டது. நெல்மலி நீர்நாடாக, கோபிசெட்டிபாளையம் வட்டத்தில் அமோக விளைச்சலைக் கொடுக்கக் காண்கின்றோம்.

18-ஆம் நூற்றாண்டில் கோவை, ஈரோடு கோபி போன்ற பகுதிகளில் 1000 ரூபாய் கந்தாயம் என்ற கிஸ்தி கட்டக்கூடிய செல்வர்கள் 4,5 பேர்களே இருந்தார்கள். அன்னோரில் மள்ளர் என்னும் தேவேந்திர குலத்தில் தோன்றிய மருநிலக்கிழார் பழனிப்பண்ணாடி ஒருவராவார். அவருக்கு அய்யாவுப் பண்ணாடி, வெங்கிடாசலப் பண்ணாடி என இரண்டு மக்களிருந்தார்கள். ஆங்கிலேய அரசுடனும், மைசூர் அரசுடனும் நெருங்கிய தொடர்புள்ள செல்வச் சீமானாக, குறுநிலமன்னராக இருந்தார்.

பவானி ஆற்றில் கொடி வேரியில் அணைகட்ட காண்ட்ராக்ட் எடுத்தார். பழனிப் பண்ணாடி அணைகட்டி முடியும் வரை ஒரு சல்லிக் காசு கூடப் பெறாமல் தம் சொந்தப் பணத்தைக் கொண்டு கட்டி முடித்தார்.

1842 ஆம் ஆண்டு அணைக்கட்டுக்கு கால்கோள் போட்டு 1847 என ஐந்தாண்டுகளுக்குள் கொடிவேரி அணை கட்டி முடிக்கப்பட்டதாம். அவ்வணையின் மண்ணிலும் அணைச்சுவரிலும் மறைக்கப்பட்டு மண்மூடிக் கிடந்த கல் வெட்டே தன் முகவரியைக் காட்டியது. பவானி ஆற்றின் அணைக்கட்டினைக் கட்டிய பழனிப்பண்ணாடியே உம் நாமம் வாழ்க! உம் குடியும் குலமும் செழிக்க வாழ்க! மள்ளர் மலர், 1998 சூன்.

## 72. அம்பு நாட்டு மள்ளர்

'தொண்டைமான் வம்சாவளி' என்ற தெலுங்குச் சுவடி 1750 ஆம் ஆண்டில் வெங்கண்ணாவால் எழுதப்பட்டிருப்பதாவது. அகலிகை மேல் ஆசைப்பட்டு பூமியில் மாறுவேடம் இட்டு வந்து அகலியைப் புணர்ந்து மூன்று மக்களைப் பெற்றனர் என்றும், சொல்லப்பட்டிருக்கிறது. அதன்படி தொண்டைமான் இந்திரவமிசம் என்று கூறியதோடு, தொண்டைமான் அம்பு கோயிலில் குடியேறுவதற்கு முன்பு "அன்பில்" என்ற இடத்தில் தங்கியிருந்தனன் என்றும் கூறப்படுகிறது. தஞ்சைக்குத் தெற்கில் உள்ள அம்பு கோவில் நாடானது. அம்பு நாட்டு மள்ளர் வாழ்விடமாகும்.

பன்னிரண்டு தன்னரசு நாடாக ஏற்பட்டதென்றும் குறிப்பிடுகிறது. வெங்கட்டராவ் புதுக்கோட்டை மானுவலில் தொண்டைமான்களோடு ஒன்பது குடிகள் அம்பு நாட்டில் குடியேறினரென்றும் கூறியுள்ளார். மேலும் தொண்டைமானால் குறிக்கப்பட்டுள்ள பல "தாம்பர சிலாசாசனங்களில்" அவர்கள் தற்தாலூரில் (அம்பு நாட்டில்) நிலங்களையுடைய இந்திர குல அரையர் என்று குறிப்பிட்டுள்ளது. எனவே மேற்கண்ட பகுதிகளில் பல்வேறு இனமக்கள் வாழ்ந்தாலும் - மள்ளர் என்னும் தேவேந்திர குலத்தார் அம்பு நாட்டில் வாழ்ந்ததாலும் அம்பு நாட்டு மள்ளர் என்று தாம் வாழும் நாட்டின் பெயரால் அழைக்கப்படுகிறார்கள். மேற்கண்ட தகவல்களை மேலும் ஆய்வு மனப்பான்மையோடு கள்ளர் சரித்திரத்தில் நாவலர் ந.மு.வெங்கடசாமி நாட்டார். ஆய்வினைத் தொடர்கிறார்.

அம்புகைவல்வில் லார்கழன் மள்ளர் திறலேத்த
அம்புகைக் கொண்டா லாரிவற் கீண்டு நிகராவார்

-சீவக சிந்தாமணி, 2332

என்ற பாடலை நினைவு கூர்தல் வேண்டும்.

தேவேந்திர குலத்தார்க்கு தொண்டைமான் என்ற குலப்பட்டம் உண்டு 1891ஆம் ஆண்டு மக்கள் குடிக்கணக்கின்படி திருச்சி மாவட்டத்தில் தேவேந்திர குலத்தாருள் 49231 பேர்கள் தொண்டைமான் என்ற குலப்பட்டம் பூண்டு வந்தனர். தேவேந்திரர் வீழ்ச்சி என்ற நூல் பக்கம் 52. தேவ ஆசிர்வாதம் விரித்துக் கூறுவார்.

## 73. அம்மா மள்ளர்

அம்மா என்ற அழகான சொல் - உயிர் - மெய் - உயிர்மெய் என்ற தமிழுக்கே உயிரோட்டமான எழுத்துக்களைக் கொண்ட உயர் பொருள் என்று இலக்கண நிறை கடல் பண்டித அ.கந்தசாமி அய்யா கூறுவார்கள். அம்மாவே தெய்வம் உலகினிலே என்ற திரைத்துறைப் பாடலும் தாய் - தந்தை - மக்கள் என்ற குடும்பத்தை உள்ளடக்கிய உயர் தனிச் செம்மொழியாகும். அந்த வகையில் அம்மா என்று அழைக்கப்படும் சொல்லின் பொருள். அம்மா, ஆத்தா, ஆயா என பல்வேறு பெயர்களைச் சுட்டுவதாக இருந்தாலும் இடத்திற்கு இடம் சொற்கள் மாறுபடும். அந்த வகையில் தன்னைப் பெற்றெடுத்த தாயாரை, 'அம்மா" என்று அழைக்கும், மள்ளரின மக்களை அம்மா மள்ளர் என்று அழைப்பர். நெல்லை மாவட்டத்தில் 'அம்மா' என்று அழைக்கப்படும் பிரிவில் "கொடை வள

நாட்டார்'' "சிவந்திவள நாட்டார்'' என்ற இடத்தில் வாழ்கிறார்கள். அவ்வாறு வாழும் மக்கள் அம்மா மள்ளர் ஆவார்கள். அப்பகுதியை ஒட்டிய வேறு சில இடங்களில் அம்மாவை ஆயா, என்றும் ஆத்தா என்றும் தேவேந்திர குல வேளாளர் சமூகத்தின் உட்பிரிவார் அழைப்பதையும் மறைக்க முடியாது.

## 74. அரச மள்ளர்

மருத நிலம் வாழ் குடிமக்கள் தம்முள் மள்ளர் என்றும் தேவேந்திர குல வேளாளர் என்றும் அழைக்கப்பெறும் மக்கள் - கால்வழியினர் பள்ளர் என்று அழைக்கப்படலாயினர். அம்மள்ளர் என்போர் தம்முள் "210 குடிவழியினர் பட்டியல்" நாட்டார் மத்தியில் காணப்பெறுகின்றனர். அன்னோர் பன்னாட்டவராக வாழ்ந்து வந்தனர். எனவே பன்னாட்டார் என்ற பெயர் ஏற்பட்டது. பன்னாட்டார் என்பது மறைந்து நாட்டார் என்ற பட்டந்தாங்கிகளாக - தெற்குப் பகுதியில் வழங்கலாயினர். இக்காலத்தே மனைப் பிரிப்பு ஊர்களாக பெரியார்நகர் - அண்ணாநகர் குருசாமிநகர் என்று பெயரிட்டு வழங்குவதைப் போல் -தமிழகத்தில் - பட்டி, பள்ளி, ஊர், நாடு என மக்கள் பல்தரத்தினவாக ஊரினுக்குப் பெயரிட்டிருக்கலாம். கொங்கு நாட்டை 24 நாடுகளாகப் பிரித்து அந்நாட்டில் வாழும் பல இனக்குழுக்களும் தத்தம் இனக்குழுப் பெயரைச் சுட்டி - அழைக்கக் காண்கிறோம். அது போல் மள்ளர் என்போர் உச்சா பேதத்தாலோ, வேறு எந்தக் காரணத்தாலோ பள்ளர் என்று அழைக்கப்பட்டவருள் - அரச மள்ளர் என்ற குடிப்பெயர் கொண்டவர்கள் வாழ்ந்து வருவது கண்ணெதிரே உள்ள உண்மையாகும். வன்னியர் என்றும் பள்ளி என்றும் அழைக்கப் பெறும் மக்கள் தம்மை பன்னாட்டவருள் -அரசப் பள்ளர் என்ற குடிப் பெயர் கொண்டவர்கள் என்பர். வன்னியர் என்றும் பள்ளி என்றும் அழைக்கப்பெறும் மக்கள் தம்மை பன்னாட்டவருள் அரச மள்ளர் என்ற குடிப்பெயர் கொண்டவராக வாழ்ந்து வருவது கண்ணெதிரே உள்ள உண்மையாகும். "பன்னாட்டார் பட்டயம் " என்றதொரு செப்புப் பட்டயத்தை 'கல்வெட்டு' இதழ் 1984 மே தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநர் - நடன காசிநாதன் விளக்கும் போது "உருத்திரப் பள்ளியாரின் மெய்க்கீர்த்தி பள்ளியாரைப் பற்றிப் பேசும் பள்ளியின் புதல்வர்கள் நீலகங்கன், வச்சிரபாகன், கங்கைபரிபாலன், சம்பு குலவேந்தன். பரசுராமன் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர். மேலும் இவ்வைவர் மரபில் வந்தோர். பார்ப்பள்ளி, துட்டப்பள்ளி, சிட்டப்பள்ளி, வன்னியப்பள்ளி

அரசப்பள்ளி என்றும் அவர்கள் அனைத்து தேசத்திலும் பரவி பன்னாட்டார் என வழங்கலாயினர் என்கிறார். பள்ளர்கள் - நாட்டார் என்ற பட்டந்தாங்கிகள் - நெல்லைச் சீமையில் வாழ்கிறார்கள். அக்குடிமக்கட் பிரிவினுள் - பீடும் பெருமையும் பெற்ற, ஒரு குடிக்குப் பெயர் அரச மள்ளர் என்பதாகும். ஒரு போர் நடக்கும் போது, போரில் கலந்து கொண்டவர்களை பள்ளி என்றும், புறத்தே போருக்கு அணியமாக நின்றவர்கள் பள்ளர் என்றும் அழைப்பதாகக் காணப்படுகிறது. நாட்டார் என்ற சொல் ‘பள்ளிக்கும், பள்ளருக்கும் கள்ளருக்கும் பொதுவான சொல்லாக விளங்குகிறது. மூவரும் போர்க் குறிகாயமே புகழின் காயம் என்றும். விழுப்புண்படாத நாள் வீணாளாகும் என்றும் கருதும் நெஞ்சுரம் கொண்டவர்கள், வீரத்தையும் ஈரத்தையும் கைக்கொண்டவர்கள்.

நெல்லைச் சீமை - சங்கரன் - கோயில் - மானூர்ப் பகுதிகளில் வாழும் மக்கள் - வீர நாட்டார் என்றும் - சாணநாட்டார் என்றும் இருபிரிவினர்கள் உள்ளார்கள். அவர்களைத் தான் - வீரநாட்டு மள்ளர் - சாணநாட்டு மள்ளர் என்றும் - நாட்டார் என்றும் இன்று வரை அழைக்கப்பெறுவார்கள். திரு. வரதராச நாட்டார் தென்னிந்திய ரயில்வே மேலாளராகப் பணியாற்றுபவர் அக்குடியை சார்ந்தவராவார்.

அரச மள்ளர் என்போர் தம் திருமணக் காலத்தே மணமக்களுக்கும் மங்கல நாண்பூட்டும் முன்பாக பாடிவீடு அல்லது கோயில்வீடு என்ற மள்ளரின மள்ளாண்டார் கோயிலில் தங்குவார்கள்.

பெண் வீட்டார் - ஊர்ப்பண்ணாடிமார்கள்நடைமாத்து விரித்துஇன்னிசைமுழங்க - நெய்ப்பந்தம் பிடித்து அழைத்து வரச்செய்வர். படைவீட்டில் வெள்ளரளி, செவ்வரளி என்ற புனிதமான கொம்பாலும், பூவாலும் நார் முடிய முடி கட்டி மணமகனுக்குத் தலையில் சூட்டி, மாலை சாற்றி, கையில் முன்பு வெற்றிலையோடு வாளினைப் பிடித்து வந்த ராசவம்ச பரம்பரை பாரம்பரியத்தோடு வெள்ளை யானை, வெள்ளைக் குதிரையில் வந்ததாகக் கூறுவார்கள். ஆனால் இன்று அதன் எச்ச சொச்சமாக கையில் வெற்றிலையோடு கத்தியைப் பற்றிக் கொண்டு குடைப் பிடித்து நடைபாவாடையில் வருகின்றதை நானே பார்த்துள்ளேன். அத்தகு பீடும் பெருமையும் பெற்றவரே அரச மள்ளர் என்போராவார். திருமண வீட்டில் சாலங்கரகப் பானைகள் - பல்வேறு விதமாக அழகு திட்டி ஒன்றின் மேல் ஒன்றாக

வைத்து அடிக்கி வைக்கப்பெறும். அவ்வாறு அடுக்கப் பெறும் சாலங்கரகப் பானைகள் -பந்தலை மூட்டி வானத்தை எட்டிப் பார்க்குமாறு வைப்பார்கள். அன்னோரைப் பந்தமூட்டி மள்ளர் என்று அழைக்கப்பெறுகிறார்கள். பந்த மூட்டி மள்ளர்களை அரச மள்ளர் என்றும் உடையார் என்றும் இன்று வரை அழைக்கப்படுகின்றனர். இவர்களை கோவை தெலுங்கு பாளையத்தில் வாழ்ந்தவர்களாக கற்றறிந்த பெரியோர்கள் கூறியுள்ளனர். உடையார் அல்லது பந்தல் முட்டி மள்ளர் என்போரே மூப்பனார் என்ற பட்டத்தை தாங்கியவர் என்பதை முன்பே சான்றாதாரம் காட்டியுள்ளதை நினைவு கூர்தல் வேண்டும்.

உடையார் என்போர் வேள் - வேளார் என்ற கூறப் பெறுகின்றனர். வேள் - வேளார் என்போர் வேட்கோ என்ற மண்பாண்டம் செய்கின்ற வேட்கோ - குடக்கோ என்ற உடையாராகவும் நத்தம் உடையார் மண் உடையார் என்றும் கூறப் பெறுதலுமுண்டு. மேலும் அன்னோரை மலையமான் நத்தமான், சுருதிமான் எனவும் அழைக்கின்றனர். சில வட்டங்களில் மூப்பன், மூப்பனார் - மண்ணாடி - சாலியர், பண்டாரத்தார், அரசப்பள்ளர், பந்த மூட்டி மள்ளர் என்று அழைக்கப்படுவதை சான்றாதாரத்தோடு விளக்கிக் கூறலாம். இவ்வாறு வலியுறுத்துவது - கூறியது கூறலாகக் கொண்டாலும் - சாதியத்தின் வகைப்பாடு. வேரும் வேரடி மண்ணும் ஒன்றுபட்டும் வேறுபட்டும் விளங்குவதை வெளிக் கொணரும் நோக்கம் பற்றியதாகும்.

## 75. அரப்பு மள்ளர் (வாழை பயிரிடும் மள்ளர்)

அரப்பு மள்ளர் அரப்பு என்றால் அரைப்பு என அகரமுதலியில் பொருள் காணப்படுகிறது. அரசன், அரையன் என்பது அரசனுக்குப் போலியாக இருக்கலாம். அல்லது குடுமியான் மலைக் கல்வெட்டில் நெல் பயிரிடுபவர், வாழை, கதலி பயிரிடுதல் பற்றிய உரிமைப் போர் பற்றி மள்ளரின மக்களும் தமிழாதியர்களுக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாடு அறியமுடிகிறது. இன்னோர் வேளாண் தொழில் செய்திருந்தாலும் முன்னுரிமை, முதலுரிமை பாராட்டிக் கொள்ளும் நிலை அன்றிருந்தது. அரப்பு என்றால் வாழை, கதலி என்று பொருள். அவ்வாழையை வைத்துப் பயிரிடும் பள்ளரை அரப்பு மள்ளர் என்று அழைத்திருக்கலாம். தேவலோகத்திலிருந்து நெல்லும் பனையும் வாழையும் கொணர்ந்து பயிர் செய்தவர் என்பதையும் நினைவு கொள்ள வேண்டும். (கரிவலம் வந்த நல்லூர்கள் கல்வெட்டால் நன்கறியலாம்)

## 76. அரிமா மள்ளர்

*எதையும் எதிர் கொள்ளும் வீரம், எண்ணியதை எண்ணியாங்கு முடிக்கும். திண்ணிய உள்ளம். முன்னும் பின்னும் திரும்பிப் பார்க்கும் நேர்த்தி. சிங்கத்திற்கு உண்டு. அக்குணம் சிங்கநோக்கு என்பர். அச்சிங்க, அரிமாவை நினைவில் கொண்டு, குணவியல்பால் ஒப்பு நோக்கி மக்கட் பிரிவில் உள்ளடங்கிய பள்ளரில் சில குடியினரை அரிமா மள்ளர் என அழைத்திருக்கக் கூடும்.*

## 77. அழகுடை மள்ளர்

*ஏர்ப் பிடித்தலிலிருந்து வரப்பு வெட்டல், பரம்படித்தல் நெல் விதைத்தல். நெல் விதைப்புப் என்பது குட்டுக் குட்டாக, குவியல் குவியலாக வீசினால் நெல் விதைத்தால் விழுந்து விடும். இப்பணி விதைப்புப் பணி செய்பவர்களை இணையாவினைக்கை, இளம்பிறை மள்ளர் என்ற பிரிவினராக, அழைப்பர். இப்படி எந்தவொரு செயலாக இருந்தாலும், திண்ணிய உள்ளமும் தேர்ந்த நல்லறிவும் பண்ணைய அறிவும் - படுகளத்தில் பகை முடிக்கும் நேர்த்தியும் கொண்டவர்களை அழகுடை மள்ளர் என்று அழைத்திருக்கலாம்.*

நாற்றுப்பிடிங்கி நடப்பருவம் வாய்ந்ததென்றே
சேற்றுச்செல்வன் தெரிந்துரைக்க பண்ணயர்கோன்
சாற்றும் பணிகேட்டுத் தாங்குபள்ளன் மீண்டானே...

*திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளு, 135*

## 78. அளவு கைவிட்ட மள்ளர்

*மள்ளர் எனும் தேவேந்திர குலத்தாருக்கு "அளவன்" என்றும் கணக்கன் என்றும் வேறு பெயர்கள் உண்டு. குடும்பன் என்ற சொல்லுக்கு அளவீடு செய்பவர். நிலம் அளப்பவர். கரையீடு செய்பவர் எனப் பல பொருள் உண்டு. அதன் விளக்கம் குடும்பர் என்ற கூட்டப் பெயரில் விரிவாக விளக்கம் பெறலாம். பள்ளன் வீட்டிலே நெல் விளைந்தால் பலபக்கம் சிதறிக் கிடக்கும் என்ற பழமொழிப்படி வந்தோர்க்கெல்லாம் வாரிக் கொடுக்கும் வள்ளண்மை கொண்டவர் என்றாலும், அளவு கைவிட்ட பள்ளர் என்பதால் "கணக்கன்" என்ற பெயருக்கு ஏற்றார்ப் போல் பள்ளர்களை அல்லது மள்ளர்களை கணக்கியலை அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது. ஆற்றில் போட்டாலும் அளந்து போடு என்பார்கள். அளவு என்பது ஒரே நிலையில், தன்மையில் வேறுபாடற்ற அளவினை முறைப்படுத்தி, ஒழுங்குபடுத்தப் பயன்படுத்தப்பட்ட கருவியாகும். 16 விரல்*

கொண்டது 1 சாண் அல்லது 8 1/4 அங்குலம் என்றும் கூறலாம். இரண்டு சாண் கொண்டது 1 முழம் அல்லது 16½ அங்குலம் என்றும் கூறலாம். இரண்டு முழம் 1 கோல் அல்லது 3 அடி 3 அங்குலம் என்றும் கூறலாம்.

4 கோல் 1 தண்டம் அல்லது 11 அடி என்றும் கூறலாம். 500 தண்டம் 1 கூப்பிடு தூரம் (குரோசம்) என்றும் கூறலாம். 4 கூப்பிடுதூரம் 1 காதம் அல்லது கவ்யூதி என்றும் கூறலாம். 4 காதம் 1 யோசனை (அல்லது) 1 யோசனை என்றும் கூறலாம்.

கூப்பிடு தூரம் 1 கல் அல்லது மைல் அல்லது 1.67 கிலோ மீட்டர் எனலாம்.

1 காதம் 4 மைல் 880 அடி 6.7 கிலோ மீட்டராம்.

1 யோசனை - 16 மைல் 5 பர்லாங் 220 அடி 26.8 கிலோ மீட்டர்

5 தண்டம் 1 தேரோடும் வீதி 55 அடியினதாகும்.

பாண்டி நாடு 56 காதம். சோழநாடு 24 காதம். தொண்டை நாடு 20 காதம்

100 காதம் நீளம் 670 கிலோ மீட்டர் என ஒரு அளவினைக் கூறக் கேட்டேன். பதிவு செய்துள்ளேன். பலன் தெரிந்தவரிடம் அறிந்து கொள்வோம். அதே போல் - நில அளவு விதைப்பினை வைத்து - நிலத்தின் அளவை கல்வெட்டுச் செய்தியாலும் - வாய்மொழி செய்தியாலும் பல கேட்டவை. பதிவு செய்ய ஏற்றவை - தக்காருக்குக் காணிக்கை. இந்த அளவு முறை பற்றிய பட்டறிவால் - கைவிட்டு உத்தேசமாக, "கண்நிதானத்தில்" சொல்லுகின்ற, செய்கின்ற, ஒரு செயல்பாடே, அவ்வளவினை இம்மியும் பிசகாமல் இருக்கும் என்ற உறுதியின் பேரில் அளவு கைவிட்ட மள்ளர் என்றும் கூறலாம். 1 குலை நெல்லின் மணியைக் கொண்டே விதைப்பாட்டின், கண்டு முதலைக் கணக்கு எடுக்கும் ஆற்றலாளர்கள் இருந்ததை - நற்றமிழர் நெஞ்சில் தேக்கி - சிந்தையில் எண்ணி - செயலில் கொணரும் காலம் என்று வருமோ.................? வருமா

## 79. அன்னிய மள்ளர்

பண்டைக் காலத்தில் குழுவினமாக, கூட்டங்கூட்டமாக மக்கள் தங்கள் வாழ்க்கையைத் தொடர்ந்து வாழ்ந்து வந்தனர். ஒரு கூட்டத்தில் அல்லது குழுவினத்தில் உள்ள வரை பிறிதொரு கூட்டத்தார்க்கு முற்றாக அறிந்தவராகவோ அன்றி

அறியாதவராகவோ, இருக்கக்கூடும். இவர் நம்மவர். இவர் அன்னியர் என்பதை நடை உடை பாவனையால் பேச்சு மொழியால் அறியக்கூடும். அவ்வாறு, குழுவுணர்வால் பற்றால் மாற்றாரை அன்னியப் பள்ளர் என்று தம் குலமுறை இனத்தவராயினும் குடி வழி அன்னியர் என்று கூறப்பட்டதாகக் கருதலாம்.

கொங்கு நாட்டில் வேட்டுவ வாழ்க்கையினை மேற்கொண்டிருந்தாலும் வேளாண் வாழ்க்கைக்குப் புதிதாக வந்தவரை யாரென உசாவும் போது, கொங்கரைப் போல் நடை உடை பாவனை அனைத்தும் ஒத்திருந்தாலும் அன்னியராக இருந்தால் "குடியானவனுங்க" என்ற மாற்றுக்குரல் கேட்கும். குடியானவன் என்றால் இன்றைய பொருள் - உயர்ந்தோர் என்பதாகும். ஆனால் அன்று - இக்குடிக்கு உறுதுணையாக உதவ வந்தவர் என்று பொருளாம்.

## 80. அணிய மள்ளர்

அணியன் அல்லது அணிய மள்ளர் என்ற மள்ளர் குல உட்பிரிவினர் தற்போது ஈரோடு மாவட்டம் சவண்டப்பூர் கணபதிபாளையம், கூகலூர், தாழைக் கொம்பு புதூர், ஒடத்துறை, பாலதொழுவு, மல்லாண்டான்பாளையம் எனப்பட்ட பல்ல கவுண்டன் பாளையம் அருகில் உள்ள புத்தூர் பள்ளபாளையம், சீனாபுரம் துடுப்பதி, அணைப்பாளையம், வெள்ளோடு, ஈரோடு அருகில் உள்ள இராமநாதபுரம் புதூர், திண்டுக்கல் மாவட்டம் பழனி வட்டம் பெரியகலையம்புத்தூர், வேலூர் வீராச்சி மங்கலம், தாளக்கரை மற்றும் பல பகுதிகளில் வசித்து வருகின்றனர்.

விழுப்புரம் மாவட்டம் திருவாமத்தூரில் அபிராமேஸ்வரர் கோயில் சமையலறை வடக்குச் சுவரிலும் இரண்டாவது சுற்று மேற்குச் சுவரிலும் உள்ள கி.பி. 1247 காலத்திய கல்வெட்டுகள் (தென்னிந்திய கோயில் கல்வெட்டுகள், தொகுதி 12, எண்கள் 141, 142, 143). அணியன் மூவேந்தரையன், அவர் மகன் அழகியசிங்கன் மூவேந்தரையன் ஆகியோர் செய்த திருப்பணிகளுக்கு, பூசைகளுக்கு நிலம் நிவந்தமாக அளித்தது பற்றிக் கூறுகின்றன.

தென்னிந்தியக் கோயில் கல்வெட்டுகள் தொகுதி 23, எண் 446 பாண்டியர் குலசேகர தேவர் காலத்திய கல்வெட்டு பாண்டிய மண்டலத்து அழநாட்டு அழிசிரையான பரநிருபகேசரி நல்லூர் அணியன் அப்பன் தேனி மாவட்டம்

பெரிய குளம் வட்டம் சின்னமனூர் லட்சுமி நாராயணர் கோயிலுக்கு இட்ட திருநந்தா விளக்கு பற்றிக் கூறுகிறது.

இப்பிரிவு மக்கள் அன்னியர் ஆட்சியில் (வடுகர்) பலர் புலம் பெயர்ந்து தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் குடியமர்ந்தது தெரிகிறது.

## 81. ஆஞ்ஞா மள்ளர்

ஆஞா, ஆஞீ என்றால் தகப்பன் என்று தற்கால அகர முதலியிலும் நடைமுறையிலும் சில இடங்களிலும் வழங்கப்படும் சொல்லாகும். அப்பா என்ற பகரவல்லெழுத்து ஆஞ்ஞா என்ற மெல்லெழுத்தாய் மாற்றம் பெற்று அப்பாவை ஆஞ்ஞா என்று அழைக்கும் பழக்கம் இன்றும் பரவலாகக் காணலாம். அந்த வகையில் ஆஞ்ஞா என்று அப்பாவை அழைக்கும் வகைப் பாட்டுடைய, பள்ளரை ஆஞ்ஞா மள்ளர் என்று அழைக்கப்படுகிறார்கள். ஆஞ்ஞாப்பிரிவில் சிக்க வள நாட்டார், செளுவ வள நாட்டார் என்ற இரு உட்பிரிவினரும் ஆஞ்ஞா என்று தந்தையை அழைப்பார்கள்.

## 82. ஆண்டி மள்ளர்

ஆண்டி என்போர் இறைவழிபாட்டினர் - பற்றற்றவர். இறை உணர்வையும் மக்கள் கடைத்தேற-சித்தர்களைப் போல், ஞானியரைப்போல் சிந்திக்கும் சிந்தனையாளர்கள். பல்துறை அறிவினைப் பெற்ற பண்டாரங்கள். இன்னோரைப்பற்றி அபிதான சிந்தாமணி என்ற நூல் 125 ஆம் பக்கம் கூறும் குறிப்பாவது.

தமிழ்நாட்டு இரந்துண்போர் இவர்களுக்கு பண்டாரம் என்று பெயர். இவர் பல்வகைப்பட்ட சாதியார் ஆவார்கள். ஜங்கமாண்டி, ஜோகியாண்டி, கோவிலாண்டி, முடவாண்டி, கோமணாண்டி, பூவாண்டி, கூத்தாண்டி லிங்கதாரி, உப்பாண்டி, பஞ்சத்தாண்டி, பரம்பரையாண்டி முதலியோரவார். இவர்கள் வீடுவாசல் இல்லாமல் இரந்துண்போர். அந்தணர்கள் என்போரும் தனக்கெனப் பொருள் சேர்க்காது. வீடுதோறும் இரந்துண்டு மக்கள் நலத்திற்காகச் வாழ்விற்குச் சிந்திக்கும் வாழ்வினர் அறவோராவார்.

மக்கள் மத்தியில் இன்னோர் வழியில் வந்தோர் அனைவரும் துறவியராக, பண்டாரமாக, ஆண்டியாக இருப்பார்கள் என்று காட்டுவது அரிது. இவ்வாண்டியர் பலதரத்தினரும் - பல திறத்தினரும் ஆவார்கள். தம்மை

உயர்வுபடுத்த கோவம்சம், நந்திகணத்தவர் எனவும் கூறுவர். சாஸ்திரங்களை, வேதங்களை - வைத்தியங்களை, உடற்கூறுகளை, வர்ம அடிமுறைகளை, களரி, கம்பு, கத்தி, கவன் என்று படைக்கலங்களைக் கையாளும் விதம், வித்தை - விசம் நவபாசானம் செய்யும் ஞானக்கூத்தர்களாவார்கள். பல கோவில்களில் பணி செய்யும், பணி செய்பவர்கள் பண்டாரம். சித்தர், அந்தணர் என்போர் ஒரே சாதியில் பிறந்தவரல்லர், பண்டார மள்ளர் என்ற குடி வழியினரும் - ஆண்டிப் பள்ளர் என்ற குடிவழியினரும் ஏறக்குறைய பள்ளர், பனிச்சவன், பணிக்கன், குடும்பர், காலாடி என்ற சிறிய பெயர் வேறுபாட்டினைப் போன்ற ஒரு வழியினராவார்கள். இன்னோர் - தஞ்சாவூர், திருத்தவத்துறை என்ற லால்குடி, பெருவளநல்லூர் போன்ற பகுதிகளில் வாழ்ந்தவர்கள். தமிழர் பண்பாட்டு சமூக ஆய்வு மன்றத்தின் துணைத்தலைவரும் - தமிழக சிறைத்துறை DIG ஆக இருந்தவருமான இலக்கியச் செல்வர் இ.குணசேகர மள்ளர் என்பாரும், கோவை புலியகுளம் கனகசபை என்பாரும் பொள்ளாட்சி, பாராளுமன்ற உறுப்பினர் டாக்டர். சி. கிருஷ்ணன் M.B.B.S. யும் ஆண்டிப் பண்ணாடி குடி வழியினராவார். ஆக மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் ஏர்க்களமும், போர்க்களமும் மட்டுமன்றி, இறையுணர்வும், ஞானத்தெளிவும், நூல்யாக்கும் புலமையும், கோயில் பூசைசெய்யும் கிழமையும், பல்துறைப் பண்டாரங்களோடு சேர்ந்து விளங்கியவர்கள். இந்நாட்டை, மொழியை, உடமையை, - உற்பத்தியை, உயர்வை ஆண்ட ஆண்டிகளாவார்கள். அவருள் ஒருகுடியே ஆண்டி மள்ளராம்.

## 83. ஆத்தா மள்ளர்

'ஆத்தாள்' என்ற சொல்லால் தாயாரையும், தாயாரைப் பெற்றெடுத்த தாயாரையும் அழைக்கக் காண்கின்றோம். என்னைப் பெத்த ஆத்தா(ள்) என்று நாடோடிப் பாடல்களிலும், நாட்டுப்புறப் பாடல்களிலும் திரைத்துறைப்பாடல்களிலும் பாடக் கேட்டுள்ளோம். அம்மா + ஆத்தா = அம்மாத்தா அப்பா + ஆத்தா = அப்பத்தா என்றும் கொங்கு நாட்டில் வழக்காறுள்ள சொற்களாகும். இந்த வண்ணம் ஆத்தா என்று அழைக்கப்படும் மள்ளரும் - மறவரும் தென்மாவட்டங்களில் இன்றும் காணலாம். இவ்வாறு அழைக்கப்படும் பொழுது, அன்னோரை அடையாளங்காணும் முகத்தான், தேவேந்திர குல வேளாளர் தம்முள் எந்தச் சொல் மிகுதியாக - குறிப்பிடப்படும் படியாக

வழங்கப்படுகிறதோ அந்தப் பெயரிட்டு அழைக்கப் பெறுகிற சமூகம் ஆத்தா மள்ளர் என்று அழைக்கப் பெறுபவர்களாவார்கள். இதே போல்தான் ஆத்தாளை ஆயாப் பட்டமிட்டு வழங்கும் சில பகுதி மக்களை "ஆத்தாய மள்ளர்" என்று பெயரிட்டு அழைக்கப்படுகிறார்கள். ஆத்தாப்பிரிவில் வீரவளநாட்டார், பருத்திக் கோட்டை வளநாட்டார் என்ற இரு பிரிவினர்கள் உண்டு.

## 84. ஆத்தாய மள்ளர்

ஆத்தாய மள்ளர் என்ற உறவுடைய சொல், பெற்றெடுத்த தாயாரை அழைக்கும் சொல்லாகும். அம்மா, ஆத்தா என்ற சொற்கள் பெரும்பாலும் எளிதாக யாரும் அழைக்கப்படும் சொல்லாகும். ஆத்தாயப்பள்ளர் என்று பெரும்பாலும் அருகிப்போன சொல்லாகும். நேரடியாக அழைக்கப்படுவதில்லை என்றாலும் மூன்றாவது மனிதர் ''உன்ற ஆத்தாயி'' எங்கே போயிட்டா? என்று வினாவுகிறநிலைதான் வழக்கில் உள்ள சொல்லாகும். அச்சொல்லைப் பயன்படுத்தும் பள்ளரை ஆத்தாய மள்ளர் என்பார் போலும்.

## 85. ஆத்தூர் மள்ளர்

## 86. ஆதியூர் மள்ளர்

ஒருவர் பிறந்து, வாழ்ந்த இடத்தால் பெயர் பெறுவர். தொடக்க காலந்தொட்டு, காடழித்து நாடாக்கி வாழ்ந்தயிடம். அந்த வகையில் மக்கட் பெருக்கமும், விரிவாக்கமும் ஏற்பட்ட பொழுது, ஆதியில் ஏற்படுத்தப்பட்ட, குடியமர்த்தப்பட்ட ஊரில் இருந்தவர் என்பதை சுட்டிக்காட்டும் முகத்தான் அழைக்கப்பட்ட பெயர் ஆதியூர் மள்ளர் என்பதாகும்.

## 87. ஆமணா மள்ளர்

ஆமணம் என்பதற்கு ஏரண்டம் என்பது பொருள். ஆமணக்கு என்றால் கொட்டை முத்து - கொட்டை முத்து எண்ணெய் என்று கூறுவார்கள். இதன் பொருள் முற்றாகத் தெரியவில்லை. முன்பெல்லாம் நம் கண் முன்பே கொட்டை முத்தை இடித்து அரைத்து எண்ணெய் காய்ச்சி விளக்கெண்ணெய் என்று பயன்படுத்துவர். அதல்லாமல் எள்ளு, வேப்பன், இழுப்பை, ஆமணக்கு, மிருகத்து எண்ணெய் (பன்றி எண்ணெய்) வடிப்பவராயும் இருந்தனர். அன்னோர் ஆமண மள்ளர் என்றழைக்கப் பெற்றிருக்கலாம். அன்னோரை எண்ணெய்ப்பள்ளர் எண்ணெய்க் காய்ச்சிப்பள்ளராக விளங்கி இருக்கக்கூடும்.

## 88. ஆயா மள்ளர்

பாட்டன் பூட்டன் என்கின்ற சொற்களைப் போல் உறவு உடைய சொல் அம்மாளின் அம்மா அம்மத்தா என்பதைப் போல், ஆயாப்பள்ளர் என்று அழைக்கிறோம். இச்சொல் சங்க இலக்கியத்தில் யாயும், யாயும் யாராகியரோ என்று சொல்வதை நினைவூட்டுவதைப் போல் மிகப் பழமையான மக்களால் பயன்படுத்தும் சொல், அச்சொல்லைப் பயன்படுத்துவோர் ஆயா மள்ளர் என்று அழைக்கப்படுகிறார்கள்.

## 89. ஆரூர் மள்ளர்

சோழ வளநாடு சோறுடைத்து, வற்றாத காவேரி வளமுடைத்து தேவாரம் திருவாசகம் இடையறாது கேட்க செவியுடைத்து, என்ன வளம் இந்நாட்டில் இல்லை? மனுநெறி தவறாமல் ஆண்ட நாடுடைத்து எனப் பெருமிதத்தோடு கூறும். திருவாரூர் வாழும் மக்கள், நெல்லுடையன் நீர்நாடன், நீதி நெறி தவறாமன்னன், வேந்தர் குலவித்து, நெல்மலிபள்ளர் என நெஞ்சு நிமிர்த்துவர். திருவாரூர்ப்பள்ளர் குலத்தில்வந்த இளையபள்ளி, இறைப்பற்றும் நாட்டுப்பற்றும் இனிக்க செம்மாந்து கேட்கிறார். இப்பெருமை கொண்டே ஆரூர் மள்ளர் எனும் திருவாரூர் மள்ளர் என வழங்கலாயினர். திருவாரூர் - தியாகேசனை தன் தெய்வமாகப் போற்றி சைவ சமயத்தின் சிறப்பை விதந்து கூறுகிறார்.

## 90. ஆனைகட்டி மள்ளர்

யானையைக் கட்டி தினி போட யாரால் முடியும்? மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல்லென்று, யானை கட்டிப் போரடித்து விளை கழனி விளைவிப்போனாய், செருகளம் காப்போனாய் விளங்கும் நெல்லுடை நீர்நாடன். மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் தம் குடி வழி வந்த பணிக்கன். தம் குல தெய்வமாகிய தேவேந்திரன் ஏறி அமர்ந்து வரும் யானையைக் கட்டி வளர்க்காமல் வேறு யார் வளர்ப்பர்? எனவே நெல்லுடை நீர் நாடன் மள்ளன் என்ற பள்ளனுக்கு ஆனை கட்டி மள்ளர் எனப் பெயராயிற்று.

திருசின மதயானைபோதுலாவி...

- திருமலை முருகன் பள்ளு, 9

## 91. ஆனையூர் மள்ளர்

சேர சோழ பாண்டியர் என்ற மூவேந்தர் படைப்பிரிவில் ரத், கஜ, துரக, பதாதி என்ற நான்கு படைகள் இருந்தன. அவர்தம் முள் பணிக்கன் என்பார் தேவேந்திர குல வேளாளர் கூட்டத்தில் ஒரு பிரிவினராவார்கள். சோழ நாட்டில் தஞ்சை பாபநாசம் பட்டுக் கோட்டை முதலிய பகுதிகளில் வாழ்கிறார்கள். இவர்கள் யானையைப் பிடித்து - பயிற்றுவதும் பயிற்சி கொடுப்பதுமான தொழில் வழியினர். கொற்றர் தலைவராகவும், ஒற்றர் தலைவராகவும் இவர் தம் குடியிலே பிறந்தவர் பலர் இருந்தனர்.

முழைமு கத்தி டியரி வளைத்த வன்ன மள்ளர்
குழைமு கப்பு ரிசையுட் குருசிறான கப்பட
இழைமு கத்தெ றிபடை இலங்குவாட் கடலிடை
மழைமு கத்தெ குஞ்சரம் வாரியுள் வளைத்தவே, 215.

வீ ரமள்ளர்கள் யானை வாரியிலே முற்றுகை இட்டதாக சீவக சிந்தாமணி செப்பும். யானையைப் பிடித்து, தமது ஊரில் வைத்து இருப்பதால் அந்த ஊரை ஆனையூர் பள்ளர் என அழைக்கலாயினர். பணிக்கன் என்ற மள்ளர் குல மாற்றுப் பெயர் கொண்டோர். யானையைப் பிடித்தல், பயிற்றல், வளர்த்தல் என்ற நிலையினராவார் என்பதை நினைவு கொள்க!

மதயானை முதபிடிக்க வல்லோய்

- *மு.வ.ப.118*

## 92. இசை மள்ளர்

'ஆடுவோமே பள்ளுப்பாடுவோமே ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று ஆடுவோமே' என பாரதியார் களி மிகுந்து பாடுகிறார்ப்போல், மழை பொழிய களிதுளங்க குதித்துக் கூத்தாடும் பாட்டு - பள்ளுப் பாட்டு. பள் என்றாலும் பண் என்றாலும் பாட்டினையே குறிக்கும். பண்ணினைப் பாடி, ஆடி மகிழ்பவர். பண்ணாடி என்றும், பண்ணிற் கேற்ப பாடுபவர் பண்பாடி என்றும் கூறலாம். பண்ணை என்றால் வயல் என்றும் பொருளுண்டு. பண்ணையில் உள்ளவர் பண்ணைப் புள்ளிப் பள்ளர் துள்ளியாடுதல் என்றால் என்ன? 'புள்ளி' என்றால் பெருந்தொகை என அகர முதலி அடித்துச் சொல்கிறது. என்றாலும் 'புள்ளி' என்ற சொல் பெருந்தொகை எனக் கூறுவதன் பொருள் சரியாகப் பிடிபடவில்லை என்றாலும், பெரும்

பெருமைக்குரியர், - தனிச்சிறப்புடையர் என்று உயர்வு புலப்படும். ஒரு கால கட்டத்தில் போரோ, சிலம்பமோ இசையோ, கூத்தோ வேறு ஏதேனும் ஒன்றினை எடுத்துக் கொண்டால் அத்துறையில் வீராதி வீரன் என்றும், சூராதி சூரன் என்றும் மள்ளர் மள்ளன் என்றும் வளமையர் - சதுர்த்தர், நிபுணர் அறிஞர் என்றும் பெறற்கரிய சிறப்பினை, புகழினை இசையினைப் பெறும் தகுதி படைத்த புள்ளி - பெரும்புள்ளி என்ற கருத்துப்படக்கூறும் சொல்லாக இருக்கலாமா? போரென்றால் புலியடா புலிப் பாய்ச்சல்காரனடா என்பது போல் புள்ளி மள்ளர் என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கலாமா எண்ணிப் பார்க்க வேண்டும்.

கொண்டி மள்ளர் கொல்களிறு - சீர் சான்ற உயர் நெல்லின் ஊர் கொண்ட உயர் கொற்றவன் என்ற சொற்கள். போர்க் களத்தும் ஏர்க்களத்தும் ஏற்றம் பெற்றவர்களை, திசையனைத்தும் இசை விளங்க வாழ்ந்தவர் என்றும் கூறலாம்.

பொதுவாக ஏடறியாது, எழுந்தறியாது, எதுகை மோனை தானறியாது, வாய் மொழி இலக்கியம். வயற்காட்டில், ஆடுமாடு மேய்க்கும் சிறார்முதல் நாற்று நடும், களை பறிக்கும், கதிரறுக்கும், கட்டுச் சுமக்கும் நெல்லடிக்கும், நெல்லளக்கும் மக்கள் வாயில் அசைப் போட்டு இசை கூட்டும் மெட்டுக்கு, குயிலுவம் கொண்டு இசைப்பவர்களை விடச் சிறப்பாக பாட்டமையும், அவ்விசையால் திசை எட்டும் பேர் பெற்றவர் இசை மள்ளராகவிருக்கலாம்.

## 93. இப்புரை மள்ளர்

இப்புரை மள்ளர் என்ற சொல்லுக்கு நேரான பொருள் தெரியவில்லை என்றாலும் நாகர் கோயில், தூத்துக்குடி உப்பளம் உள்ள பகுதிகளிலும், முத்து எடுக்கும் காயல்பட்டணங்கள், பழைய காயல், நீர்க்காயல், புன்னைக் காயல் மஞ்சள் காயல் என்ற பகுதிகளில் சில தொழில் வல்லார் சிப்பி, சங்கு, நந்து, நாகுவளை, சிப்பி, வெள்ளி, கிளிஞ்சில்களை வெள்ளி என்று விற்பனை கூறும் மக்களை இப்புரை மள்ளர் என்று வழங்குவதாக மதுரை பேரகராதி கூறுகிறது. இன்னோரை கிளிஞ்சல்களைச் சுண்ணமாக இடித்து விற்பவர். தொண்டைமான் சாதி என்றும் வழங்கப்படுகிறார்கள். தொண்டைமான் என்போரும் பள்ளர்களின் உட்பிரிவாகவும் எண்ணப்படுதலும், கள்ளர் இனத்தவரே - இவர்தாம் புதுக்கோட்டை குறுநில மன்னராக

இன்று வரை விளங்குகிறார்கள் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். இவர்களும், இந்திரசாதி, இந்திரகுலம் எனத் தம்மை அழைத்துக் கொள்வார்கள் என, செந்தமிழ்த் தொகுதி - 2 பக்கம் 175ல் குறிப்பிடப்பட்டுள்ளது. "வேண்டிய முத்துவயல் மேட்டில் குவித்ததும், பள்ளத் தெருவில் முத்தைப் பட்டறைகள் போட்டதும், வெள்ளைக்கார் என்று பள்ளர் உள்ளத்தைச் சொன்னதும், மேட்டில் இருந்த முத்தை வீட்டுக்கனுப்பென்றார்"

"...............நாட்டுப் பெண்களும் முத்தைப் பண்ணையும் பள்ளருடன் பள்ளியும், மக்களும் அள்ளிப்போய் முத்தையெல்லாம் கள்ளுக்கிறைத்ததும், உறந்தை வளர் நாட்டுவளப்பம் என்ற நூல் மொழியால் முத்தோடு தொடர்புடையமை நன்றியும்.

## 94. இருள மள்ளர்

நீலகிரி மாவட்டத்தில் வாழும் இருளர் மற்ற பகுதியில் வாழும் இருளரின்றும் வேறுபட்டவர்கள். கோயமுத்தூர் மாவட்டத்தில் வாழும் இருளர்களை இருளப்பள்ளர்கள் என்றும், வெட்டக் காட்டு இருளர்கள் என்றும், மலை நாட்டு இருளர்கள் என்றும் கூறுவதாக டாக்டர் சு.சக்திவேல் மொழியியல் உயர் ஆய்வு துறைப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம். விரிவாக விரிப்பர். இவர்களையே சோளகர், இருளர், ஊராளி, ஏனாதி என்போர் ஒத்த தன்மையுடையவராக மானிடவியலாளர் கூறவார்கள். இவர்களிடையே நடைபெறும் வழக்குகளை பஞ்சாயத்தார் தீர்த்து வைக்கின்றனர். குற்றம் செய்தவர்கட்கு அபராதம் விதிக்கப்படுகின்றது. ஒவ்வொரு குடும்பிற்கும் அல்லது பாடிக்கும் ஒவ்வொரு தலைவன் உண்டு. அவரை மூப்பர், என்றும் மணியக்காரன், என்றும் கூறுவர். திருமணங்களிலும் ஈமச்சடங்குகளிலும், ஊர்த் திருவிழா பஞ்சாயத்து, நாட்டுநடப்புகளில் இவர்களது பங்கு கணிசமானது. ஊர்க்காரியங்களை "ஐவர் குழு" பஞ்சாயத்து உண்டு. இஃது உத்தரமேரூர்க்கல்வெட்டினை நினைவூட்டும். தமிழாதியர்களாகிய இவ்வகைப்பட்ட இருள மள்ளர்கள் மருதநில மள்ளர் தம் எச்ச சொச்சம் காணக்கிடைக்கின்றது. இவர்கள் தம் பூர்வீகத்தைப் பல்லவர்களோடு தொடர்பு படுத்திப் பேசுபவர்களுமுண்டு.

இருள மள்ளர்கள் நீலகிரி மாவட்டத்திலுள்ள மலைவாழ் மக்களாவார்கள், என டாக்டர் பிலோ இருதயநாத் கூறுவார்கள். பல நூல்கள் இருள மள்ளரைப் பற்றி வந்துள்ளன. இருள மள்ளரைப் பற்றி செங்கோ வரதராசன்

அவர்கள் விரிவாகப் பேசுகிறார். "ஆரிய, சூரிய பள்ள, பாண்டவர் ஆண்டவர்" என்ற கடவுள் வணக்கப் பாடல் பாடுவார்கள் என்று வனாந்திரப்பூக்கள் என்ற நூலில் குறிப்பிடுகிறார். ஒரு காலத்தில் காடழித்து நாடாக்கி காடு வெட்டியாக, முன்னணிப்படையாக, காடுமேடுகளில், நீர்நிலைகளில் இருட்குகையில் பாறையில், பாறைக்குகையில் தங்கிய மக்கள் - பள்ளமான, காடடர்ந்த இருட்டுப் பகுதியில் தங்கிய மக்களே இருளப்பள்ளர் என அழைக்கப் பெற்றிருக்கலாம். அவர்தாம் மலை நெல் விளைவித்தவர்களாவர்கள்.

## 95. இளம்பிள்ளை மள்ளர்

பொருள் சரிவரத் தெரியவில்லை. வயதில், அறிவில் அனுபவத்தில், அனுபவம் அற்ற இளம்பிள்ளை. சிறுவன், சிறு செயல் செய்வோன் என்றும் கூறலாம். ஏதும் அறியாதவன் கள்ளம் கபடமற்றவன் - அறிந்தும் அறியாப்பருவத்தான் என்றும் கூறலாம். இன்னோரை இளம் பிள்ளை மள்ளர் என்றழைத்திருக்கலாம்.

## 96. இளம்பிறை மள்ளர்

வளர்பக்கச் சந்திரன், வாலச்சந்திரன், பாலச்சந்திரன், இணையாவினைக்கை என மதுரைப் பேரகராதியில் பல்வேறுவிதமான விளக்கங்கள் கூறப்படுகின்றன. பிண்டிகை முப்பத்து மூன்றனுள் ஒன்று சுட்டுவிரலும் பவித்திர விரலும் சிறுவிரலும் சேர்ந்து வளையப் பெருவிரல், அவற்றை விட்டு நீங்கி வேறாயிருப்பது இணையாவினைக்கை என்பார்கள். முற்றிய வேளாண் தொழிலில் உயிர் மூச்சாய்க் கொண்டொழுகும் விவசாயிகளிடம் உசாவி அறிந்த பொருள் நெல் விதைப்புச் செய்யும் பள்ளர். அல்லது கூடையுள் கைக்குத்து நெல்லெடுத்து - விதைப்புச் செய்யும் முறை எல்லோராலும் ஒரே சீராக - குத்துக் குத்தாக விழாமல் - பரவலாக விரல் வழி வீசும் இணையாவினைக்கை முறை அறிந்த பள்ளரே - இளம் பிறைப் பள்ளர்களாம். அழகுடைப்பள்ளர் என்பார்தம் செய்நேர்த்தியும், செயல் நெறிச் செம்மையும் விரைநெல், விதைநெல் வீச்சால் வேளாண் தொழிலில் அவர்தம் வினைத்திறம் நன்கு தெரியும்.

## 97. ஈச்சன்கொட்டை மள்ளர்

ஈச்சன்குலை, காய், மரம் என்பது ஒருமரம் பற்றிய குறிப்பினை நல்கும் நிலையினதாகும். ஈச்சங்கொட்டை மருத்துவ ஆய்வாளர்கள், அதன்பயனையும், பயன்பாட்டையும்

ஆய்வுசெய்யவேண்டும். ஈச்சன், ஈசானிய மூலை என்றால் குபேர திசையைக் குறிப்பனவாகவும் பொருள் கொள்ளலாம். ஈச்சன் கொட்டை என்ற சொல் ஈசன் கோட்டை என்பதிலிருந்து உருமாற்றம் பெற்றிருக்கவும் கூடும். குபேரன் கோட்டைக்கு, செல்வத்திற்கு அதிபதி, செல்வச்செழிப்பை காட்டுவதற்காகவும் அறிவிக்கலாம்.

ஈச்சன் என்ற சர்வேசுவரன் - உலகநாயகன் என்ற கருத்து ஈஸ்வரனை வழிபடும் சைவர்கள், சிவனியர்களாகவும் இருக்கலாம். ஈசான திசையிலே உள்ள ஈசன் கோட்டையை - மன்னர் மாளிகையைச் சுற்றிலும் - மள்ளர் என்னும் தேவேந்திர குலத்தார் வாழ்ந்திருந்ததாக அகப்புறச் சான்றுகள் உள்ளன.

காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் கோயில் - கைலாசநாதர் கோயில் திருமடங்கள் - தேவேந்திர வீதி - பள்ளத்தெரு நாற்புறமும் எல்லைக்கல், காட்டுவதாகக் காணக் கிடைக்கின்றன. இதனைக் காஞ்சிபுரம் யாதவச்சத்திர பரிபாலன சபையார் சிலாசாஸனத்தின் நகல் S.No. 65 C.N. 63 பத்திர எண் 2498/940 காஞ்சிபுரம் வெளியீடு 1975 ஆல் அறியலாம்.

கரூர் - ஆன் நிலை ஈஸ்வரன் கோயில் - பள்ளத் தெருவின் கிழ்ப்பாலுள்ளதையும் பேரூர் மேல்பாலுள்ளதையும் ஒரளவு அனுமானிக்கலாம். சமுதாய ஏற்றத்தாழ்வு வந்துற்ற பின் அதன் எச்சங்கள் அழிக்கப் பெற்றிருக்கலாம்.

முகவை என்றும் இராமநாதபுரம் என்றும் அழைக்கப் பெறும் பகுதி ஈச்சங்கொட்டை என்ற பகுதியாகவும் இருக்கலாம். அங்கு வாழ்ந்த மள்ளர் இன மக்களை ஈச்சங்கொட்டை மள்ளர் என்று பெயர் பெற்றிருக்கக் கூடும்.

### 98. ஈச்சநாட்டு மள்ளர்

ஈச்ச நாட்டுப் பகுதியில் வாழ்ந்த மள்ளர் குல மக்கள் ஈச்ச நாட்டு மள்ளர் என அழைக்கப்படுவார்கள். தமிழகத்தின் வடகிழக்குப் பகுதியில் இருப்பவர்கள் முகவை அல்லது இராமநாதபுரம் பகுதிதான் ஈச்சநாடு என்று கூறுவார்கள். அப்பகுதியில் வாழும் மள்ளரே ஈச்சநாட்டு மள்ளர் என்போர்.

### 99. ஈஸ்வர மள்ளர்

ஈச்சங்கொட்டை மள்ளர், ஈச்சநாட்டு மள்ளர், ஈஸ்வர

மள்ளர் என்று குறிப்பிடுவதெல்லாம் மள்ளர் எனும் பள்ளர் சைவ சமயத்தின் மேல் வைத்த பற்றும் பக்தியும் காட்டுவதாகும். இத்தகு சீலமும் பக்தியும் கொண்டதால்தான், காஞ்சிவாய்ப் பேரூர் பட்டிப் பெருமானும் பச்சைநாயகியும் பள்ளன் பள்ளியாகத் தோன்றியதோடு -தம்மக்களையும் கணங்களையும் பள்ளச்சிறாராகவும் மள்ளர் மள்ளியராகவும் வடிவு கொள்ள வைத்தார் என்பதை நினைவு கொள்ள வேண்டும்.

உலகில் சிவமதததை வலகா தூசனாததாரை
உழக்கோலால் விழத்தள்ளிக்கொழுப்பாய்ச்வேன்

செங்கோட்டைப்பள்ளு - 27

## 100. ஒளிய மள்ளர்

மலையமலையில் ஒளியர் குடியைச் சேர்ந்தவர் அகத்தியர், அவர் தமிழில் வல்லுநராக இருந்தார். அகத்தியர் தென்னாடு போந்ததற்குக் காரணம் அந்த அகத்தியர் ஒளி நாட்டு வேளாளர் பரம்பரையைச் சேர்ந்தவர். ஒளிநாட்டு வேளாளர் என்போர் வேந்தர் குல வேளாளர் என்பது ந.சி. கந்தையா பிள்ளை போன்றோர் கருத்தாகும். தென் அயனவரைக்குத் தென்பாகமுள்ளதாக ஒளிநாடு என்றும் தென் அயனவரைக்கும் நடுவரைக்கும் இடையிலுள்ள நாடு பெருவளநாடு என்றும் நடுவரைக்கம், 10 ஆம்பாகை (degree) வரைக்கும் இடையில் உள்ள நாடு குமரிநாடு என்றும், அதற்கு வடக்கே உள்ள நாடு சேர, சோழ, பாண்டிய நாடுகளெனவும், பகுக்கப்பட்டிருந்தன. ஒளிமந்நரே மூத்த தமிழ்க் குடியினராம்.

## 101. கட்டை மள்ளர்

கட்டை என்றால் உடல் என்றும் குறை, குட்டை என்று பல்வேறு வகையினதான பொருள் கூறலாம். ஒரு கூட்டத்தில் குழுகாயத்தில் பார்த்த அளவில், அறிவில் குறைந்த கட்டையான - குட்டையான ஒரு பொருளை - கட்டை என்பார்கள். மள்ளர் என்னும் பள்ளர்கள் வாழ்விடங்களில் கட்டையாக இருந்தவரை - கட்டை மள்ளர் என அடையாளப்படுத்த இனத்தைக் குறித்து விளக்கப்படும் சொற்பெயராகும்.

## 102. கடைத்தலை மள்ளர்

எந்தவொரு பொருளாகினும் இடமாகினும் காலமாகினும் சினையாகினும் அப்பொருளுக்கு முதல்இடை,

கடை என முறை வைப்பும் காலபகுப்பும் உண்டு. அதனை, நோக்கி அதோ பார் அந்த கடைசிப் பந்தியிலே முதலாக உட்கார்ந்திருப்பவன் என்று குறிப்பிடும் போது அடையாளம் தெரிந்து கொள்கிறோம். அது போலவே தான் - கடைப்பகுதியில் முன்பக்கம் தலைப்பக்கம் என்று குறிப்பிட்டு அவர் ஆண்பால் என்பதைச் சுட்டவும் இன்ன சாதியார் என்று அழைக்கவும் பயன்படும் சொல் கடைத்தலை மள்ளர் எனக் கொள்ளலாம்.

## 103. கடைய மள்ளர்

மருத நிலத்தில் வாழ்கின்ற மக்களில் குறிப்பிடத்தக்கவர் உழவர். உழத்தியர், கடையர், கடைசியர் என்று ஏரின் உழும் உழுதொழில் செய்யும் மக்களைக் குறிக்கும். கொங்கு நாட்டில் இருகூர் குனியமுத்தூர் நம்பிஅழகன்பாளையம், போன்ற பகுதிகளில் கடையர் என்போர் வாழ்கிறார்கள். இவர்கள் வேளாண் தொழிலும் வெற்றிலைப்பயிரும் செய்பவர்கள் - குறிப்பாக வெற்றிலைக் கொடிக்கால் விவசாயம் வணிகம் செய்வர்.

வெற்றிலைக் கொடிக்கால் வைத்த கடையப்பள்ளர் தம்முள், முகாமைக்காரர்களை முக்கந்தர் என்று அழைத்து கொள்ளும் பழக்கம் இன்றும் உண்டு. தேவேந்திர குல மக்களுள் - புட்டு விக்கி, சேத்துமா, குனியமுத்தூர் - வாய்க்காப்பாளையம் வயலூர் பேரூர் போன்ற பகுதிகளில் அன்னோர் வாழ்கிறார்கள். தேவர் சமூகம் என்றும் முக்குலத்தோரில் அகம்படியர் என்றும் சொல்லப்படும் சாதியார். இராமநாதபுரம், உடையாம்பாளையம், சௌரிபாளையம், பள்ளபாளையம், இருகூர், பட்டணம், சூலூர், நஞ்சுண்டாபுரம் போன்ற பகுதிகளில் வாழ்கின்றனர். அச்சமூகத்தாரில் வெற்றிலை கொடிக்கால் விவசாயம் செய்பவர்கள். அவர்கள் முகாமையானவர் முக்கந்தர் என்று அழைக்கப் பெறுகின்றனர். நீர்வளம் நிறைந்த தாழ்ந்த இடத்தில் வேளாண்மை செய்வதால் கடையர் கடைசியர் - கடையப் பள்ளர் எனப் பெயரிட்டு அழைக்கப்பெறுகின்றனர். தமிழகத்தில் மள்ளர்களும் மறவர்களும் பெரும்பாலும் ஒரே பகுதியில் வாழ்விடம் பெற்று உள்ளார்கள்.

## 104. கப்பறை மள்ளர்

சரியாகப் பொருள் விளங்கவில்லை.. கப்பல் ஓடும் தளத்தில் நாவாய் செலுத்தும் மீகமான் தங்கும் இடம் கப்பறை. கப்பல்துறை என்பதே கப்பறையாகியிருக்க வேண்டும். கடலோடி என்பாரும் கடம்பன் என்பாரும்

மள்ளரினம். கடம்பன் என்பதே குடும்பன் எனமாறி இருக்கலாம் என முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம் கூறுவதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

கடம்பன் என்போர் - சிலர் கடலோடியாக இருந்துள்ளார்கள். கடலில் ஆறழித்துள்ளார்கள். வங்க மள்ளர் என்ற குடியினரும் உள்ளார்கள் என்பதை நினைவு கூறி - கப்பல் - வங்கம். தோணி, கட்டுமரம் படகு என்பன ஒரு பொருள் குறித்த பல சொல்லாகும். பலவகைப்பாடுடையதாகும்.

## 105. கல்லுக் கட்டி மள்ளர்

கல்லுக்கட்டி, கல்லுக்காரன் என்ற சொல் பலபொருள் தருகின்ற ஒரு சொல்லாகும். கிணறு தோண்டுதலும், கல்லினை விடுப்பதும் கல் வேலி கட்டுவதும், கோயில் குளம் வாவி - முதலான இடங்களுக்குப்பயன்படுத்தலும் உண்டு. அது பற்றியே கல்வேலிக் கவுண்டர். கல்லுமடையான், கல்லுக்கட்டி என இடையர்கள் நாடார்கள் கவுண்டர்கள். மள்ளர் என்னும் பள்ளர்கள் வகையார்களுள் தங்கள் சாதியின் பட்டத்தை ஈற்றில் வைத்து அழைப்பதுண்டு. அதுபோல் கல்லுக்கட்டி மள்ளர் என்று அழைக்கப் பெற்றிருக்கலாம்.

## 106. கல்நாட்டு மள்ளர்

தான் வாழும் நாடு, நகர், காடு, கரைகளில் வாழும் உழவர்கள் குடும்பர்கள், ஊரளக்க காடு கரைகளை அளந்து அளவீடு (கரைவீடு) செய்யும் போது "சர்வே செய்யும் போது கல்நட்டு அளவீடு செய்பவர். கல்நாட்டு மள்ளர் என அழைக்கப்பட்டதாக கல்வெட்டுச் செய்திகளால் அறியமுடியும். கல்லுக்காரர் என்போர் தமிழகத்தில் ஒரு காலத்தில் நவரத்தினக் கற்களை - பல்வேறு வகையினதாக உள்ள கற்களை சாணை பிடித்து செதுக்குபவர் கல்லுக்காரன் என்று கூறுதலுமுண்டு. வெள்ளமடை, கல்லுமடை, வயிரமடை எனக் கொங்கு நாட்டில் பல ஊர்கள் உண்டு என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

## 107. கலி நாட்டு மள்ளர்

கலிநாடு என்ற பகுதியில் வாழ்பவர்கள் கலிநாட்டு மள்ளர் என்று அழைக்கப்படுகிறார்கள்.

## 108. கவண மள்ளர்

மள்ளர் எனம் தேவேந்திரகுல வேளாளர்கள் உண்ண

உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் தருவதோடு, தன்னையும் தன்னைச் சார்ந்தவர்களையும் காக்கின்ற கடப்பாடு உடையவர்களாவார்கள்.

உழவர் தலைவன் ஊரன் எனப்பட்டான். உழவர்களுக்குத் தெய்வம் வேந்தன் ஆவான். வேந்தன் என்பவனே இந்திரனாம். அவன் மழைக்கு அதிபதி. வேளாண்மை மழையைப் பொறுத்தது. அது பற்றியே இந்திரனக்கு விழா எடுக்கப்பட்டது. இந்திரவிழா என்பது அதன் பெயராகும். சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சின்னமனூர்ச் செப்பேடும், பாண்டியர் செப்பேடுகளும், இந்திர விழாவைப் பற்றி ஓரளவு கூறும். சங்க கால சமுதாயத்தின் பொருளாதாரத்திற்கு வேளாண்மையே அடிப்படைத் தொழில். இதற்கு அடுத்தபடியாகப் போற்றப்படுவது நெசவாகும் என பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் அவர்கள் கூறவார்கள்.

குடும்பு, ஊரார்சபை, நாட்டார்சபை என்பவை ஊர்க்காவல், ஏரிகாவல், கோயில் காவல், பயிர்க்காவல் எனப் பல்வேறு வகையில் காபந்து செய்ய வேண்டிய கடப்பாடுடையதாகும். ஒவ்வொன்றனுக்கும் காவல் காப்பவர்களுக்கு பல்வேறு பெயர்கள் சூட்டப்பட்டிருந்தது. வில்லும் அம்பும் வைத்து ஏந்திவந்தோரை "வில்லம்பர்" என்பார்கள். இவர்கள் வாணிபக் குழுமத்தோடு செல்பவர்கள். தண்டு ஏந்தி இரவில் பாதுகாப்போரை காவல்க்காரர் என்பார்கள். இதுபோன்ற கவணச் சித்தர்கள் காவற் தலைவர்கள் பல திறத்தினர்கள்.

அன்னோருள் ஒரு பிரிவினர் தென்மாவட்டங்களில் கயத்தாறு, கோயில்பட்டி, ஒட்டப்பிடாரம் என்ற வல்ல நாட்டில் வாழ்ந்து வந்தார்கள். குடும்பர்களில் சிலர் இடுப்பினில் கட்டியிருக்கும் வேட்டியின் மேல் கச்சைபோல், கவண்கயிறு என்ற எளிய கவசத்தை சுற்றிக் கட்டியிருப்பார்கள். துப்பாக்கி அமுலுக்கு வராத காலத்தில் கவணைப் பயன் படுத்தும் வித்தையைக் கண்டு, வெள்ளைப் பரங்கியரே வியந்ததில் வியப்பில்லை. கவணில் உண்டைக்கட்டி அடித்தால், குறி தவறாமல் குறித்த இடத்தில் விழும். பெரும் சேதத்தை உண்டாக்கும். கவண் + உண்டையால் அடிபட்டு, அடிதாங்காமல் அலறியசொல், காவுண்டை, கவுண்டனென்ற அலறலொலியாகும். வெங்கக்கல்லும் ஓடைக்கல்லும், உடைப்புக்கல்லும் களிமண்ணில் பிசைந்து, உண்டை (உருண்டை) செய்து, பகப்படுத்தி, பயன்படுத்தும் ஓர் எளிய ஆயுதமாகும்.

புஞ்செய் தானியக் காடுகளில் பெண்களே கவணைக் கையில் ஏந்தினர். காவல் காத்தனர். யானையின் பொய்க் கண்ணில் கவணெறி கல் பட்டு வீறிட்டு விழும் வரலாறும் உண்டு. மந்தியும் அறியாமரம் செறியிருட்டின்போது, காரிருட்டில் ஒலி வரும் இடத்தை நோக்கித் துல்லியமாகக் கவண் எறிந்து, குறியை வீழ்த்தி விடுவார்கள். ஓடுகின்ற முயலையும் மலைப் பன்றியையும் கவண் கல்லால் வீழ்த்தி விடுவார்கள். இன்ன இடத்தில் இன்ன உறுப்பின் மேல் கவணெறிகல் விழும் எனக்கூறி, அதனைச் செய்து காட்டும் வித்தையைக் கற்றவன் குடும்பன் அதுபற்றியே கவணெறி குடும்பன், கவணெறி மள்ளன் என அழைக்கப்பட்டனர்.

''தெல்லுத் தண்டுக் கல்லிலிருந்து தேங்காய்த் தண்டிக்கல்லு வரை கவணில் வைத்து வீசுவார்கள். கல் இரைந்து சத்தம் கொடுத்துக் கொண்டே செல்ல வேண்டுமானாலும் செலுத்துவார். சந்தம்கேட்காமல் எதிரிக்கு கல் எந்தத் திசையிலிருந்து வருகிறது என்று தெரியாமல் எறிய வேண்டும். அத்தகு வல்லமை மிக்கவர் குடும்பமார், கோவல்லபுரத்துக் குடும்பமார், எனவியந்து பாராட்டுகிறார் கி. இராஜ்நாராயணன்.

கவனம் என்றால் வேகமுள்ளோர், ஞாபகம் உள்ளோர், கருத்தாளர் என்று பொருள் தரும். எந்தவொரு காரியமானாலும், எண்ணம், சொல், செயலால் முனைப்புணர்வோடு கருத்தாளராக நின்று செய்யவல்ல - நம்பற்கரிய வீரரான கவனசித்தர் - கவனப்பள்ளர் - ஒப்வீட்டுக் குரிய சொல்லாகும். கவண மள்ளர் என்றால் மள்ளர் தம்மடியில்லுள்ள கவண்க்கயிரை ஆயுதமாகக்கொண்டவர் என்றும் பொருள் கொள்ளலாம். இன்னோர் தூத்துக்குடி கோயில்பாயைம், கயத்தாறு, எட்டையபுரம் ஊர்களில் வாழ்பவர்களாவார்கள்.

## 109. கவிதமான மள்ளர்

பள் என்றாலும் பண் என்றாலும் பாட்டு என்று பொருள் தரும். பாணர் - பாவாணர். பண்ணாடி என்ற சொற்கள் யாவும் ஒரு பொருளைக் குறிக்கும் சொல்லாகும். எல்லாச்சொல்லும் பொருள் குறித்தனவே என்ற கூற்றுப்படி - பள்ளர் பண்ணாடி என்பார். பாடவல்லவராகவும் கவிஞராகவும் இருந்திருக்க வேண்டும். ஆசு, மதுரம் சித்திரம், வித்தாரம் என்னும் நாற் கவிகளைப் பாட வல்லோராவர்.

இன்னோர் கற்றவராகவோ, கல்லாதவராகவோ

எவ்வடிவிலிருந்தாலும் பிறப்பு முதல் இறப்பு வரை ஏரோட்டுதல் முதல் கதிர் அறுத்து வளம் பாடி நடிக்கும்வரை சீர் சான்ற உயர்நெல்லின் ஊர் கொண்ட உயிர் மள்ளர் கவிகட்டிப் பாடுவர் என்பதால் கவிதமான மள்ளர் எனப் பெயரிட்டழைப்பர்.

## 110. கவிநாட்டு மள்ளர்

கவிநாடு என்பது திரிகூடமலை என்னும் பொதிய மலை, பாபநாசம், குற்றாலமலை என்ற மலைகள் சூழ்ந்த நாடு. மேகங்கள் கவிழ்ந்து சாரல் மிகுந்த மழை வளம் மிக்க நாடு. கவிநாடு எனப் புலவர்களால் போற்றப்பட்ட நாடு. செங்கோட்டை, தென்காசி மலை சூழ்ந்த நாட்டை ஆண்டோர் பாண்டியர் எனப் பெயர் கொண்ட மள்ளரினம், பச்சைக் குடை பிடித்த பண்ணாடிமார்கள் வாழும் இடமாகும். பாண்டியர் பட்டம் தாங்கிய பூமியாகும்.

## 111. கவுண்ட மள்ளர்

கொங்கு வேளாளர், அனுப்பன், கப்பிலியன், பள்ளி, செம்படவன், ஊரான், வேட்டுவன் என்ற இனமக்கள் கவுண்டர் என்று அழைக்கப்படுவதாக மதுரை தமிழ்ப் பேரகராதியில் காணக் கிடக்கிறது. தேவேந்திரக்கவுண்டர் தேவக் கவுண்டர் என்றும் அழைக்கப்படுகிறது. பொதுவாகக் கவுண்டன் என்றால் சண்டாளன், கவுண்டிமை செய்பவன். காவல்காரன் என்று சொல்லப்பட்டுள்ளதாக கொங்கு வேளாளர் வரலாறு நூலை எழுதிய T.M. காளியப்பாவே குறித்துள்ளார். 4ஆம் பதிப்பு 1992. ஆனால், ஊன்றிக் கவனிக்கும்போது வேளாண் தொழில் செய்பவர். உழவர் விழா தமிழர் விழா அல்லது பொங்கல் விழாக் கொண்டாடுகிறோம். மாட்டுப்பொங்கல் வைப்போர் பொங்கலிட்டு பூசை செய்து பட்டினிப் பொங்கல் அல்லது பட்டிப்பொங்கல் வைக்கப்படும். பட்டினி கிடந்து பொங்கலை வாங்குவோனே ஆடுமாடுகளை மேய்த்து பண்ணையம் பார்த்தவர் ஆவார். இவரே ஒரு சந்தி முடிப்பவராவார். "பெண்டுக்கு மாடு மேக்கி" என முல்லைநில இடையர் என்ற இனத்திலும் பிற சாதியிலும் காணக்கிடக்கிறது. ஆடுமாடு மேய்த்து வேளாண் தொழில் செய்யும் களமரே - உழவு செய்யும் காராளர் அல்லது ஏராளர் என்றவராவார். காரணம் பட்டினிச் சோறு என்ற காவினை "களத்தில் படையல் சோறு" உண்டை கட்டி உண்டவனே கவுண்டன் என ஆயிற்று. அதுவும் பள்ளத்திலே பயிர் செய்தவன் ஆதலால் பள்ளக் கவுண்டன் அல்லது கவுண்ட மள்ளர் என்பர்.

## 112. களத்து மள்ளர்

ஆடுகளம், பாடுளம், திணைக்களம், வயற்களம், போர்க்களம் ஏர்க்களம் எனப் பலவாறு கூறுவர். பொதுவாகக் களம் என்பது ஒரு இடம், ஆடுகளம் என்றால் - ஆடுகின்ற இடம் எனலாம். நெற்களம், வயற்களம், போர்க்களம் எனப் பல்வேறு இடங்களை - தளங்களைக் குறிக்கும் இடமாகும். மள்ளர் என்னும் பள்ளர்கள் - வயற்களத்து உழவர்களாகவும், நெல்லடிக்கும் வயற்களத்து களமராகவும், கடையராகவும், நெல்லறியும் இருந்தொழுவராகவும் விளங்குவர்.

படைப்பயிற்சி தரும் இடங்களில் தளங்களில் யானை ஏற்றம் குதிரை ஏற்றம், வில், வேல், வாள், களரி, சிலம்பம், பயிற்றும் திடல்களில் பணிக்கனாராகவும் மல்யுத்தம் செய்யும் இடங்களில் மல்லராகவும் மழவராகவும், ஆடுகளம் பாடுகளங்களில் ஆடல் பாடல் என சொல் விளையாட்டு. செந்தமிழால், நாப்பழக்கத்தால் கல்வி அறிவைப் பயன்படுத்தும் சதுரராகவும் விளங்குபவர். இன்னோரே களத்து மள்ளர்.

## 113. கனியா மள்ளர்

இனிமை, அமுது, சோறு, சாரம் என்று கனிக்குப் பொருள் செய்யலாம் கனியாப்பள்ளர். செய்யா என்ற வாய்ப்பாட்டு எதிர்மறைப் பொருள் தரும் உடன்பாட்டை நல்கும். இனிமையாக கனிந்த முதிர்ந்த பழம் போன்ற பக்குவிகள் கனியா மள்ளர் என்பதாகும்.

## 114. காட்டானை மள்ளர்

பணிக்கன், பலகன், மள்ளர், மழவர் ஏர்க்களத்தும் போர்க்களத்தும் இருவேறு நிலையிலும் துறை போகிய சதுர்த்தராவர். இவர்கள் யானை பிடிப்பதும், பயிற்றுவதும், மாவுத்தனாகநின்று, யானை மொழி தெரிந்தவராகவும் விளங்கியவர்கள்: மதம் பொருந்திய காட்டு யானையை ஒத்து மனவலிமையும் உடல் வலிமையும் பெற்றதால் காட்டானை மள்ளர் எனப்பட்டனர். தன் முற்றத்தில் யானையைக் கட்டி தினி போட்டவர். யானை ஏறுவோர் மன்னர் யானையைப் பயிற்றுவோர் மல்லர் எனும் பள்ளராவார்.

## 115. காட்டானையை வென்ற மள்ளர்

காட்டானையை வென்ற மள்ளர் வளர்ப்பு யானையையும் காட்டு யானையையும் கட்டி அரண்மனையில் காட்சிப் பொருளாக -கோயில்களில் பொது இடங்களில்

பழுமிகுந்த பொருள்களைக் கடத்தலுக்கும் பயன்படும் மாவுத்தன்மாராகவும் மாமல்லராகவும் விளங்கும் பணிக்கன்மார்கள் கன்ன மதம், கபோலா மதம், பீசாமதம் என்ற மும்மதங்களும் ஒன்று சேர மதம் பிடித்து - ஊரை அழிக்கும் யானையை, காட்டானையை அடக்கியவர். பல்வேறு உபாயங்களால் வென்று அடிப்படுத்தி அடக்கி, அதன்மேல் ஆரோகணித்து வரும் பணிக்கர் (பள்ளர்) காட்டானை வென்ற மள்ளர் என்பார்கள். வென்றி மேவல் உருகெழுசிறப்பின் கொண்டி மள்ளர் கொல்களிறு பெற்றவர் எனப் பதிற்றுப் பத்து பறைசாற்றும். பிற்காலச் சோழராட்சியில் மூன்றாங் குலோத்துங்கமன்னரிடம் 60 ஆயிரம் ஆனைகளைக் கொண்ட ஒரு யானைப் படை இருந்ததாக அறிகிறோம்.

மள்ளர்கள் மறுபுடைமான யானைமேல்
வெள்ளிவேல் எறிவனபோன்ற மேகங்கள்

- கம்பராமாயணம், 4164

## 116. காதுவ மள்ளர்

காதுவப்பள்ளர் என்றால் சரிவரப் பொருள் தெரியவில்லை. மள்ளர் எனும் தேவேந்திர குலத்தார். பல சொல் குறித்த ஒரு பொருள் கொண்டவர்கள். மள்ளர் என்போரே பள்ளர் எனச் சொல் மாற்றம் பெற்றவர்கள். இவர்களுக்கு வாதிரியார் என்று அழைக்கப்படும் குலப் பெயரும் கோலிய மள்ளர், சேனிய மள்ளர் என்ற குடிப்பெயரும் உண்டு. வாதிரியாரும் கோலியரும் சேனியரும் துணி நெய்கின்ற, விசைத்தறியைப் பயன்படுத்தி, பாவும் ஊடுமாக நூல்சேர்த்து கூறைச் சேலை சடங்கிற்கு, வாழ்க்கைக்குத் தேவையான துணி நெய்பவர்களும் உண்டு. இவர்களுக்குப்பாணர் என்ற ஒரு பெயரும் உண்டு. 'பாணர்' என்ற சொல்லுக்கு துணிதைப்போர் என்ற பொருளும் - வாதிரியார், கோலியர் சேனியப்பள்ளர் என்ற பொருளுக்கு இயைய காதுவப்பள்ளர் என்றால் கொல், கூறுசெய், முறி, தறி, எனத் தற்காலத் தமிழ்ச்சொல் அகராதி பொருள் தருவதால். காதுவ மள்ளர் என்னும் குடிவழியினர் தறி நெய்யும் குடியினராக இருக்கலாம்.

அதல்லாமல் அரசு படுகருமத்தலைவராகவும், அரசன் ஏவல்வழி ஆணை வழி வினைமுடிக்கும் கருமக்காரராகவும் இருக்கலாம். சிரத்தைக் கொய்வதாயினும், கரத்தைக் கொய்வதாயினும், அரசமன்றில் விதிக்கப்படும் தீர்ப்பாணையை செயல்படுத்துவார் காதுவப் மள்ளராவார்.

இன்றும் பாரதகண்டத்தில் உயர் பதவி வகித்தவராகவிருந்தாலும் ஏன் மாற்று மன்னராக, அரசராக இருப்பினும் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டால் அதனை நிறைவேற்றும் பொறுப்பில் உள்ளவர். இவர்கள் அன்னோரே காதுவப்பள்ளர் என அழைக்கப்பட்டார்கள். மதுரையில் உலகத்தமிழ் மாநாடு நடந்த போது நூலாசிரியரும் அவர் நண்பர்களும் கோவலன் பொட்டலுக்குச் சென்றார்கள். இன்று அவ்விடம் பழங்காநத்தம் குடியிருப்புப் பகுதியாகவும், மள்ளர் தம் கல்லறையாகவும் உள்ளது. அதுவே கோவலன் பொட்டல் அங்கே "கருவீரக்குடும்பன்" என்ற வயது முதிர்ந்த காவலரிடம் விசாரிக்கும்போது, தம் மூதாதையரிடம் ஒரு செப்பேடு உள்ளதாகவும், அவர் வழிமுறையினன் "தான்" என்று கூறி, கோவலனை இக்கல்லின் மீது தலையை வைத்து வெட்டியதாகவும் கூறினார். அன்னோர் காருவ மள்ளர் என்ற குடிவழியினராம். இத்தகைய தொழில் வழி - பதவி, பட்டங்கள் என்பனதயும் நினைவில் வைக்கவேண்டும்.

## 117. காதுவி மள்ளர்

காதுவி மள்ளர் என்போர் காதுவளர்ப்பவர்கள். நகைநட்டு என்ற ஆபரணங்களைப்பூண்பதற்கு காதினைத் துளைத்து, தக்கை என்ற கருவியை - உள்நுழைத்து, துவாரத்தைப் பெரிதாக்குபவர். அதனுள் பொன்னாபரணம் பூண்பவர்கள். இதுபோல் காதுவளர்த்தல் சேர சோழ தொண்டை கொங்கு நாட்டில் இல்லை. பாண்டிய நாட்டில் தெற்குப் பகுதியில் வாழும் அனைத்தின மக்களும் காதினை வளர்க்கும் பழக்கம் உள்ளோர். அந்நாட்டில் வாழும் தேவேந்திர மக்களும் விலக்கல்லர். எனவே, அதுபோல் காதுவளர்ப்பவர்கள் காதுவி மள்ளர் என அழைக்கப்பெற்றிருக்கலாம்.

## 118. கிளிஞ்சி மள்ளர்

கன்னியாகுமரி, நாகர்கோயில் பகுதியில் கடற்கரையை ஒட்டி வாழ்கின்ற மக்கள் கிளிஞ்சி, பாசி, சங்கு, கொம்பு முதலான கடல்படு பொருள்களைப் பொறுக்கி விற்பனை செய்வர். கிளிஞ்சி மள்ளர் என்போர் கிளிஞ்சல்களை எல்லாம் பொறுக்கி, சுண்ணாம்பு இடித்தலும், பாசி, முத்துக்கோத்தலும் வேறு பல கலைநயம் பொருந்திய வேலைப்பாடுகளையும் செய்வோராவார்.

## 119. குங்கும மள்ளர்

செங்காவி நிறம் உடையது குங்குமம், அக்குங்குமத்தை

காவி என்றும் கூறுவார்கள். நெற்குடி மூத்தபள்ளர் ஆகையால் நெல்லு வகையை எண்ணினாலும் எண்ணலாம். பள்ளு வகையை எண்ண முடியாது. அந்நெல் வகையில் குங்குமச் சம்பா என்பது ஒருவகையான நெல்லாகும். சம்பா என்ற நெல்லே பல வகையினதாகும். சின்னக்கிச்சடி சம்பா, பெரிய கிச்சடி சம்பா என்ற சுவையுள்ள சின்னரகமுடையது என்ற பொருளினை மதுரைத் தமிழ்ப் பேரகராதி கூறும். அந்நெல்லை விளைவிப்போர் குங்குமப்பள்ளராவார்.

## 120. குதிரை மள்ளர்

குதிரை மள்ளர் என்போர் நால்வகைப்பட்ட படையில் குதிரைப்படையைச் சேர்ந்தவராக இருக்கலாம். அல்லது குதிரை முடி நெல் என்ற நெல்லினை விளைவித்தவராகவும், இருக்கலாம். குதிரைப் படையில் தொடர்புடையோரை அவ்வாறு கூறக்கூடும். காவலுவர், மாவலுவர், பூவலுவர், வேடர், வேட்டுவர் என்று ஐந்து குலத்தைப் பற்றிப் பேசும் பஞ்ச குல காவியம் என்று நூலில் மாவலுவர் என்போர் குதிரைப்படை வீரர் என துடிசைக்கிழார் அவர்கள் கழக வெளியீட்டு நூலான கழகத்தமிழ் வினாவிடை என்ற அந்நூலில் கூறியுள்ளார்கள். எனவே குதிரை மள்ளர் என்போர் - ஏரும் போரும் பிரியாது செய்யும் உழவர் எனவே, மேற்கண்ட இருபொருளும் அவர்க்குப் பொருத்தமானதாகலாம். வேட்டுவர் அல்லது முத்தரையர் குடியினமே காவலுவர், மாவலுவர், பூவலுவர், வேடர், வேட்டுவர் என்போர்.

## 121. குதிரைக்கு மாரடிக்கும் மள்ளர் : 55

குதிரைக்கு மாரடிக்கும் மள்ளர் என்றால் பிடித்த குதிரையை ஏறி சவாரி செய்து, சங்கடித்து அக்குதிரையை நெறிப்படுத்துபவன் என்று பொருள். புதிய குதிரை, முரண்டு பிடிக்கும் குதிரையை அடக்கி ஒடுக்கி அங்கும் இங்கும் எனாமல், குண்டும் குழியும் மேடும் மடுவும், காடும் கரையும் எனச் சுற்றி, தடுமாறிச் செலுத்தி அதனை வழிக் கொண்டு வந்த குடியினைச் சார்ந்தவர் தம் காரணப் பெயராகலாம். யானை, குதிரைகளை பயிற்றும் மாவுத்தர்களிலும் வேறுபட்டவராவார்.

## 122. குதிரைமுடி மள்ளர்

முற்றாகப் பொருள் புலப்படவில்லை என்றாலும் போர்க்களங்களில் குதிரை போல் முக அமைப்புப் பூண்ட (எல்மெட்) பாதுகாப்புக் கவசம் அங்கியைத் தறித்தவர்

பகைவரோடு பொருதவர் என்றும், குதிரை போல் முடியுடையவர் என்ற காரணத்தாலும் அப்பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

"ஒண்பொடி யுருவத்திண்டே ரொளி மயிர் புரவி
பண்வன் கழலணிந்து மள்ளர் வாள்வலம்
பிடித்து நாளை" -சீவ-சிந்-2157

## 123. குமுண மள்ளர்

குமுண மள்ளர் என்போர் குமண மள்ளர் என்போராகயிருக்கலாம். கொங்கு நாட்டில் பல வள்ளல்கள் இருந்துள்ளார்கள். அவர்களில் கடையேழு வள்ளல்களில் ஒருவர் குமணன் என்பவராவார். அவர் வாழ்ந்த மண் குமாரலிங்கம். குமணலிங்கம், கொழுமம் என்று அழைக்கப்படும் புகழுக்குரியது. அவர் வாழ்ந்த மலை முதிரமலை, ஓடியயாறு முதிரையாறாகும். ஆனால் இன்று, குதிரைமலை, குதிரையாறு என அழைக்கப்பெறுகின்றது. அப்பகுதி, வற்றாது வளங்கொழிக்கும் அமராவதிநதி, ஓடுவதால் பச்சைப்பசேல் என மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள். நிலவுடைமையாளர்களாக இன்றும் விளங்கி வருகின்றனர். அத்தகைய வள்ளல் வாழ்ந்த பூமியில் வாழும் மள்ளரே குமண மள்ளரென அழைக்கப் பெற்றிருக்கலாம். கொழுமம்கோட்டை மாரியம்மன் கோயிலில் குமாரலிங்கம் வேலுக்குடும்பர் செய்த மேடை பற்றிய சிலாசாசனம் இன்றும் காணலாம்.

## 124. குமிர்த மள்ளர்

குமிர்த மள்ளர் தற்காலிகமாகப் பொருள் விளங்கவில்லை.

## 125. குமுத மள்ளர்

சரிவரப் பொருள் விளங்கவில்லை. குரங்குப்படைத் தலைவரில் ஒருவன் என தற்கால அகர முதலி பொருள் புலப்படுத்தும். பகைப்புலத்தினின்று ஒற்றாடுதல் பொருட்டு, மாறு வேடம் பூண்டு திரிவதும், மரங்களில் ஏறி - ஒளிந்து மறைந்து செய்தி சேகரிப்பவராகவும் உள்ள மள்ளர் குடியின் பெயரில் ஒன்றாகலாம்.

## 126. குமுண முறங்கொத்தி மள்ளர்

பொருள் சரிவரப் புலப்படவில்லை என்றாலும் குடி தழீக்கோலோச்சிய வள்ளலும் மன்னனுமாகிய குமணனுக்கு மெய் மறையாக - பாதுகாக்கும் மெய்ப்படையாக இருக்கலாம்.

குமணன் வாழ்கோட்டை, கோயில், அனைத்தையும் சூழ்ந்து வாழும் மக்கள் தேவேந்திர குல மக்களே ஆகையால் குமணன் காக்கும் மக்களே குமண முறங்கொத்தி மள்ளராகலாம். கொத்தி என்ற சொல் பொத்தி என்றோ, போற்றி என்றோ இருந்திருக்கூடும்.

## 127. குல மாங்கல்ய நாட்டு மள்ளர்

பாண்டி நாடாம் தென் தமிழ் நாட்டுப் பகுதி குல மாங்கல்ய நாடு என்பது நாம் அறிந்ததே. அப்பகுதியில் வாழ்ந்து வரும் மக்கள் குல மாங்கல்ய நாட்டு மள்ளராகவிருக்கலாம்.

## 128. குளத்து மள்ளர்

மள்ளர் எனும் தேவேந்திர குலத்தார். தமிழகம் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளார்கள். வேளாண் தொழிலும் வேளாண் தொழிலுக்குத் துணையாகப் பிற தொழிலும் செய்வது இயற்கை. அம்முறையில் குளத்து மள்ளர் என்ற குடி வழியினராவார்கள். அன்னோர் குளத்திலுள்ள நீரையும் நீர்ப் படு பொருள்களையும், ஆதிக்கம் செய்யும் அதிகாரம் செய்யும் நீராணிக்கம் அல்லது நீராதிக்கம் செய்யும் நீராணிக்கர்களாவார்கள். இவர்களே வெள்ளத்தை ஆட்சி செய்வதால் வெள்ளாளர் என அழைக்கப்பட்டிருக்கலாம். குளம், கண்மாய், என்ற நீர் நிறைந்த ஏரியை மிகக் கவனமாகக் கண்காணிப்பதும், உடைப்பெடுக்காமல் பாதுகாத்தலும், குளம் தூரெடுப்பதும், கரை கோளுதலும், நீர் பங்கீடு செய்யும் அதிகாரமும் பெற்றவர்கள். இவரின் கீழுள்ளவர்கள் மடை, மேல் மடை, கீழ் மடை, கொப்பு என மழை வறட்சியினால், பயிர் சாகுபடி செய்வதற்கும் பயிரைப் பாதுகாப்பதற்கும் உள்ள நீரைப் பங்களிப்பதும், உபரி நீரைப் பெருக்குவதுமான பணியை மேற்கொள்ளுபவர்களாவார்கள். இப்பணி ஏரி வாரியத்தினுளடங்கும். இக்குடி வழியில் மண் மள்ளர், மடை மள்ளர், மேல்மடை மள்ளர், குளத்து மள்ளர், வேம்ப குளத்து மள்ளர் என்ற குடிப்பெயர் தாங்கியோர் பலராவார்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

விருதுபட்டி, விருது நகர் என்று விரிவடைந்து விருதுநகர் மாவட்டம் ஸ்ரீவல்லிபுத்தூர் வட்டத்திலுள்ள கிருஷ்ணாபுரம் மேல் வீட்டுக்காரர் பொன்னாயிரக்குடும்பனார் வெண்ணிமாலை வம்சாவழியினர் தலைமலைக் குடும்பனார் கால் வழியினர். 64 சேனைகளும் 21 பந்திகளையும் ஆதிக்கம் செலுத்தும்

அய்யனார் சாமியை குல தெய்வமாகக் கொண்டு, அருள்வாக்குச் சொல்லுதலும், திருநீறு வழங்கி, நித்தியப்பூசை செய்யும் மரபினருமாவார். மள்ளர் குலம் வேளாண் மரபு மாறாமல், தம் முன்னோர் பராமரித்து வந்த குள நிர்வாகத்தை, வேப்பங்குளம், பிள்ளையார் குளம், எனும் இரண்டு கண்மாய்களின் நீர் நிர்வாகத்தை நிர்வாகித்து வருபவர் குடிப்பெயர் குளத்துப்பள்ளராகும். இம்முது குடிப்பெருமக்கள் நெல் விதைத்தலில் கை தேர்ந்தவர் என்றும் கைராசிக்காரர் என்றும் கீர்த்தி பெற்ற குடும்பமாகும். இவர் மகன் தா.அய்யனார் கோவை இந்தியன் வங்கியில் மேலாளராகச் சிறந்து விளங்குகிறார். இவர்கள் மீன் பிடித்தல் தொழிலும் செய்வார்கள். குளத்து மணியம், நீராணியம், மீன் பிடித்தல், மடைப்பார்த்தல், சப்பாவைத்தல் போன்ற அதிகாரச் செப்பேடுகளும் பெற்றவராவார். கோவை சுண்டக்காமுத்தூர் செங்குளம் நீராதிக்கம் செய்யவும் மீன் பிடிக்கவும், சிவகங்கைப் போர் முடிந்தவுடன் போர் வீரர்களுக்கு இது போல பட்டயச் சான்று தந்துள்ளார்கள். இச்செப்புப் பட்டயம் மறவரைக் குத்திக்கிழித்த சவளை (சேர்வைக்காரர்) யிடம் குனியமுத்தூர் குணவேலிடம் உள்ளது. கட்டுரையாசிரியர் அறிந்ததே. அவர்களுக்கு மறவரைக் குத்திக் கிழித்த சவளை என்ற வரலாற்றுப் பெயருமுண்டு.

## 129. குழவு நாட்டு மள்ளர்

வற்றாத வளங்கொழிக்கும் குற்றால மலை, பொதிய மலை, பாபநாசம் மலை என்ற மும்மலை சூழ்ந்து, மேகம் திரள் கொண்டு, பண்ணை மள்ளச்சாதிக் குடும்பர்களும் அவர்தம் புனல் வயல் மள்ளர் தம் பூவையரும் இளமை, நாடும், - ஊரும், பயிர்களும் மக்களும் பசுமை மாறாது. இளமை நீங்காது விளங்குவதால் குழவு நாட்டு மள்ளர் எனப் பெயராயிற்று. குழவு என்றால் இளமை எனப் பொருள்படும்.

## 130. குறும்ப மள்ளர்

குறும்பர் என்றால் வேடர். குறுநிலமன்னர், கீழ் நில மக்கள், குறும்பிடையர் என்று பொருள் காணலாம். ஆடு மாடு மேய்ப்போர், செடிகளைப் பிடுங்க கொக்கி குறுந்தடி வைத்து, பாதுகாப்பிற்கு ஆயுதந்தரித்து வாழ்வார்கள். மருத நிலத்திலும் பள்ளர் என வாழ்கிறார்கள். அவரவர் நிலைமைக்கேற்ப நிலபுலம் இருக்கும். குறும்பப் பள்ளர் என்போர் குறுநில வேந்தனாகவும், ஆடுமாடுகளை

செல்வம் என்று அறிவதால் குறும்பிடையர் என்றும் கூறுவர். இன்னோரே சேற்றில் பள்ளத்தில் - தாழ்வான இடத்தில் வாழ்வதால் கீழ்மக்கள் என அழைக்கப்படுகிறார்கள். இதற்குச் சரியான பொருள் கிடைக்காவிட்டாலும் மருதநிலத்தில் கருங்கால மள்ளர் குறும்ப மள்ளர் என்று அழைக்கப்படுபவராவார்.

**துடியன் பாணன் பறையன் கடம்பனென்று**
**இந்நான் கல்லது குடியு மில்லை**

என்று புறநானூறு புகலும். கடம்பன் என்ற சொல்லே பிற்காலத்தில் குடும்பன் என மருவியிருக்கக் கூடும். என டாக்டர் சிற்பி பாலசுப்பிரமணியம் கூறுவார். ஆயர்கள் குறும்பாடுகள் மேய்ப்பதன் காரணமாகக் குறும்பர் என்னும் பெயர் பெற்றனர் என்றும் இவர்கள் கோவை, தருமபுரி, திருச்சி தென்னாற்காடு, வடாற்காடு முதலிய வட்டங்களில் ஓரளவு காணப்படுகின்றனர். பள்ளர்களில் ஒரு பிரிவினர் குடும்பர் என அழைக்கப் பெறுகின்றனர் என சங்க இலக்கியத்தில் ஆயர் என்ற தலைப்பில் முனைவர் பட்டம் பெற்ற டாக்டர் அ. முத்துசாமி கூறுவார். ஆக கடம்பன் குறும்பன் குடும்பன் என்ற சொற்கள் உச்சாபேதத்தால் மாற்றம் பெற்றதாம். பிங்கல நிகண்டில் குறும்பர் பல்லவர் வம்சத்தவர் என்று குறிப்பிட்டுள்ளது. குமர குருபர சரித்திரம் என்ற நூலின் முன்னுரையில் கல்வெட்டு வரலாற்றுப் பேரறிஞர். கோ.ம.இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் 15 ஆம் நூற்றாண்டிற்கு, முன்பு தென்னாட்டில் ஆட்சி செய்த பல்லவர்கள் குறும்பர் என்று கூறுகிறார். இதே கருத்தை பூரணலிங்கம் பிள்ளையவர்கள் தமிழும் தமிழர்களும் என்ற நூலில் பல்லவர்கள் என்போர் பள்ளர் குடியினர் என்று கூறுகிறார். குறும்பர்களின் குழு அல்லது கூட்டத் தலைவரை மூப்பன் என்றும் முதலி என்றும் அழைக்கப்படுவதாக வி.ஆர்.அனுமந்தன் கூறுகிறார். இந்த குருபர குறும்பர் குடியினர் இந்திர சூத்திரர் என்று கூறுவதையும் எண்ணிப் பார்க்க வேண்டும். சமூக ஆய்வியல் அறிஞர் “செங்கோ” இருளர் - குறும்பர் என்ற மக்களின் கம்பள நிகழ்வுகளில் கடவுள் வணக்கப்பாடல்களின் - சில வரிகள் - அடிகளைப் பார்ப்போமானால், ‘ஆரிய, மூரிய, பள்ள, பாண்டவர் ஆண்ட பூமி, என்று வருவதைப் பார்க்கலாம். பாண்டி நாட்டில் பாண்டியர் இனப் பகை காரணமாக - ஆடையின்றி மொழி சிதைந்து ஒளிந்து வாழும் “பண்டா” என்ற முதுகுடியினம் சில செய்திகளை, தரவுகளை மள்ளரினத்தார்க்கு ஆக்கம் சேர்க்கும்.

## 131. கூத்த மள்ளர்

பாட்டுங்கூத்தும் மள்ளர் சொத்து என்பது பழமொழி. உழைக்கும் போது உழைப்பின் பாடு தெரியாதிருக்கவும், உழைப்பு முடிந்து ஓய்வுள்ள காலத்தில் புள்ளிப் பள்ளர் துள்ளி ஆடி மகிழும் இயல்பினர் என்பதால் கூத்த மள்ளர் என்று பொதுவாக அழைக்கப்படுவர். அரண்மனையைச் சார்ந்த நாடக அரங்கு, நாடக மேடையை கூத்தப்பள்ளி எனத் தமிழ்ப் பேரகராதி விளக்கம் தருகிறது.

## 132. கூத்தாடி மள்ளர்

கூத்த மள்ளரும் - கூத்தாடி மள்ளரும் இருவரும் ஒருவரே கூத்த மள்ளர் குடிப்பெயராகவும் - கூத்தாடிப்பள்ளர் தொழில் பெயராகவும் கொள்ளுதல் வேண்டும். பாட்டும் கூத்தும் பள்ளரின சொத்து என்ற வளமையால் - பண்ணை வயல் செல்வரெல்லாம் பாடிக்குரவை இட்டுக் கூறுவரே, என்ற படி ஓய்வுக் காலத்தே கோயில் கட்டல், குளம் வெட்டல், கலை கலாச்சாரம் விளக்கம் பெற, இயல் இசைப்பாட்டுடன் தெருக்கூத்து, ஊர்க்கூத்து திருவிழாக்கூத்து நாட்டுக்கூத்து - ஊர் விட்டு ஊர், நாடு விட்டு நாடு சென்று பாடி மகிழ்வர். கவிபுனையவும், பாட்டுக்கட்டவும், மக்கள் உளங் கொள்ள கூத்தாடி மள்ளர்கள் பல்துறை வல்லவர்களாக விளங்கினார்கள். நெல்லளக்கும் பள்ளர் எல்லாம் கூத்தாடியை கூவியழைத்து பரிசுகள் நல்குவார்கள். சிங்கிப் பள்ளர் என்போரும் நட்டுவ மள்ளர், நரம்புக்கட்டி மள்ளர், நாட்டிய மள்ளர், பனுவல் கூறும் மள்ளர், பாம்பாட்டி மள்ளர், பாவை கட்டி மள்ளர், பாவை மள்ளர், இசை மள்ளர் என்போர் அனைவரும், பாட்டும் கூத்தும் நடத்துபவர் என்பது உறுதிபடுகிறது. தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் பண்ணை என்ற சொல்லை 'விளையாட்டு' என்ற பொருளில் பயன்படுத்துகிறார் - அதன் அடிச்சொல்லான பள், பண் என்பது இசையைக் குறிக்கும். எனவே பண்ணை என்பது இசைப்பாடல்களினால் ஆன ஒரு விளையாட்டு என்று கருதுவதற்கு இடமுண்டு. மேலும் நாடகம் கூத்து என்பவற்றோடு தொடர்புடைய ஒன்பதுவகை மெய்ப்பாட்டினையும் விளக்கம் பெறப்பட்டுள்ளது. தொல்காப்பியர் பழந்தமிழ்க் கூத்தர்கள் பற்றி குறிப்பிடுபவை.

வெறிக்கூத்து, கருங்கூத்து, வள்ளிக்கூத்து, கழனிலைக்கூத்து இவை போர்த் தொடர்பு கொண்டவை. குன்றக்குரவை, ஆய்ச்சியர் குரவை, கயிற்றாடல்; வேட்டுவ வரி, சாக்கைக் கூத்து, கழாய்க் கூத்து, தோற்பாவைக்கூத்து,

விகடக்கூத்து, வெற்றிக்கூத்து, வசைக்கூத்து விநோதக்கூத்து எனப் பல்வேறு கூத்தர்கள், கூத்து வகையினை ஆடினார்கள். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலங்களிலும், அந்தந்த நிலத்திற்குரிய கூத்தர்கள் இருந்து வந்தனர்.

சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லாரின் 11 வகையான நாட்டிய நாடகங்களில் உள்ள எச்ச சொச்சங்களை நினையாமல் இருக்க முடியாது. அவற்றுள் நெடியோன் ஆடிய மல்லாடல் அறுமுகச் செவ்வேள் ஆடிய துடியாடல், அயிராணி என்ற இந்திராணி ஆடிய கடையம் என்ற நாட்டியக் கூத்து பற்றியும் நீடு நினைக்க வேண்டும்.

நெடுநீர்க்கழனிசூழ்நியமம் சேர்த்தி விழவு அயர்ந்து
வடிநீர் நெடுங் கண்ணார் கூத்தும் பாட்டும் வகுத்தாரே

என சீவகசிந்தாமணியும் 2601

வாயில் கூத்தும் சேரிப் பாடலும் கோயில் நாடக்
குழுக்களும் வருகென

- பெருங்கதை (88-89) 1 காண்டம்.

கூத்தாடி மள்ளர் கூவி அழைப்பதாக கூறும்.

"மதுரை மாவட்டப் பள்ளர் மக்கட்பெயர்" என ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்ற டாக்டர் க. முத்தையா அவர்கள் கொங்கு நாட்டிற்கு வந்து ஆய்வு செய்வாராயின், கூத்தப்பண்ணாடி, கூத்தப்பள்ளர், கூத்தாயி, செலம்பன், செலம்பாயி, பாவாயி என்பன போன்றபெயர்களை வைத்து கலை, இலக்கிய, பாட்டும், கூத்தும் விரிவான தரவுகள் கிடைக்கும் இத்தகைய கூத்தப்பள்ளர் கூத்தாடிப்பள்ளர் குடிவழிப் பெயர்கள் அருகிவரக்காண்கிறோம்.

## 133. கூனங்குடி மள்ளர்

கூனங்குடி மள்ளர் என்போர் கூனன் குடி என்ற இடத்தில் வாழ்ந்து வருவதை அல்லது வாழ்ந்தவர்களை அடையாளப்படுத்த அழைத்த பெயராகவிருக்கலாம். கோனன், கோன் + அன்னோன் என்ற பொருள் கொண்ட குறுநில மன்னனாக வேந்தனா வாழ்ந்தவர்களைக் கூறலாம். அக்குடியைச் சார்ந்தவர்களை, கோனங்குடி எனத்தலைமைக் தன்மையை வெளிப்படுத்தும் முகத்தான் அழைக்க அது உச்சாபேதத்தால் கோனங்குடி மள்ளர் எனக் குறிப்பிடப்பட்டிருக்கலாம். கூன்பாண்டியன் குடியினைச்

சேர்ந்தவராகவும் இருக்கலாம். கோன் அய்யன் குடியாகவும் கூறலாம்.

## 134. கொங்க மள்ளர்

சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு, தொண்டைநாடு, கொங்கு நாடு எனப் பிரித்து, அழைக்கப்பட்ட நாடுகளில் கோவை, பெரியார், சேலம், தருமபுரி, கரூர், குளித்தலை, பழனி வரை கொங்கு நாடு என அழைக்கப் பெறுகிறது. இப்பகுதியில் உள்ளவர்கள் அந்தந்தச்சாதி இனப் பெயரால் நாட்டை ஒட்டி அழைக்கப் பெறுவார்கள். கொங்கு நாட்டிலேயே கொங்க மள்ளர், சோழிய மள்ளர், பாண்டிய மள்ளர், கடைய மள்ளர், பந்தமுட்டி மள்ளர், அரச மள்ளர் என்ற வகையினைச் சார்ந்தவர்களுண்டு. ஒருவருக்கு ஒருவர் முன்பெல்லாம் உண்பது தின்பதில்லை. ஆதலால் கொள்வினை கொடுப்பினையும் இல்லை. இன்று இந்நிலை இல்லை. மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் அனைவரும் ஒன்றே என்ற கலப்பும் -உவப்பும் சேர்வும் ஒன்றுபட்டு விட்டார்கள்.

கொங்க மள்ளர் என்பவர் பெருந்தாலி அணிவர். கொங்கு வேளாளர் சடங்கு சம்பிரதாயம் நாடு, குலம், கோத்திரம், தாலி என அனைத்தும் ஒன்றாக இருந்தும் கொள்வினை கொடுப்பினை அவர்களுக்குள் இல்லை. வேளாண் தொழிலையன்றி வேறு தொழிலை முதன்மையாகக் கருதாத உழவர்களாவார்கள். இது பற்றியே

சந்தனக் கலப்பை கொண்டு மள்ளர் வருவார்
இந்த சாதிலிங்க நாத்தெடுத்து மள்ளி நடுவார்
குங்குமக் கலப்பை கொண்டு மள்ளர் நடுவார்
குபேந்திரன் நாத்தெடுத்து மள்ளி நடுவார்

என பண்ணை மள்ளர்சாதிக் குடும்பர், மள்ளர்கள் பள்ளியருடனே கூடி வந்து, பாடி குரவையிட்டு ஆடி மகிழ்வார்கள். கொங்கு வேளாளர் வரலாறு நான்காம் பதிப்பு வெளியிட்ட டி.எம்.காளியப்பா சக்தி தேவி எழுதிய நூலில் 76 கவுண்டர் சாதியும் கூட்டமும் குடியும் எழுதியுள்ளார்கள். அதில் 52 ஆம் கூட்டமாக தேவேந்திர கூட்டமும் உண்டு என்றாலும் உழுதுண்போர் உழுவித்துண்போர் எனப் பேதப்படுத்தி, ஏற்ற தாழ்வுகளை கற்பித்துவிட்டார்கள். இதுபற்றியே இமானுவேல் தேவேந்திரர் , தேக்கம்பட்டி சுந்தரராசன், ஜான்பாண்டியன், டாக்டர். குருசாமிசித்தன், டாக்டர். க.கிருஷ்ணசாமி, இராசதேவேந்திரன் பசுபதி பாண்டியன், ஆவடி

சுந்தரராசன், திருச்சி சுப்பிரமணி போன்ற ஆண் சிங்கங்கள் தலைமையில்

வண்கழல் அணிந்து மள்ளர் வாள் வலம் பிடித்து, நீதி கேட்க - தென் மாநிலங்காக்கப் புறப்பட்டு விட்டார்கள். "புதிய தமிழகம்" அமைக்க போர்க்குறிக் காயமே புகழின் காயம் யார்க்கது வாய்க்கும்? எனக் குரவை ஒலி கேட்கிறது.

## 135. கொனுதை மள்ளர்

பொருள் தற்காலிகமாகப் புலப்படவில்லை. கொனுதை என்ற இடப்பெயரோடு அங்கு வாழ்ந்த மள்ளரெனும் தேவேந்திர குல வேளாளரின் மள்ளர் என்ற இனப்பெயரை முன்னொட்டாக வைக்கப்பட்ட பெயர் கொனுதை மள்ளராகலாம்.

## 136. கொலை களவு வென்ற மள்ளர்

## 137. கோதிரை மள்ளர்

பொருள் சரியாக விளங்கவில்லை. மதுரைத் தமிழ்ப் பேரகராதியின் விளக்கப்படி கோதிரை மள்ளரென்றால் உடும்பு, முதலை, கோதி என்பன போன்ற பிடித்தபிடி, கொண்ட, கொள்கையை விடாத - போக்கினைக் கொண்ட மள்ளர்களே கோதிரை மள்ளர் என அறியலாம்.

## 138. கோதிக மள்ளர்

மண்டலவீயூக வரிகளிலொன்று, உடும்பு, முதலை, கோதி என்று கொண்டதுவிடாக்கொள்கையர். ஏர்க்களமாயினும் போர்க்களமாயினும் திடமாக, தெளிவாக விழித்த கண் வேல் கொண்டு எரியினும் அழித்து இமையா ஆற்றல் வாய்ந்த படை வீரர்களாவார்கள். படை-படை-படைச்சால்.

## 139. கோலிய மள்ளர்

சேனியர், வாதிரியார், கோலியர் என்ற சொற்கள் யாவும் விசைத்தறியர், துணி நெய்வோர் சேடர் எனப்பொருள் கண்டுள்ளது. ஆடை இல்லா மனிதன் அரை மனிதன், நெய்யுந் தொழிலே தெய்வம், தலைமைத்தன்மையும் தாட்டுமையும் உள்ளோன். தனக்குத் தேர்ந்தெடுக்கப் படும் மனைவிக்குச் சோறும் கூரையும் (கூரைச்சேலை - திருமணச்சேலை தானே நெய்து) கொடுக்கும் வல்லமையுள்ளவன் என்று உறுதிப்படுத்த வேண்டும். உழவுத் தொழில் எவ்வளவு முதன்மையானதோ அதுபோல் உழவும்

உழவுக்கு உறுதுணையான தொழிலுமாகும். வேறு தொழில் செய்யாது இருந்தால் தொழில் வளர்ச்சியும் விஞ்ஞான வளர்ச்சியும் குன்றிப் போய்விடும். இன்னோர் தமிழகத்தில் அருகி விட்ட சமுதாயமாகும். கோரைப்பாய், சணல், பருத்தி முதலியன நெய்பவர்களாகவும் இருப்பார்கள்.

## 140. கோனகப்பூச்சி தின்னும் மள்ளர்

கோனகப் பூச்சி என்பது என்ன என்பது சரிவரத் தெரியவில்லை என்றாலும் சித்த வைத்தியர்களிடம் அது பற்றி விசாரித்த அளவில் தமிழகத்திலும் கேரளத்திலும் விளையும் செடி, கொடி, வேர், காய், கனி, இலை, தழை எனப்பட்டவையும், புளு, பூச்சி, நண்டு, நத்தை, மீன், ஈ, எரும்பு, உடும்பு, தவளை, ஆமை என வெளியுலகிற்குத் தெரியாத உணவாக, மருந்தாக உட்கொள்வதின் பலன் மிக மிக உயர்வானது என்று கூறுகிறார்கள். இன்று நாம் அருவருப்பாக அசிங்கமாகக் கருதும் சில உணவு வகைகளை சீனா, சப்பான், அமெரிக்கா போன்ற கீழை நாடு மேலை நாட்டு மக்கள் உண்பதை அறிந்து, அதனை ரகசியமாக நடத்தும் விடுதிகளுக்குச் சென்று நாகரிகமாக உண்டு வருகிற போக்கும் நாம் அறிந்ததே. ஆடு, மாடு, மான், உடும்பு, பன்றி, ஆமை என்று தமிழகத்தில் உள்ள மன்னர்களும், மக்களும், புலவர்களும் உண்டதாக சங்க இலக்கியங்களில் பேசப்படுகிறது. கடவுள்களுக்குக் குருதி சிந்திப் படையல் வைக்கப்படுவதும், சங்க இலக்கியத் தொடர்புடையார்க்கு நன்கு தெரியும். அந்த வகையில் உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன். எனவே, உடம்பை வளர்க்க ஊன் உணவும் கோனகப் பூச்சியும் அயின்றேன் என்று கூறுவதில் எள்ளளவும் அய்யமில்லை. அவ்வாறு உண்டவரே கோனகப்பூச்சி தின்னும் "பள்ளர்கள் தக்கசோறு என்வெள்ளாண்மை", "முப்பழம் சோறும் உண்ணவே நடத்திக் கொண்டீர்" என முக்கூடற்பள்ளு 15 - (600) கூறும்.

## 141. கோநாடு – கோனாட்டு மள்ளர்

சேரநாட்டின் உட்பிரிவுகளுள் ஒன்று கோனாடு. கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் - ஒரு சங்ககாலத் தமிழ்ப்புலவர். அவர் வழிவந்த மக்களை கோனாட்டு மள்ளர் என அழைக்கப்பட்டார். கொங்கு நாட்டினுள் கோனாடு என்ற ஒரு பகுதி உண்டாம்.

## 142. சங்கர மள்ளர்

சங்கர மள்ளர் என்போர் போர் செய்வதில் முனைந்து

நிற்கும் முனைமழுங்காமாமல்லராம். இன்னோர் கலப்பின வாழ்வினர்.

## 143. சாணாட்டு மள்ளர்

சாண்நாடு என்ற நாட்டில் வாழ்ந்ததால் சாணாட்டு மள்ளர் என்று அழைக்கப்படலாயினர். இவர்கள் சாண் அளவுள்ள நாரினைத் தளையாகக் கொண்டு காலில் மாட்டி, தென்னை மரம், ஈச்சமரம், பனைமரம், பாக்குமரம் முதலானவற்றில் ஏறும் தொழில் செய்தவர்கள். ஆகையால் சாணாட்டு மள்ளர் எனப் பெயராயிற்று. தமிழ்நாட்டில் மரம் ஏறும் தொழில் மள்ளர்களுக்கு இல்லை என்பாருமுண்டு. ஆனால் ஈழ எழுத்தாளர் கணேசலிங்கம் அவர்கள் மரமேறும் தொழில் பள்ளர்களுக்கு தமிழீழத்தில் உண்டு எனக் கூறுவதால் சாணாட்டுப்பள்ளர் மரமேறுவர் என்பதை உறுதிபடுத்தலாம். சான்றார் எனும் நாடார் குலத்தவரை மட்டையர்[1], கள்ளர்[2], நாட்டார்[3], கொடிக்கால்[4], மேல்நாட்டார் என ஐந்து பிரிவாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்ட "தடிவீ ராசாமி" "வன்னியராயன் கதை" யால் அறியலாம். பாண்டியன் - நாட்டார் என்ற சொல்லால் மருதநில மள்ளர்களுடன் உள்ள தொடர்பு அறியற்பாலது. நாடு, நாட்டார் என்ற சமுதாய அமைப்பு முறை - பரவலாகப் பேசப்படுகிறது.

## 144. சாமண மள்ளர்

சாமண மள்ளர் என்போர் பற்றிய சரியான பொருள் புரிபடவில்லை. சமண மள்ளர் என்போர் தான் சாமண மள்ளர் என உச்சாபேதத்தால் உருமாற்றம் பெற்றதோ என்ற ஐய வினா எழாமல் இல்லை. தமிழாதியர்களாகிய மல்லர்கள் அனைத்து மதங்களையும் சார்ந்திருக்கக் கூடும். இவர்கள் சமணமதத்தைச் சார்ந்தவராயிருந்ததால் சாமண மள்ளர் என்று அழைக்கப்படலாயிற்று.

## 145. சாயா மள்ளர்

நடுநிலை யினின்று பிறழாத செம்மையும், சமண் செய்தும் சீர் தூக்கும் கோல் போல் அறத்தில் கோடாது கொண்டொழுகும். நியாய நெஞ்சினர் சாயாப்பள்ளர் - இதற்குரிய கதைகளோ சம்பவங்களோ அறிந்தவர் உரைத்தால் ஏற்கப்படும்.

## 146. சிங்கி மள்ளர்

பொருள் விளக்கம் தெளிவுபடவில்லை என்றாலும்

குறிஞ்சி நில மக்கள் வேடன், வேட்டுவன், குறவன், குறத்தி என்பார். மனித மனங்களை அறிந்து, நாளும் கோளும் திதியும் கணித்தறிந்து, கைவிரலாலும் முகக்குறியாலும் கணித்தறியும் வல்லமையுள்ளவர்கள். அத்தகையவர்களே திருமண உறவும் பிறவும் கொண்டொழுகும். மருத நில மக்களை சிங்கி மள்ளர் என அழைத்திருக்கக் கூடும்.

## 147. சிறுதாலி கட்டி மள்ளர்

'தமிழர் திருமணத்தில் தாலி' எனப் பல பேரறிஞர்கள் ஆய்வு நூல்கள் பல வெளி வந்துள்ளன. 189 வகையினதான - சாதிக்கொரு தாலி கோவை அசோகா திருமண மண்டபத்தில் காட்சிப் பொருளாக வைக்கப் பெற்றிருக்கிறது. அவற்றுள் புலிப்பல்தாலி - பெருந்தாலி - சிறுதாலி, தவளைத்தாலி, காசுத்தாலி, குமிழ்தாலி, குண்டுத்தாலி, பொட்டுத்தாலி, சங்குத்தாலி எனப் பல வகைப்படும். கொங்கு நாட்டு கொங்கர், வேடர், வேட்டுவர், காவலுவர், மாவலுவர், பூவலுவர், வேளாளர், வெள்ளாளர், செட்டியார், பிள்ளை, உடையார், மூப்பன், நாடார், பள்ளர், பறையர், கள்ளர், மறவர், அகமுடையோர் என்போர் யாவரும் அணியும் தாலி ஒருவகையான புலிப்பல் தாலியாகும். ஆனால் அதில் பெருந்தாலி, சிறுதாலி என இருவகைப்படும். பெருந்தாலி கட்டியவர் கொங்கு நாட்டைச் சார்ந்தவர்; சிறுதாலி கட்டியவர். சோழ, பாண்டிய நாட்டினராம். சிறுதாலி கட்டிய மள்ளர். தேவேந்திர குல சோழிய வேளாளராவர். பெருந்தாலி கட்டியவர் கொங்க மள்ளர் என்ற குடிவழியினராவார்கள்.

## 148. சின்னிய மள்ளர்

சின்னிய மள்ளர் என்று சொல்வது, ஒரு குறிப்பிட்ட பெயர்ச் சொல்லாகயிருக்கலாம். அல்லது உறவுடைய பெயர்ச்சொல்லாக இருக்கலாம். அய்யன் என்ற சொல் தலைவர், கடவுள், பெரியவர், அப்பா என்று பொருள் தரும் ஓர் உயர்ந்த சொல். பெரியப்பா சிற்றப்பா என்ற சொற்கள் உச்சாபேதத்தால் பெரிய்யன் சின்னய்யன் என்பது போல் உருமாற்றம் பெற்று சாதிப் பெயரை பின்னொட்டாகச் சேர்த்து சின்னியப்ப மள்ளர் என்று அழைக்கப் பெற்றிருக்கக்கூடும்.

## 149. சிவந்தி நாட்டு மள்ளர்

சிவந்திநாடு என்பது நாகூர், நாகப்பட்டணம், திருமறைக்காடு என்ற வேதாரண்யம் கடற்கரையை ஒட்டிய சில பகுதிகள் சிவந்தி நாடு என அழைக்கப்படுகிறது.

அப்பகுதியில் பல்வேறு குடிமக்கள் தம்முள் ஒன்றாகவிருக்கும் மள்ளரைக் குறிப்பிடும் சொல் சீவந்தி நாட்டு மள்ளர்.

## 150. சுந்தர மள்ளர்

சுந்தர மள்ளர் என்போரும் சுதந்தர மள்ளர் என்போரும் ஏறக்குறைய ஒன்றாக இருக்கலாம். எந்த விதமான, பிக்குப்பிடுங்கள் இல்லாமல், சுதந்திரமாக, தன்னிச்சையாக வாழும் போக்கினராகவிருக்கலாம். யாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம் என்ற செம்மாந்த போக்கினைக் கொண்டொழுகியவராக இருந்ததால் சுந்தர மள்ளர் சுதந்தர மள்ளர் என்று அழைத்திருக்கக்கூடும்.

உள்ளூர் விழாவிற்கும் மண்டகப்படி சாத்தலுக்கும் நாள் வழிபாட்டிற்கும் சுதந்திரமாக நெல்லளந்தவர். "ஈட்டமாய் உழுதரன் குடிகட்கே, குடிச்சுதந்தரம் ஈந்து" என திருமலை முருகன் பள்ளு நூல் 158 கூறும் கூற்றிற்கு ஏற்ப வாழ்ந்த மள்ளர் சுதந்தர மள்ளர், விலங்கொடித்த வில்லம்பர் என்றும் கூறுவர்.

## 151. சுவந்தர மள்ளர்

## 152. சுழிகணியா மள்ளர்

வயல் வள மள்ளர் ஆடுமாடுகளை கன்று காலிகளை நிரம்ப வளர்க்கும் நீர்மையர், ஆடு மாட்டிற்கு நோய் நொடி வந்தால் பண்டுவம்பார்க்கவும். மருந்து கொடுக்கவும் அறிந்திருக்க வேண்டும். "மாட்டுவாகடம்" என்ற "காலி பரிபாலன சிகிச்சாதீபம்" என்ற நூல்முறையை நன்கு கற்றவர்கள். சுழி என்பது நீர்ச்சுழி, அட்சரச்சுழி, மயிர்ச்சுழி, தொப்பூட்சுழி, அங்கச்சுழி, கல்லெறி சுழி எனப்பல்வேறு வகையினதாகும். இத்தகு சுழிகளை கணித்தறிந்து, எதிரதாக்காக்கும் அறிவினோர்க்கு, இல்லை அதிரவருவதோர் நோய் என்ற குறட்பாவின்படி, சுழி கணித்தறிந்து மாடு, கன்று வாங்கும் தன்மையர் என்பதால் அக்குடியினர்க்கு சுழி கணியா மள்ளர் எனப் பெயராகியிருக்கும். சுழி கணியா என்பது சுழி கணித்து என்று கூறுவர். செய்யா என்றும் வாய்ப்பாட்டு எதிர்மறைப் பொருளை நல்கும். பலகனார் என்ற குடிவழிப்பட்டம் மள்ளரினத்தார்க்கு உண்டு. பலகன் என்பது பல்லாவினன். பல ஆடு மாடு, எருமைகளுக்குச் சொந்தக்காரன். எனப்பல்வேறு கருத்துக்களை நினைவு கூறாமல் இருக்க முடியாது. ஆட்டிற்கும் மாட்டிற்கும் சுழி பார்ப்பதும் வைத்தியம் செய்வதும் நடைமுறைவகைப்பாடாகும்.

## 153. செங்கா மள்ளர்

செங்கா மள்ளர் என்பது உச்சரிப்பின் மாறுபாட்டால் அழைக்கப்பட்ட பெயராகும். முக்கூடற்பள்ளும் வேறு பள்ளு இலக்கிய நூல்களையும் படிக்கும் போது, நெல்லு வகையின் சிறப்பு, பயன், பலன் பற்றிக்கூறுவதோடு, வேளாண் துறையின் நுட்பமும் திட்பமும் நன்கு விளங்கும். அவ்வாறு கூறப்பெறும் பள்ளு நூல்கள் 96 என்பர். நெல்லுவகை 1000 என்பர். எண்ணிக்கை பெரிதல்ல. எண்ணங்களே பெரியது. வேளாண் விஞ்ஞானிகளே மூக்கின் மேல் விரல் வைத்து ஆச்சரியப்படும் அளவிற்கு புதிய புதிய நெல்லு வகையை உற்பத்தி செய்து அதன் பயன்பாட்டை உற்பத்தி பெருக்கத்தை உடலுக்கு ஏற்ப பலனின் விகிதத்தை உயர்த்திக்காட்டுவதாக உள்ளது. "செங்கார்" நெல் என்ற ஒருவகை உயர்ரக நெல்லைக் கண்டு பிடித்தவரின் பெயரில் அந்நெல்லின் பெயரமைந்துள்ளது. உண்மையான பெயர் மறைந்து அவர்கண்டு பிடித்த நெல்லின் அருமைப் பாட்டால் செங்கார் மள்ளன் எனப் பெயராகி இருக்கலாம்.

## 154. செம்பாட்டு மள்ளன்

செம்பாடு என்பது செம்மண் கொண்ட நிலமாகும். அந்நிலத்தில் வேளாண் தொழில் செய்யும் நெல்லுமை நீர்நாடராகிய மள்ளர்கள் புதியதாகக் கண்டுபிடித்த நெல்லுக்கு "செந்நெல்" என்றும் "செம்பாளை" என்றும் பெயரிட்டனர். மேலும் அதற்கு மாற்றாக உயர்ரகமாகக் கண்டுபிடித்த நெல்லின் பெயர் "செம்பாடு" அந்நெல்லினைக் கண்டுபிடித்தவர் தம் பெயராலும் மண்ணின் பெயராலும் அக்குடி மக்கள் நன்றி அறிதலோடு அழைக்கப்பட்ட பெயர் செம்பாட்டு மள்ளராம்.

## 155. செலுவா மள்ளர்

ஒரு காலத்தில் ஆடு மாடுகளே செல்வமாக மதிக்கப்பட்டது. கோயில்களுக்கு ஸ்ரீ காரியம் முட்டின்றி நடைபெற, ஆடுகளை நிவந்தமாக விட்டிருப்பதைக் கல்வெட்டுகளால் அறியலாம். தான காரியம், ஊதியப் பாடுகளாக நெல் அளந்து கொடுத்ததை, அதைமிகப் பெரிய செல்வமாக மதிப்பதை T.V. சதாசிவப் பண்டாரத்தார் எழுதிய பிற்காலச் சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு என்ற நூல்களால் நன்கு அறியமுடியும். நெல் பயிரிடுபவர், பாடு படுபவர், பண்ணாடி என்போர்; வயல்காரர் என்ற நெல்லளக்கும் பள்ளராவார். அவர் வாய்ச் சொல்லுக்கே

ஏவல் மொழிக்கே ஏங்கி நிற்போர் பலராவார். அதுபற்றியே செல்வாய் உடைய பள்ளர் செல்வாக்குமிக்கப் பள்ளர் என்பார் செலுவா மள்ளராம்.

## 156. சொட்டை மள்ளர்

'சொட்டா' என்றால் ஒருவகை கட்கமாகும். சொட்டை என்பது பள்ளம், பரிகாசம், பட்டயம் என்று பொருள் காணலாம். வேளாண் தொழில் செய்வோர் நோயின் தாக்கத்தால் "புகையான்" என்ற நோயால் நெற்பயிர் யாவும் வைக்கோல் மாதிரி கருகி பயனின்றி பயிரின்றி சொட்டை சொட்டையாக இருப்பதால் கேளி கிண்டலாக சொட்டைப் பள்ளர் என்று அழைக்கப்பட்ட சொல்லாகும். நாளடைவில் அச்சொல்லே குடிவழிச் சொல்லாகி சாதிப் பட்டயத்தை இணைத்து சொட்டை மள்ளர் என அழைக்கப்பட்டிருக்கலாம்.

## 157. சேரநாட்டு மள்ளர்

சேரநாட்டு மள்ளர் - சேரசோழ பாண்டியர் என்று படைப்புக் காலந்தொட்டு இருந்து வந்த தமிழ்க்குடி. அக்குடியில் சேரநாட்டு எல்லையில் வாழ்ந்து வந்தவர்களை பள்ளத்தில் பயிரிட்டவர்களை மல்லாண்ட திண்தோள் மள்ளர்களை சேர நாட்டு மள்ளர் என்று அழைத்தனர் போலும். சேர நாட்டில் வாழ்ந்தாலும் புலிப் பல்தாலி மட்டும் அணியும் சிறப்பினையுடையவர்கள்.

## 158. சோதிட மள்ளர்

நிலமும் பொழுதும் எப்படிப்பட்டது? காரே கூதிர் முன் பனி பின்பனி சிரிள வேனில், வேனில் என பொழுதைக் கணக்கிட்டு இன்ன பயிர் இன்ன காலத்து வரும். மழை வரும். காற்று வரும். வெயில் அடிக்கும் எனக் கணித்தறியும் வேளாண் தொழில் விவசாயிகள் "கணியர்" எனப்பட்டார்கள். அவர்களே சோதிடர், சோசியர் எனக் கூறினர். சோ என்றால் மதில் பாதுகாப்புக்கு உகந்தது. திடர் - தெளிவாக இருத்தல். பாதுகாப்பில் தெளிவாக இருக்க வருமுன் காக்கும் வல்லமையைக் கணித்தறிந்திருந்தனர். யாதும் ஊரே யாவரும் கேளிராய் வாழும் முறையைக் கண்டவர் கணியன் பூங்குன்றனார். நாடு தழுவிய பல்வேறு ஊர்களில் கணியர்கள் இருந்தனர். தூலூர், கணியூர், புலியூர் செந்தூர் என்ற ஊர்களில் வாழ்ந்தார்கள். மிகக் கூர்மையாக உடுக்களையே கணித்து நூற்றொரு கோடியினும் மேற்படக் கண்டவர். நேற்றும் இன்றும் கொம்பு சுற்றிக் காற்றடிக்கிறது. ஈழ மின்னல் சூழ மின்னுகிறது.

தவளைக் கத்துகிறது. தட்டாம்பூச்சி சுத்துகிறது. மண்மணக்குகிறது. என மழையின் வருகையைக் கணித்து இப்படியெல்லாம் மள்ளர் எனும் தேவேந்திர குலத்தார் - முக்கூடற்பள்ளு நூல்களில் பரக்கப் பேசப்படுவதால் அந்நாளில் வாழ்ந்த கணியர்களை - இந்நாளில் வாழும் சோதிடர், சோதிட மள்ளர் எனக் கூறலாம் அல்லவா?

## 159. சோழிய மள்ளர்

சோழிய மள்ளர் என்றால் சோழ நாட்டார் என்று பொருள். அவர்களே வேறு நாட்டில் இருந்தால், அந்நாட்டினின்று ஏதேனும் ஒரு காரணம் பற்றி வந்திருந்தாலும் அவர்களை சோழிய மள்ளர் என்றே அழைக்கப் படுவர். சோழிய மள்ளர் என்பாரும் சோளியப் மள்ளர் என்பாரும் இருவரும் ஒரே நிலையினர்தாம். உச்சாபேதத்தால் 'ழ' 'ள' கர பேதத்தால் இருவிதத்தினர் என்ற மாயையினைத் தோற்றுவித்த தல்லாமல் வேறு இருக்க முடியாது என்று கூறுவர்.

## 160. சோளிய மள்ளர்

சோளம் என்பது ஒருவகையான தானியம். கூலத்திலொன்று, சங்கஞ்செடி என்றும் கூறுவர். சோழ நாடு சோறுடைத்து, நெல் அளக்கும் பள்ளர் பிற்காலத்தில் நாயக்கர் காலத்தில் உண்ணுகின்ற உணவு, உடுத்துகின்ற உடை, வாழ்கின்ற வீடு, உழைக்கின்ற நிலம், பெற்ற சிறப்பு அத்துனையிலும் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தி நமக்கு அன்னியமாக்கினர். நெல்விளைவித்தாலும், வாரத்திற்கு ஒரு நாள் மட்டும் நெல்லஞ் சோறு, மற்ற நாட்களில் சோளம், ராகி, வரகு, தினை, சத்தகரை உணவையே தின்ன வேண்டுமென ஒரு கோட்பாட்டை வகுத்துவிட்டனர். உழத்திப்பாட்டு, பள்ளுப்பாட்டாக மாற்றம் பெற்றது. மள்ளர் பள்ளரானது, நிலத்திற்குச் சொந்தக்காரன் நிலத்தைப் பறித்து தண்ணி பார்க்கும் பருவக் காரனாக்கியதும் அக்காலமே. சோழிய மள்ளர் சோளி மள்ளர் என்ற சொற்கள் வேறு வேறு ஆனது. எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்ற தொல்காப்பிய நூற்பா பொய்யானதல்ல. இந்தக் காலமே மள்ளரெனும் தேவேந்திர குல வேளாளர்கள் வீழ்ச்சியுற்ற காலம். தமிழுக்கும் தமிழருக்கும் தாழ்நிலைவந்துற்ற காலம். சோளத் தானியத்தை உண்டு அதனால் சக்தி கூடுதலாகக் கிடைக்கும் என்ற சப்பைக் கட்டுப்பேச்செல்லாம் மேல்தட்டு வேளாண் கட்டுமானத்தால். ஆதிக்க சாதியாரால் அடாவழிச்சாதியாரால் ஏற்பட்ட சதி

என்பதை நெஞ்சில் நிறுத்துங்கள். சோழிய மள்ளர் சோளிய மள்ளர் என்பது உச்சா பேதத்தால் உருக்குலைந்ததல்ல. ஒன்றாக்கப்பட்டது. நெல்லளக்கும் நெல்வேலியாகக் கொண்ட ஊர் மள்ளர்சீமை. மறவர்சீமை ஆக்கப்பட்டது. பண்டாரப் பூசனை பார்ப்பனப்பூசை ஆனது. அர்ச்சனை தமிழ் - ஆரியர்ஆகமமாயிற்று. அனைத்து மக்களிடமும் பகைப் புழுதி படர்ந்தது.

## 161. சோனக மள்ளர்

சோனக மள்ளர் என்போர் பெற்றிருக்கும் பட்டம் ஓர் ஆச்சரியமான சொல். சோனகம் என்பது மேற்குத்திசை நாடு. கடல்கடந்து தமிழர்கள் வணிகத்தின் பொருட்டு, யவனம், உரோம், கிரேக்கம், எகிப்து மற்றும் கிழக்குத் திசை நாடுகள் எனச் சென்று வந்தனர். அந்நாட்டு மக்களோடு தொடர்பும் வைத்திருந்தனர். அவர்கள், பூம்புகார் என்னும் காவிரிப் பூம்பட்டினம், தொண்டி, காயல், விழிஞம், முசிறி என்ற துறைமுகப் பட்டிணங்களின் வழியாக வாணிகச் சந்தையை ஏற்படுத்தினர். கடம்பர்கள் என்ற கடலோடிகளே குடும்பர் என்றும் கூறுவர். இவர்கள் கடல் கடந்து வாணிகத்தின் பொருட்டாகச் சென்றவர்கள்தான் "கப்பறை மள்ளர்" என்ற தேவேந்திர குல வேளாளர்கள். அத்தகையவர்கள் சோனகர் என்பார். சோனகம் - அரபு தேசம், சோனகர் என்றால் துலுக்கர் அல்லது துருக்கியர் எனக்கூறப்பட்டிருக்கலாம். கப்பல் பயணத்தில் பல ஆண்டுகள் இரண்டறக் கலந்து கலப்பு ஏற்பட்டிருக்கலாம். அதனால் இவர்கள் சோனக மள்ளர் என்ற குடிப் பெயர் தாங்கியவராவர்.

## 162. சோனாட்டு மள்ளர்

சோனாட்டுப் பள்ளர் என்போர் வணிகத்தில் பொருட்டு துலுக்க - துருக்கியநாட்டிற்குச் சென்று அங்கேயே தங்கி விட்டவர்கள் என்றாலும், அவர் வழிவந்த குடும்பத்தார்களுக்கு அப்பெயரிட்டு அழைக்க அப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். துலுக்க மள்ளர் என்ற குடிவழியினர் தமிழகத்தில் வாழ்வதை நினைவில் தேக்க வேண்டும்.

## 163. சைவ மள்ளர்

தமிழ் மாநிலத்திலும் ஏன் ஹரப்பா மொகஞ்சதரோ என்ற பரந்துபட்ட தேசத்திலும் சிவலிங்க வழிபாடு மிகுதியாகஇருந்ததாக வரலாற்று ஆராய்ச்சியாளர் எழுதிப் போயினர். அதே போல மக்கா மதினா என்று

அழைக்கப்படுகிற முகமதிய நாட்டிலுள்ள புனிதத் தலத்திலும் சிவலிங்கத்தை வானிலிருந்து வீழ்ந்த புனிதக் கல்லாகக் கருதி "கல்பாவில்" முழங்காலிட்டு முத்தமிடும் நிகழ்வுகள் நடைபெறுவதாக அறிகிறோம். அத்தகு புகழ்வாய்ந்த சமயம் சைவம். அச்சைவ சமயத்தில் பள்ளத்தியர் ஆழ்ந்த புலமையாளராக இருந்து பட்டிமன்றத்தில் வாதிடுவது போல் சைவப் பள்ளி என்ற மூத்தாளும் வைணவப் பள்ளி என்று வாதமிடும் இளையாளும் கையாளும் சமயஞானம் சமயப்பற்றும் கைவரப்பெற்ற குடியில் பிறந்ததால் "சைவ மள்ளர்" என்று அழைக்கப் பெற்றிருக்க வேண்டும்.

### சைவசித்தாந்த மள்ளர்

வேதாந்தம் சித்தாந்தம் என்பது இந்து மதத்தின் சாரமாய், அதன் தத்துவக் கோட்பாட்டைச் சொல்வது. தத்துவம் என்பது ஒருகொள்கை அல்லது கோட்பாடாகும். தத்துவம் தொண்ணூறத்தாறு, 'தத்துவக் கட்டளை' என்பன போன்ற கோட்பாட்டை விளக்கவல்ல நூல்களும், தத்துவ போதகர்களும் தமிழகத்தில் எண்ணற்றோர் இருந்திருக்கிறார்கள்.

மதுரை மாநகர் இராசராசசோழன் பேரவையார் திருமதி கலா ரத்னவேல் எழுதிய "நாயன்மார்களும் தேவேந்திர குல வேளாளர்களும்" என்ற அரியதொரு ஆராய்ச்சி நூலை மதுரை ஆதினம் ஞானகுரு, 292-ஆம் ஸ்ரீ ல ஸ்ரீ அருணகிரிநாத ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரியகள் ஆசியுடன் வெளியிட்டுள்ளனர்.

இதில் சைவ மெய்யன்பர்கள் - சைவ உலகம் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் உலகு இன்புற தாம் இன்புற்ற தேவேந்திரகுல வேளாளர் சமூகத்தைச் சார்ந்தவர்கள் என பதினெட்டு நாயன்மார்களைப் பட்டியலிட்டு காட்டியுள்ளார்.

1. அரிவாள்தாய நாயனார்
2. இளையான் குடிமாற நாயனார்
3. எறிபத்த நாயனார்
4. ஏயர் கோன் கலிக்காம நாயனார்
5. ஐயடிகள்காடவர் கோன் நாயனார்
6. கழற் சிங்க நாயனார்
7. கூற்றுவ நாயனார்
8. கோச்செங்கட் சோழ நாயனார்
9. கோட்புலி நாயனார்

10. சக்தி நாயனார்
11. செருத்துணை நாயனார்
12. சேரன்மான் பெருமாள் நாயனார்
13. நின்றசீர் நெடுமாற நாயனார்
14. புகழ்ச் சோழ நாயனார்
15. மங்கையர்க்கரசி நாயனார்
16. மானக்கஞ்சாற நாயனார்
17. மெய்ப்பொருள் நாயனார்
18. விறல்மிண்ட நாயனார்

மூவர் முதலி என்று சமயக்குரவர்களால் ஏற்றுக்கொண்டு அம்மையும் அப்பனுமான சிவசக்தியால் ஞானப்பாலுண்டு ஞானசம்பந்தர் பரம்பரையில் வந்த வணக்கத்திற்குரிய அடிகள் பெருமான் அங்கீகாரம் கிடைத்தபிறகு, நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்.

## 164. தத்துவ மன்னர்

பொருள் தெளிவாகப் புலப்படவில்லை. தேவேந்திர குல வேளாளர்கள் என்போர் கற்றறிந்த புலவர்களாகவும், சமய உணர்வு கொண்டவர்களாகவும், ஏர்க்களமும் போர்க்களமும் கை வரப்பெற்றவர்களாகவும் பல வகையான கலையைக் கற்றவர்களாகவும் அரசியல் அதிகாரிகளாகவும், படைத் தளபதிகளாகவும் விளங்கியதாக குறிப்புகள் குவிந்து கிடைக்கின்றன. தமிழில் தத்துவ நூல்கள், தத்துவத்திரட்டுகள், தத்துவக் கட்டளைகள் என பல்வேறு நூல்கள் இருக்கின்றது. மண்ணும் மக்களும் மருத்துவமும் உடற்கூறும் பிரபஞ்சத்தின் தோற்றம். வளர்ச்சிகளை விந்து கூறப்பட்டுள்ளது. 'ஒன்றிலிருந்து ஒன்று, ஒன்றுக்காக ஒன்று, ஒன்றை நம்பி ஒன்று, ஒன்றின் மேல் ஒன்று, ஒன்றினால் ஒன்று, ஒன்றுக்குள் ஒன்று, எனப்பல தத்துவங்கள் கூறுவார்கள். அத்தகைய தத்துவங்களை எண்ணம், சொல், செயலால் உள்வாங்கி வாழும் உலகிற்கு ஒளியூட்டும் மக்களை, மள்ளர்களை தத்துவப் பள்ளர் என்று கூறினர். படைத்து, காத்து, அழித்து, மறைத்து, அளிப்பதே பஞ்சவிசாரம் என்ற தத்துவ தரிசனம்.

**உள்ளே தெய்வம் கல்லடா, உலவும் தெய்வம் செம்படா**
**பேசும் தெய்வம் நாமடா, பெரிய தெய்வம் சோறடா**

எனப் பேசுவர்.

## 165. தவமுடி மன்னர்

தவமுடி மள்ளர் என்றால் எடுத்த காரியத்தை முடிப்பவர் என்று எளிய தமிழில் கூறலாம். தன்னை இழந்து

தன் நாமம் கெட்டு, தவமிருப்பவர். நோன்பு நோட்பவர். எண்ணியது எண்ணியாங்கு எய்தும் தூறவு மேற்கொண்டவர், சடாமுடி வளர்த்து புறவெண்ணம் துறந்தவர்கள், கடுமையாக உடல் வருந்த உழைத்த நோன்பிகள், அனைத்தினத்திலும் இருப்பவர். அதுபோல் மள்ளர்தம் மக்கட் பகுப்பில் உள்ளோரை தவமுடி மள்ளர் என்று கூறியிருக்கலாம்.

## 166. தவளை தின்னி மள்ளர்

தவளை என்ற நீர்வாழ் உயிரினம் இன்றைய உலகில் மிக விலையுயர்ந்த பண்டமாகும். உலகநாடுகளில் ஏற்றுமதி செய்து அன்னிய முதலீட்டை ஈட்டித்தரும் வணிகப் பொருளாகும். வற்றிவதங்கி மண்ணோடு மண்ணாகி கிடக்கும் தவளை, குளத்தில் குட்டையில் நீர்வரும் நாளில் ஆற்றில், மழை துளிக்கும் அறிகுறி தோன்றினால் நீர்ப்படு சொறித்தவளை உயிர் பெற்று மழையை கூவி அழைக்கும் சஞ்சீவியாகும். மக்கள் உடல் நலத்திற்கும் வளத்திற்கும் தவளை மிகுதியாகப் பயன்படுத்தப்படும் ஒரு பொருளாகும். நெல்பயிரினூடே தவளை வாழ்வது மிகவும் அவசியம்.

கடுமையான உடலுழைப்பு, மதிநுட்பமும், செயல் திறனும் வளர தவளை உணவு மிகவும் பயனுடையதாகும், எனக் கருதி அதன் பயன்பாட்டை எண்ணிப் பயன்படுத்தியவர், தவளை தின்னி மள்ளர் என்பவராவார். இன்னோர் திருமணச்சடங்கில் பெரியார் மாவட்டம், ஈரோட்டு மண்ணும், அம்மண்ணைச் சுற்றி இன்னும் "பெரியமனக்கான்", "சின்ன மனக்கான்" என்று பெயரிட்டு தவளை விருந்து, சம்பந்திச் சாப்பாட்டிற்கு சாங்கியத்திற்கு வைப்பதாகவும், வைத்த உணவில் கலந்தவர்களை அறிவேன். அவர்தம் குடி வழியினரே தவளை தின்னி மள்ளராவார்.

## 167. திருமுடி மள்ளர்

தேவேந்திர குல வேளாளர்கள் பள்ளர் அல்ல மள்ளர் ஆம் மன்னர் எனச் செம்மாந்து தேவனால் ஆசிர்வதிக்கப்பட்ட இந்திர குல வேந்தர்களின் குல குரு இரா.ம. தேவ ஆசிர்வாதம் கூறுவார்கள். அந்த மள்ளரெனும் மன்னருக்கு வம்சாவழியில் பாரம்பரிய அந்தஸ்தில் பட்டம் பரிவட்டம் சிலபோது சூட்டுவார்கள். அப்போது சமூகப் பட்டக்காரர், பதினெட்டுக் குடும்புகளுக்கும் ஓலை எழுதி இந்திரன் கோயிலில், சமூகப் பெரியவர்கள் ஒன்றுகூடி ஊர்த்தலைவர் குடும்பர். பண்ணாடி, பட்டக்காரர், அமைச்சர், ஊர்வலம், நகர்வலம், பட்டணப் பிரவேசம்

என்ற வடிவில் நாள் குறிப்பர். சடங்கு சம்பிரதாயத்திற்கு உட்பட்டு, வெள்ளரளி, செவ்வரளி, அடுக்கரளி, குச்சிவெட்டி வடிவமைத்துக் கட்டி மலர்களால் திருமுடிக்கு ஒப்பனை செய்வார்கள்.

திருமுடி பட்டக்காரர்களால் இந்திரன் கோயிலில் சடங்கு சம்பிரதாயத்தோடு முடி சூட்டுவார்கள். நெற்றிப்பட்டம் கட்டுவார்கள். ஆட்சிச் சக்கரமாகக் கையில் செங்கோலும், வாளும் (கத்தி) பாவணைக்குத் தருவார்கள். பட்டம் கட்டியவர் குரவை யிடக்கொடி ஏற்றுவார்.

வெள்ளையானை வெண் கொற்றக்குடையின் கீழ், நடை, பாவாடை, நடைமாற்று விரித்துத் திப்பந்தம் பிடித்து 16 சீர், 18 ஆயுதங்களோடு, பட்டு, பட்டாடை, மாலை, மரியாதை, மங்கலப் பொருள், ஊர், நாடுகளைச் சுற்றிவரும். தெருத்தெருவாக பல்வேறு வகையினதான ஆரார்த்திகள் எடுப்பார்கள். திருமுடி சூடியபின் தேவேந்திரன் பெருமைகளைப் பாடுவார்கள். பெண்கள் குரவை ஒலி யிடுவார்கள். ஊர்வலம் முடிந்ததும், இந்திரன் கோயிலில் பட்டம் சூட்டப்பட்ட பண்ணாடி, தலைவர் அறிவுரைக் கூறுவர். அபிசேகம் முடிந்ததும் வந்தபெரு மக்களுக்கு மாலை மரியாதை வெற்றிலை பாக்கு, தேங்காய் பழம் தந்து உண்பித்து அனுப்புவார்கள். அப்போது திருமுடி சூட்டுவார்கள். பட்டக்காரர் திருமுடி மள்ளர் என்று அழைக்கப்படுவார்கள் என்பது மரபு மரியாதையாகும்.

## 168. திருநாம மள்ளர்

உலகனைத்திற்கும் காத்தல் பொறுப்புடையவர் திருமால், அத்திருமாலியத்தின் சின்னம் திருநாமம். திருமாலி யத்தை வைணவ சம்பிரதாயம் என்பர். வைணவ சம்பிரதாயத்தை மேற்கொண்டவர் அத்துணை பேரும் தரிப்பது திருநாமம். அந்நாமத்தில் வடகலை, தென்கலை என இருபகுப்பாகப் பகுத்து தென்கலை யாருக்கு "U" நாமம், வடகலையாருக்கு "Y"நாமம் என அடையாளப் படுத்தினர். எனவே பொதுவாக நாமம் தரித்தவர் திருநாம மள்ளர் எனப் பெயர் பெற்றனர். திருநாமம் சாத்தும் மள்ளர்கள் வீட்டில் சைவ சமயத்தைச் சார்ந்தவர் வீட்டிலிருந்து பெண்ணெடுத்திருந்தால் ''திட்டுக் கழித்தல்'' என்ற சம்பிரதாயம் ஒன்று நடப்பதுண்டு.

தாசய்யர்களை அழைத்து திட்டுக் கழிக்கும் சம்பிரதாய முறையில் சங்கு சக்கரமுத்திரை வெங்கலத்தால் ஆனது. நல்லெண்ணெய் விளக்கில் பழுக்கக் காய்ச்சி சைவ சமயப்

பெண்ணின் வலது கை தோள் முண்டாவில் பதியவைப்பர். அதுமுதல் வைணவி ஆனதாகப் பொருள். நெற்றியில் 1 கீத்து சிவப்பு நாமம் மட்டும் பெண்கள் வைப்பார்கள். முத்தரை வைத்தாயிற்று என்று முகமலரக் கூறும் மதப்பற்று தெரியும். இது பற்றியே

நெற்றியில் இடும் மஞ்சளைப் பொட்டும்
மற்றொரு திருநாமப் பொட்டும்"

இட்டு விளங்குவார் என முக்கூடற்பள்ளு கூறும்.

## 169. திருநீற்று மள்ளர்

'நீரில்லா நெற்றிபாழ்" என்ற சொல்லை மனதில் பதிய வைத்து திருநீற்றுப் பள்ளர் காலையில் எழுந்து கடன்களை முடித்து மந்திரமாவது "நீறு, வானவர் மேலதுநீறு, சுந்தரமாவது நீறு, துதிக்கப் படுவது நீறு, செந்துவர் வாயுமைபங்கன் திருவாலவாயின் திருநீறே" என ஐந்தெழுத்து மந்திரத்தை நெற்றியில் இடுவர். அத்தகையவரை அவர்தம் சாதிப் பெயரைச் சேர்த்து திருநீற்று மள்ளர் என அழைப்பர். சமய உணர்வில் ஆண்களுக்குப் பெண்கள் இளைப்பில்லை காண் என்பது முக்கூடற் பள்ளால் விளங்கும்.

## 170. துட்டுச மள்ளர்

துட்டுசப் பள்ளர் என்பார்
கறுக்கும் கடவாய் மருப்பின்
முறுக்குமீசையும் - சித்திரக்
கத்திரிகை இட்ட வண்ணக்
கன்னப் பரிசும்
துறுக்கில் வளைதடி சேர்த்து
இறுக்கும் கச்சையும் - செம் பொற்
கோலப் புள்ளி உருமாலும்
நீலக் கொண்டையும்"

உடைய துட்டுச மள்ளர் கையில் குறுந்தடியும் வளைதடியும் வைத்து வைணவமோ - சைவமோ சாதி சமய வெறியுணர்வோர் கொண்டு, நினைத்ததை முடிக்கும் பண்ணை வயல் செல்வம் மிகும் பள்ளரெல்லாம் பாடிக்குரவையிட்டு நாட்டிலுள்ள தெய்வநிலை நாட்டமிட்டுக் கூறுவார்கள்.

## 171. துலுக்க மள்ளர்

துலுக்க மள்ளர் என்போர் துலுக்கர் என்ற முகமதிய

மதத்தைச் சார்ந்தவராவார். மத இனஇழிவொழிய இஸ்லாமே நன்மருந்து என சாதிக் கொடுமையால் ஆதிக்க அடாவடிச் சாதியார்களின் கொடுமைக்கு ஆளானவர்கள். மதமாறிய துலுக்கராவார். இன்னோரே சோனக மள்ளராகவும், கப்பறை மள்ளராகவும் உள்ள குடி வழியினர் என எண்ணும் வண்ணமுள்ள மள்ளராவார். கடல் கடந்த நாடுகளில் எல்லாம் வாணிகத் தொடர்பும் நல்லெண்ணத் தொடர்பும் வைத்து நாடாண்டவர் சேர, சோழ, பாண்டியர் என்ற முத்தமிழ் வளர்த்த மூவேந்தர். அவர் வழிவந்த மள்ளரின மக்கள் யானை, குதிரை, ரதம், காலாட்படை என்ற நான்கு படைவைத்து ஆட்சி செய்தவர். சோனக நாடு என்பது முகமதியர் - துலுக்கர் நாடுகள் - அரபு நாடுகள் என்று இன்று பொருள் கொள்ளலாம். அந்நாட்டினின்று வந்தவர்தம்முள் இனக்கலப்போ, மதமாற்றமோ அன்றி தொழில் வழித் தொடர்பாலோ மள்ளர் குல மக்களுள் சிலர் துலுக்க மள்ளர் எனப் பெயராகி இருக்கலாம். துலுக்க நாச்சியார் என்று ஸ்ரீ ரங்கத்திலுள்ள திருவரங்கப் பெருமானுக்கு அணுக்கமாக அல்லது வைப்பாக இருப்பதையும் நினைவு கொண்டு பார்க்க வேண்டும். இதுபற்றியே ஆத்மார்த்தமாகக் கலந்த மக்களை துலுக்க மள்ளர் என அழைக்கப் பெற்றிருக்கலாம்.

## 172. துறைஎறி மள்ளர்

துறையெறி மள்ளர் என்ற சொல்லுக்குச் சரியான விளக்கம் விளங்காவிட்டாலும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் சமூக அமைப்பு தொன்று தொட்டு இருந்துவருகிற ஒரு அமைப்பாகும். இம்மக்கள் வாழும் நாடாக இருந்தாலும், ஊராக இருந்தாலும் கரையாக இருந்தாலும், கிராமமாக இருந்தாலும் குடும்பாக இருந்தாலும், பாளையம், பட்டி, தொட்டி, சிற்றூர், பேரூர் என்று இருந்தாலும் அவ்வப் பகுதிகளில் ஒரு சமூக அமைப்பு, பட்டக்காரர், ஊர்த்தலைவர், நாட்டுப் பண்ணாடி, ஊர்ப் பண்ணாடி அல்லது குடும்பர், மூப்பர் இடத்திற்குத் தகுந்தாற்போல் அமைச்சர் அல்லது மந்திரி எனப் பெயர்கள் மாற்றம்பெற்று, வளவுப் பண்ணாடி, ஊர்ச்சபை உறுப்பினர், மேல் சபை உறுப்பினர், இளந்தாரிப் பண்ணாடி, தாசய்யர், குரு, ஓடும்பிள்ளை, ஏகாலி, பரியாறி, கொட்டு என அமைப்புகளை உருவாக்கிவிடுவர்.

ஒருவர்மேல் வழக்கு என்று வந்தால் வாதி, பிறதிவாதிகளை அழைத்து ஊர்ச்சபை கூடி

விசாரணைக்குட்பட்ட வரை மையத்தில் நிறுத்தி ஒருவட்டம், ஓட்டாலோ, ஓடைக் கல்லாலோ போட்டு, ஒரு சிறு துரும்பினை தலையில் வைப்பர். விசாரணை செய்வர். அதற்குப் பெயர் முறி என்பார்கள். முறி வைத்த பின்னரே விசாரணை தொடங்கும். அதுவே சத்திய வாக்கு வாங்குதல் அல்லது சபை கட்டிப் பேசுதலாகும். சாட்சி, ஆவணம், தடயம் என்ற முகாந்திரங்களை கண்டு கேட்டுப் பேசி கூட்டு முடிவுக்கு வந்து, தலைவரால் தீர்ப்பு வழங்கப்படும். தீர்ப்பாயம் செய்யப்படும். தண்டிக்கப்பட்டவர். இன்று Unauthorised என்று சொல்லப்படும் புறம்போக்கு நிலப் பகுதியில் குடியமர்த்தப்படுவர். ஒதுக்கி வைப்பர். அதனை மதுரை தமிழ்ப் பேரகராதி எடுத்தெறிதல், நீர்த்துறை, படித்துறை, எல்லை எனப் பொருள்படுதலும் கர்ண பரம்பரையாக செவிவழிச் செய்தியாகச் சொல்லப்படும். "தள்ளிவைத்தல்" இவர்களைத் துறைஎறி மள்ளர் என்று அழைப்பர். தள்ளிவைப்பது, கிணற்றில் நீரெடுக்க விடாமை, பண்டங்கள் வாங்காமை, கொடுக்காமை, வண்ணார், நாவிதர் ஒத்துழையாமை, தீக்கொடுக்காமையாகும். தீக்கொடுக்காமை என்பது தீக்கடை கோலால் தீ உண்டாக்குவர். எனவே, தெருக்கடந்து வந்து கொஞ்சம் தீவாங்கிப் போவர். தணலை தீக்கங்கை, நெல் உமியில் போட்டு வைத்திருப்பர். மற்ற வீட்டார் எருவட்டியிலோ கொட்டாங்குச்சியிலோ தனலை எடுத்துப் போவர். நெருப்பின் முக்கியத்துவத்தை உத்தேசித்துத்தான் குற்றம் செய்து கட்டுப்படாதவர்களுக்கு நெருப்பும் நீரும் கொடுக்காது தள்ளி வைத்தல் என்ற நீதி வழங்கல். இச்செய்தி பாண்டிய மன்னன் மேல் குதிரை வாங்கிய பணம் தராமை பற்றி வட்டமிட்டுப் பெற்றதாக யுவான் சுவாங், மார்கோபோலோ போன்ற யாத்ரீகர்கள் கண்டதாக தன் பயணக்குறிப்பில் பதியப் பெற்றுள்ளது வியந்து பாராட்டப்பட்ட தீர்ப்பு முறையாகும். இம்முறை துறைஎறி மள்ளரிடம் இன்றும் நடைமுறையில் உள்ளது.

## 173. துஷ்ட மள்ளர்

பொருள் சரிவரத் தெரியவில்லை. வழியில் போவோர் வருவோரிடம் ஆறழித்து, கொள்ளையடிக்கும் கள்ளத் தொழில் செய்வாரோடு இணைந்து வழிப் பறி செய்த பள்ளரை ஆறழி மள்ளர் என அழைக்கப்பட்டிருக்கலாம். சிலருக்குக் குலத் தொழிலாகும். அத்தொழிலுக்கு உடன் செல்பவருக்கு அப்பெயராகலாம்.

## 174. தெய்வேந்திர மள்ளர்

மருதநிலத்தின் தெய்வம் வேந்தன் என்பர். வேந்தன் மேய தீம்புனல் உலகம் எனக்கூறி தன் மூதாதையரை முன்னோர்களாக, குல தெய்வமாகப் போற்றி பாடிப் பரவி, வழிபாடு செய்தவர். உயர்வான தொரு கருத்தாக்கத்திற்குத் தெய்வத்தை மேலேற்றி தெய்வம் வேந்தன், தெய்வேந்தன், தெய்வேந்திரன், தேவர் + வேந்தர் = தேவேந்திரன் எனத் தேவர்களுக்கு எல்லாம் தேவனாக தேவர் தேவனாகத் தன் குல முதல்வனை, மருத நிலத் தலைமகனை நினைவு கூர்பவர்கள் தெய்வேந்திர மள்ளர் ஆவார்களாம்.

## 175. தென் சிறுவாசல் நாட்டு மள்ளர்

புதுக்கோட்டை மாவட்டம் என்று அழைக்கப்படும் நாடுதான் கானாடு, கோனாடு என்று அழைக்கப் பெற்றது. அந்நாட்டில் பல்வேறு மக்கட் கூட்டம் வாழ்ந்திருக்கலாம். அவ்வாறிருந்த மக்களில் மள்ளர் எனும் தேவேந்திர குலப் பள்ளர்களை, தெற்குப் பகுதியில் உள்ள சிறுவாசல் தெருவில் வாழ்ந்து வந்த மக்களை அடையாளப் படுத்த, தென் சிறு வாசல் மள்ளர் என்று அழைத்திருக்கக் கூடும். இதே நாட்டில் வடசிறு வாசல் நாட்டு மள்ளர் என்ற குடிவழியினரும் இருந்ததை நினைவுகூர வேண்டும்.

## 176. தெற்கத்தி மள்ளர்

நாயக்கர் ஆட்சிக்கு முன் நண்பர்களாக இருந்த பாண்டிய நாட்டின் மூத்த குடிகளாம் மள்ளர்களும் மறக்குடிகளும் நாயக்கர் ஆட்சியை ஆதரித்த நிலையிலிருந்து மாறி எதிர்க்க ஆரம்பித்தார்கள். மறவர் சீமை என ஒரு தனி நாடாகப் பிரகடனப் படுத்தி விட்டார்கள். "நெல்லைச் சீமையோ பள்ளச் சீமையோ" என்ற பழமொழிக்கேற்ப நெல்லை வேலியாக நாற்புறமும் செந்நெற்குடி மூத்தபள்ளர் சூழ்ந்திருக்க, நடுவே நெல்லையப்பர் கோவிலமைந்ததென்பர். நெல்லளக்கும் பள்ளர் மிகுந்த ஊர். ஏன் நிறைந்த ஊர், மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலிச்சீமையில் மள்ளர்களும், மறவர்களும், கள்ளர்களும் கலந்திருப்பார்கள். ஒருவர்க்கொருவர் விடுதலறியா விருப்பத்தோடு அப்பனும் மகனுமாக, அண்ணனும் தம்பியுமாக மாமனும், மைத்துனனுமாக தோழமை உணர்வோடு, வாழ்ந்து வருபவர்கள். உழுதற்குப் போனாலும், போருக்குப் போனாலும் துணையோடு போ என்ற கூற்றுப் படி ஒன்றியிருந்தவர்கள். போரும் பகையும் ஒன்று சேர்ந்து

வாழ்ந்த மக்கள் மத்தியில் மறவர் சீமை என்ற பிரகடனம், மள்ளர் என்பவரை பள்ளர் எனப் பெயர் சூட்டி, பள்ளு இலக்கியங்களை உருவாக்கி, வயல், தோட்டம் துறவு என்று நிலபுலங்களை எல்லாம் பறித்து பிறருக்குக் கொடுத்து, வயல்காரன் என்பவரை வாய்க்காரன் ஆக்கினர். கிழார் எனச் செம்மாந்திருந்தவர்களை, ஒன்றுமிலார் என்ற நிலையை ஏற்படுத்தி, நிலத்திற்குச் சொந்தக்காரனை, வாரக்காரனாக, நீர்கட்டியாக, தண்ணி பாய்ச்சுபவனாக, பருவம் பார்ப்பவனாக நீராளி ஆகச் செய்து, கல்வி சமூக, பண்பாடு பொருளாதாரத்தில் நலிவடையச் செய்தார்கள். ஒன்றுபட்டிருந்தவர்கள் வேறுபட்டுப் போனார்கள். நாயக்கர் நல்வாழ்விற்காக வந்தேறிகளின் வாழ்விற்காக குளம்வெட்டி, தூர்வாறி, கண்மாய் செப்பஞ் செய்து, வேளாண் தொழில் செய்வதை விட்டு, கோவில் கட்ட ஆரம்பித்தனர். கோயிலால் சிலர் பிழைப்பு நடத்த வேளாளர்கள் வறுமைக் கோட்டிற்குக் கீழே போனார்கள். கோவில்களில் பரம்பரையாகப் பணியாற்றிய பண்டாரங்களை பள்ளப் பண்டாரங்களை, வள்ளுவப் பண்டாரங்களை, கோயில் பண்டாரங்களை பூசை செய்யவிடாமல் அவர்கள் உரிமையைப் பறித்து பூசுரர்க்குக் கொடுத்தார்கள். தமிழ் வழிபாடும் வழக்கிழந்தது.

நிலத்தை மறவர்களுக்கும் தமக்குத் துதிபாடுபவர்களுக்கும், கோயில் பணியை, பூசை செய்யும் உரிமையை இறைவனுக்கு ஓதும் வழிபாட்டு மொழியை மாற்றி, ஊரில் நாட்டில் உட்பகையை உருவாக்கி விட்டார்கள். முதுகளத்தூர் என்ற பகுதியில் வாழ்ந்த முதுகுடிக் கல்வெட்டில் தேவேந்திரர்களும் தேவரும் ஒன்றியிருந்த ஒற்றுமைக்கு ஆதாரமான ஒருகல்வெட்டில் பெரிய தேவப்பள்ளன் என்று பொறிக்கப்பட்டிருக்கிறது என கொங்கு செப்டம்பர் 1974 இதழ் கூறும். 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய வையாபுரி பள்ளு நூலில் தேவேந்திரப் பள்ளன் என்றும் கரிவளம் வந்த நல்லூர் கல்வெட்டு A.R.E. 432/1914.589/1926ல் தேவேந்திரக் குடும்பன் எனப் பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் பெரிய தேவக்குடும்பன், பள்ளக் கவுண்டர் என்ற ஒருதாய் வயிற்றுச் சேய்களாக வாழ்ந்து வந்தார்கள். கொண்டும் கொடுத்தும், உடன்போக்கால், சங்க இலக்கியத்திற்கு சான்று பகர்ந்தவர்கள், பாண்டிய நாட்டில் முதுகுடித் தமிழச்சியின் மூத்த பிள்ளைகள்தான், சேர, சோழ, பாண்டியர் என்போர், அவர்களில் சேரனும் சோழனும் வெளிப்போந்து வேறு ஆட்சிகளை அமைத்துக் கொண்டதாகவும் பாண்டியர்

மட்டும் பாண்டி நாட்டிலேயே இருந்ததாகவும் தொன்மக்கதைகள் பலஉண்டு. பாண்டியன் என்ற பட்டத்திற்கு உரிமை பாராட்டும் தமிழ்த் தாய் ஈன்ற மக்கள் 1. மள்ளர், 2. மறவர், 3. அரையர் (வலையர்), 4. பரவர், 5. நாடார் என்ற ஐந்து குலச்சார்பாளர்களே. பஞ்ச பாண்டியர் என்று விளங்கியவர்கள் என்ற கருத்தினையும் புறக்கணிக்க முடியாது. இவர்கள் ஒன்றுபடக்கூடாது என்று சூழ்ச்சியால் நாயக்கர் தம் ஆட்சி, அதிகாரம், செய்த சதியால் பிரிந்து பேதா பேதம் வளர்ந்து, ஒவ்வொரு வகையினரும் தத்தம் சாதியோடு தெற்குத் திசை விளங்க இணைத்து அழைத்துக் கொண்டனர். தெற்கத்தி மள்ளர், தெற்கத்தி கள்ளர், தெற்கத்தி வலையர், தெற்கத்தி நாடார் (தெஷ்ணநாடார்) என அழைக்கப்பட்டனர்.

பொதுவாக அண்மைக் காலங்களில் கல்லூரியில் சேர்ந்த மாணவர்கள், தங்கள் பிரதேசப்பற்றால் எந்த வகை வேறுபாடும் பாக்காமல் எம்.ஆர்.டி. ஸ்டுடன்ஸ் என்று குழுக்கமாக ஒரு அமைப்பையே இயக்கி வந்தனர் என்பதை நாடே அறியும். 'எம்' என்றால் மதுரை, 'ஆர்' என்றால் இராமநாதபுரம், 'டி' என்றால் திருநெல்வேலி என்பதின் பொருளாகும். இந்த வகையில் தான் மள்ளரும் மறவரும் ஒன்றாக இருந்து, தமிழர்தம் வீரத்தின் விளிம்பைத் தொட்டு வெற்றிமாலை சூடினர். ஆளப்பட்டோர் சூழ்ச்சியால் ஒன்றாக இருந்தவர்களை வேறாக்கி மள்ளனை விட்டு மறவனை அடிப்பதும் கள்ளனை விட்டுப் பள்ளனை அடிப்பதும் கள்ளன் என்று பள்ளன் ஏசுவதும், பள்ளன் என்று கள்ளன் தூற்றுவதுமான உட்பகையை, உருவாக்கினர். காலகாலமாக களத்தில் பொருவதும், ரணத்தில் முடிவதும் என்று மாறுமோ? உறவு என்று கூடுமோ? தெற்குத் திசையில் வாழ்ந்த பள்ளர்களின் கூட்டமைப்பை தெற்கத்தி மள்ளர் என அழைக்கப்பட ஏதுவானது. ஆண்ட வேந்தர் மூவரும் அன்றும் அடித்துக் கொண்டனர். இன்றும் அடித்துக் கொள்கிறார்கள். வேந்தர் இடத்து வேறுபாடு களைவது எப்போது?

## 177. தேவ மள்ளர்

தேவர், ரிஷி, முனி என்ற பெயர்கள் புனிதமானதாகவும், பூசைக்கு உகந்ததாகவும், தெய்வத்தன்மை பொருந்தியதாகவும் கருதி, பலபேர் தத்தம் சாதியின் மேட்டுமைத் தன்மையை உயர்வாகக் காட்ட முனைந்தனர்.

சேர, சோழ, பாண்டியர்கள் தத்தம் மெய்க்கீர்த்தியில் உடையார் ஸ்ரீ ராசராசத்தேவர், இராசேந்திரத் தேவர் என்றும் சுந்தர பாண்டியத் தேவர் என்றும் பொறித்துக் கொண்டதை நாம் அறிவோம். கள்ளர் சரித்திரம் என்ற நூலில் கள்ளர்களுக்கு 348 பட்டங்கள் இருப்பதாக நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் கூறுவார்கள். அவற்றுள் 197ஆம் பட்டம் "தேவர்" என்பதாகும். தேவர் என்ற பட்டத்தை கள்ளர்கள் யாரும் வைத்துக் கொள்வதாகத் தெரியவில்லை. வைத்துக் கொள்வதற்குரிய பெரியகால் வழி மக்கள் திரட்சியுடைய கூட்டமுமல்ல என ஏகடீயம் பேசுவது நாம் அறிந்ததே. மேற்படி சாதியில் நாடு பாதி நாட்டார் பாதி என்ற சொல்லடைவைப் பெற்றதைப் போல் பெரிய தொகையுடையதுமல்ல. எனவே நாட்டார், சோழகர், வாண்டையார், தொண்டைமான், பிள்ளை என்ற பட்டங்களை மட்டும் பயன்படுத்துவர்.

கள்ளர் சரித்திரத்தில் குறிப்பிடப்பட்ட 348 பட்டங்களில் பயிலப்படும் தமிழகத்தில் வேற்றுச் சாதியார் பிரயோகிக்கும் பட்டங்கள் புழக்கத்தில் இருப்பதால் அப்பட்டந்தாங்கியோர் தம் இனம், சாதி என்ற மக்கள் தொகைக் கணக்கில் கூடுதலாக கூட்டிச் சேர்த்துக் கொண்டு திருப்தி அடைவதைத் தவிர வேறு செய்திகள் கிடையாது.

ஒரு உயர்வான ஆக்கங்கருதி கள்ளர் மறவர் அகம்படையர் பிள்ளை, முதலி, செட்டி என்போர்கள் பட்டங்களைக் கொண்டிருந்தாலும், வலுக்கட்டாயமாக 'தேவர்' என்ற பட்டந்தாங்கியவர் பலராவார்கள். அவ்வகையில் பள்ளிப்படையாட்சி, வன்னியர்களுக்குத் ''தேவர்'', பட்டமும் பூணூால் போடுவதும் மான வளமையுமுண்டு. கொங்கு வேளாளர் கீர்த்திப் பட்டயம் கல்வெட்டுக்களில் தேவன், தேவக்கவுண்டன், தேவ மன்றாடி எனப் பதியப்பட்டுள்ளது. செம்படவர்களுக்கு தேவர் பட்டம் உண்டு என 728 ஆம் பக்கம் அபிதான சிந்தாமணி என்ற கலைக்களஞ்சியம் கூறும். முதலியார்கள் தேவர் பட்டம் சூடியதை அருண்மொழித் தேவர் என்பதால் அறிய முடியும். பலிஜா வாருபுராணம் எழுதிய சேலம் பகடாலு நரசிம்மலுநாயடவர்கள் 400 பட்டங்களை கொண்டது பறையர் குடி என்பார். அவற்றுள் வள்ளுவப் பறையர், தாதாப்பறையர், தங்கலாப்பறையர் என்று கூறுவார். பல்லவப் பேரரசில் அரசவைக் குருவாக, அமைச்சராக, கணியராக, அம்பாரி மேல் ஏறி முரசறைவோராகவும், தளபதியாகவும் விளங்கியதாக பல்வேறு அகப்புறச்

சான்றாதாரங்களைக் காட்டுவார்கள். திருக்குறளையாத்தவர் "திருவள்ளுவதேவர். சங்கறுக்கும் குலத்துதித்த நக்கீரரை "நக்கீரத்தேவர்" என்றும் தேவர் பட்டந்தாங்கியோர் பல குடிமக்களாவார்கள். தேவர் குறளும் திருநான்மறை முடியும் மூவர் தமிழும் முனிமொழியும் என்ற பாட்டில் திருவள்ளுவக்குடியினரை தேவராகச் சொல்லப்படுகிறது. இதே போல திருத்தக்க தேவர். அரசதிகாரத்தின் வல்லாண்மையால் இன்றைய அரசை மிரட்டி கூறக் கூடிய அளவிற்கு வற்புறுத்தி முக்குலத்தோர் "தேவர்" என்ற பட்டம் பெற்றதைப் போல் பெறப்பட்டது. பாண்டியன் என்ற பட்டத்தை வீரபாண்டியக் கட்டப்பொம்மன் சூடிக் கொண்டதைப் போல் பேரரசர்கள் பெயர்களை பட்டங்களை சிற்றரசர்கள் பலர் சூடிக் கொண்டுள்ளனர். உலகமே ஏற்கும் உயர்வான ஆக்கச் சொல் ''தேவர்'' என்பதால் புனையப்பட்டது என்பது பொருத்தமுடைதாகும்.

மள்ளரெனும் தேவேந்திர குலத்தார் மருத நில மக்களாவார்கள். இன்னோரே நிலமக்களாகவும் குடிமக்களாகவும், தலைமக்களாகவும் தம்மைப் பாவித்து இந்திரகுலம், தேவேந்திரர் குலம், வேந்தர் குலம், தேவர் தேவனான தேவேந்திர குல வேளாளர் என்று பூரித்து புளகாங்கிதம் அடைவதோடு, விட்டுவிடாமல் "தேவ மள்ளர்" என்ற குடி வழிப் பெயரையும் கொண்டிருக்கிறார்கள் என்றால் - இதனை என்னவென்று சொல்வது? சாதிய நெறி முறை எதனால் தோன்றியது என எண்ணிப் பார்க்க வேண்டுமல்லவா?

## 178. தேவேந்திர மள்ளர்

தேவேந்திர மள்ளர் என்ற சொல் பட்டியல் சாதியில் பயின்று வரும் சொல்லாகும். தேவர்களுக்கெல்லாம் தலைவர் தேவேந்திரன் மருத நிலத்தின் குடிவழி மூலவர்கள் - முதல்வர்கள். தெய்வமாக வணங்கப்படும் தெய்வம் குலதெய்வம் இந்திரன் - தேவேந்திரன் வழிவந்தவர், அவர் பள்ளத்தில் பயிர் செய்தவர். ஆகவே, தேவேந்திர மள்ளர் என அழைக்கப் பெறலாயிற்று. இப்பட்டமும் ஒரு உயர்வான ஆக்கத்தின் பொருட்டே உருவாக்கிய பட்டமாம்.

## 179. தொட்டிய மள்ளர்

கரூர் மாவட்டத்தில் தொட்டியம் என்றதொரு ஊருண்டு. அவ்வூர் தொன்மையும் பழமையான ஊர். அவ்வூரில் தேவேந்திர குல வேளாளர்கள் வாழ்ந்து

வருகிறார்கள். அவ்வூரில் வாழ்ந்து வரும் மக்களை தொட்டிய மள்ளர் என அழைக்கலாயினர்.

## 180. தொட்டம்பட்டி மள்ளர்

கோபிதாலுக்கா பாரியூர் என்றதொரு புகழ் வாய்ந்த கொண்டத்துக் காளி கோயில் உள்ளது அனைவருக்கும் தெரியும். கொண்டத்துக் காளியுடன், ஏழு சகோதரியார்கள் பிறந்தார்களாம். அவர்கள் முறையே செலம்பூர் அம்மன், அந்தியூர் பத்திர காளியம்மன் பாரியூர் கொண்டத்துக் காளியம்மன், மொடச்சியூர் அம்மன், திங்களூர் அம்மன், ஆதியூர் அம்மன், அளுக்குளி அம்மன் ஆவார். பாரியூர்க் கொண்டத்துக் காளியின் கணவர் "பள்ளர்" என்னும் மள்ளராவார். தன் கணவராம் "பண்ணாடி" தன்னை நடவு செய்யும்படி, துன்புறுத்துகிறார் என்று பாரியூர் கொண்டத்துக்காளி தனது சகோதரி திங்களூர் அம்மனிடம் முறையிட, திங்களூர் அம்மன் பண்ணாடியை சூலாயுதத்தால் குத்திவிட்டு கிழக்கு வாசல் வழியாக வெளியேறித் திங்களூர் சென்றடைகிறார். கொண்டத்துக் காளியின் கணவர் இறக்குமுன் கொண்டத்துக் காளியிடம் "அடிகாளி உனக்குப்பண்ணாடி நான் எனக்குத்தான், இவ்வாலயத்தில் முதல் பூசை செய்ய வேண்டும் என்று சொல்லி உயிர் விட்டாராம். மள்ளராம் பண்ணாடியை அடக்கம் செய்த இடமே "மள்ளர் சமாதி" என்று தேவேந்திர குல வேளாளர்களால் வழிவழியாக வழிபடப்படுகிறது. பள்ளப்பண்ணாடி சமாதிக்கும் பூசை செய்த பின்னரே காளிக்குப் பூசை செய்கின்ற வழக்கம் இன்றும் நடைபெறுகிறது.

பாரியூரை ஒட்டி தற்போதுள்ள பெருமாள் கோயில் ஒரு காலத்தில் "சாம்பல் மேடாக இருந்தது. 200, 300 ஆண்டுகளுக்க முன் மள்ளர் என்னும் பண்ணாடிமார்கள் குடியிருந்த கோயிலாகும். பாரியூர்க் கோயில் மரபு வழியில் பண்ணாடிமார்கள் நிர்வாகத்திலிருந்து வந்தது. இடையில் பெரிய போர் ஒன்று நடந்தது. அந்தப் போரில் துரோகியின் துணையுடன் பகைவர் வென்றனர். போரில் தோற்ற மள்ளர்கள் கோயிலில் இருந்து பூசை மணித்தட்டு, வில், வேல், வாள், கதை, சாட்டை, சிலையை பேழைக்கூடையில் மூடி புதைந்து வைத்து விட்டு சிலர் பாரியூரிலிருந்து வெளியேறி, பொறியியல் அறிஞர் டாக்டர் குருசாமி சித்தன் பிறந்த புகழ் வாய்ந்த மண்ணாம் கணபதிபாளையத்தில் சிலர் குடியேறினார்கள். பெரியார் மாவட்டம் ஈரோட்டுக்கருகில்

உள்ள தொட்டம்பட்டியில் குடியேறினார்கள். இன்று செல்வம் செல்வாக்கு நிலபுலம் - பட்டம் பதவியோடு வாழ்ந்து வருகிறார்கள். அவர்தம் வாரிசாக மேயர் முனுசாமிப் பண்ணாடியும், தொட்டம்பட்டியாரும் முக்கியமானவர்கள். அவ்வூரில் வாழும் மள்ளர்கள் தொட்டம்பட்டி மள்ளர் என அழைக்கப்படுவாராயினார்.

## 181. தொண்டை நாட்டு மள்ளர்

செங்கற்பட்டு, காஞ்சிபுரம், புதுக்கோட்டை போன்ற இடங்கள் தொண்டைமான் பற்றி மிகுதியாகப் பேசப்படும் சீமைகளாகும். மக்கள் வாழ்க்கை, அரசு, அதிகாரம் செய்யப்பட்ட இடமாகும். தேவேந்திர குலத்தான் குலப்பட்டம். குடும்பன், பண்ணாடி, என்பவற்றை குறும்பன், மன்றாடி என்பவர்களுடன் ஒரு முகப்படுத்தி, இவர்கள் பல்லவர்கள் என, H.A. ஸ்டுவர்ட் கருதுகிறார். பெ(F)ல்லா, என்பவர் இந்தியாவிலுள்ள பள்ளர்கள் என்றே புலப்படுவதாக பாலஸ்தீன் தமிழ்க்குடிநாடே என்ற நூலில் மு.சி.பூரணலிங்கம்பிள்ளை கூறுகிறார். பஃலவர் பல்லவராகவும், பல்லவர் பள்ளராகவும், யார் எதைக் கூறினும் கூறட்டும். தொண்டைமண்டலத்தை சோழர் கைப்பற்றிய போது பல்லவர் படையைச் சேர்ந்தவர்கள் சோழர் படையில் சேர்ந்து பணியாற்றிவர் பள்ளி என்றும் அவ்விதம் சோழர் படையில் பணியாற்றாமல் நகரில் தங்கியவர் பள்ளர் என்றும் கருதுகிறார். இதே கருத்தை சீனிவாச அய்யங்காரும் உறுதிபடுத்துகிறார். பாடிவீடு என்பது படைவீரர்கள் தங்கும் இடமாகும். கட்டூர் என்றும் கூறுவர். வேளை வரும் போது போரில் கலந்து கொள்ள பாடி வீட்டில் தங்க வைப்பர். இவரே வேளக்காரப்படை என்றும் கூறலாம். அவ்வாறு தங்கிய வரை குறைவாக மதிப்பட முடியாது. தொண்டை நாட்டில் வாழ்ந்த மள்ளர்கள் தொண்டை நாட்டு மள்ளர் என்றும், தொண்டைமான் என்றும் அழைக்கப்பட்டனர். அந்நாட்டில் பெருந்தொகையாக வாழ்ந்த மள்ளரினமக்கள் இன்று அருகிக் காணப்படுகிறார்கள் என 1891 ஆம் ஆண்டு அரசு எடுத்த ஆவணங்களில், குடிக்கணக்கில் காணப்படுகிறது.

## 182. தொல்லைமாலை விலை கூறும் மள்ளர்

சரியாக, தற்காலிகமாகப் பொருள் விளங்கவில்லை. வரலாற்றுப் பின்னணியோடு கூடிய சம்பவங்கள் ஏதேனும் இருக்கக் கூடும். பிறருக்கு இரக்கப்பட்டுப்போய் துன்பத்தை, சுமைக்கை, பழியை வலிய விலை கூறி ஏற்று வந்த

போக்கினை பெற்றவர்களை, சொல்லழகோடு சுவைபட தொல்லைமாலை விலை கூறும் மள்ளர் என்று பெயர் வந்திருக்கலாமோ?

## 183 நண்டுதின்னி மள்ளர்

சங்க இலக்கியங்கள் கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி இரண்டு, மூன்று நூற்றாண்டைச் சார்ந்தது என்று அறிஞர்கள் கூறுவார்கள். பயிர்த்தொழிலுக்கு வேளாண்மை என்ற சொல்லோ, பயிர்த்தொழில் செய்பவர்களுக்கு வேளாளர் என்ற பொருளோ கிடையாது. அதற்கு மாறாக, மள்ளர், உழவர், களமர், காராளர், தொழுவர், கடையர், ஏரோர் என்ற சொற்களே பயின்று வரக் காண்கின்றோம். நெல்மலிநீர் நாடராகிய மேற்காண் மள்ளர்களே, இன்றைய பள்ளர்கள் என அழைக்கப்பட்டனர்.

இன்னோரர் வீட்டின் முற்றம் தென்னங்கீற்றோ, வைக்கோல் புல்லோ கூரையில் மேய்ந்திருந்தாலும், வீட்டின் முற்றத்தில் இரைந்து - சிதறிக்கிடக்கும் நெல்மணிகளையும் - தவசங்களையும் தின்னவரும் கோழியை காதணியாலும், வேறு வகையான விலை மதிப்புமிக்க கற்களாலும் அடித்துத் துரத்தியதாக இலக்கியங்கள் பேசும்.

பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை என்ற சங்க இலக்கியங்களில் நெல்லறியும் களமரும், தொழுவரும் ஆரல் மீனை மடியிலும் கையிலும் சுடச்சுட வைத்து உண்பார். திட்டிய அரிசிச் சோற்றை நண்டும் பீர்க்கங்காயும் சேர்த்து கறி சமைத்துண்பார், தம் இல்லம் நோக்கி வரும் விருந்தினர்களுக்கும் கொடுப்பார் எனக் கூறப்படுகிறது.

நண்டினையும் நத்தையினையும், மீனையும், ஆமையையும் கறி சமைத்து உண்பதும், உண்பிப்பதும், வேளாண் மக்களுக்கு உள்ள பண்பாடாகும். உழவர் தலைவன் ஊரனாகவும், கிழானாகவும், மகிழ்நனாகவும் மதிப்பர். மருதநில மள்ளருக்கு தெய்வம் வேந்தனாவார். வேந்தனே தேவேந்திரனாம். அதுபற்றி தேவேந்திர குலத்தார் எனக் குலப் பெருமை கூறுவர்.

ஏரையும் போரையும் இரு கண்ணெனப் போற்றும் மள்ளர்கள், ஏர்க்களத்தும் போர்க்களத்தும் ஈடுபடும் மள்ளர்கள், உடலை வளர்க்கும் உபாயம் அறிந்தவர்களாவார்கள். உண்ணும் உணவில், பருகும் நீரில், செய்யும் தொழிலில் உடலைப் பேணிக் காப்பார். நோயின்றி நூராண்டு வாழ, நண்டும் நத்தையும் மீனும் ஆமையும் உண்பார். அவ்வாறு விரும்பி உண்ணும் ஒரு குடியினரை

"நண்டு திண்ணிமள்ளர்" எனக் காரணப் பெயரிட்டு அழைக்கப் பெற்றிருக்கலாம்.

## 184. நத்தை தின்னி மள்ளர்

மருதநிலச் சேற்றில் வியர்க்க உழைத்த உழைப்பாளர்கள் - பண்ணை வயல் உழவரெல்லாம், உண்ணுகின்ற உணவும், பருகுகின்ற நீரும், செய்கின்ற தொழிலும் அத்தொழிலால் ஏற்படும் நலிவும் - அந்நலிவைப் போக்கும் உணவை - "மருந்தை உண்ண வேண்டும்" மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றியுணின் என்ற வாக்கே போதும். நண்டு, நத்தை, ஆமை என்கின்ற வயலும் வயல் சார்ந்த பகுதிகளிலும் நீரில் வாழும் ஆமையை, ஆமைப் புளுக்கை ருசித்துண்ணும் தமிழினம், ஈளை, இருமல், கக்குவான், நெஞ்சடைப்பான் போன்ற உடலை உருக்குலைக்கும் நோயினுக்கு கைகண்ட மருந்தாகும். செடி, கொடி, பூ, தலை, காய், கனி, எனக்காட்டில் மேட்டில் விளையும் கிரைகளை உண்பது உகந்தது என வைத்திய சாஸ்திரத்தில் வல்லவரும் அகத்திய மள்ளர், அகத்தியக் குடும்பர் வழிவந்தவர்களுமான பள்ளர்கள், நத்தையை தின்றதால் நத்தை தின்னி மள்ளர் என அழைக்கப்பட்டனர்.

செம்பூத்து, கருமந்தியின் கறியும், குருதியும் உண்பதாக வைத்தியச் சாஸ்திரிகள் - வலுவாக அடித்துப் பேசுகிறார்கள். பாகனேரி, பட்ட மங்கலம் சிவகங்கைப் பகுதியில் வாழும் அனைத்தின மக்களும் மிகுதியாகப் பயன்படுத்தும் பண்டுவ உணவாகும். முயல் கறி முறுக்கேற உடல் நலத்திற்குகந்ததாம். இவற்றை முனைப்புடன் உண்பவர்கள் நத்தை தின்னி மள்ளராவார்.

## 185. நட்டுவ மள்ளர்

தோல் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி, என்ற இசைக்கருவிகள் நான்கு நிலங்களிலும் ஐந்து திணை மக்களாலும் மன மகிழ்விற்கும் பேதமற்ற நிலை, கலையுணர்வோடு பயன்படுத்தப்பட்ட கருவிகளாகும். கிணைப்பறை என்பது மருத நில மக்கள் என்ற தேவேந்திர குல வேளாளர்கள் தம்முள் பறை கொட்டுவர். துடியன், பாணன், பறையன், கடம்பன் என்றின் நான் கல்லது குடியுமில்லை என்ற 355 ஆம் புறநானூற்றுப் பாடலின் விளக்கம் கூறுவதாவது.

'துடியன்' என்ற சொல் இக்காலத்தே பள்ளர் என்று

அழைக்கப்படுவார் என அபிதான சிந்தாமணி 868 ஆம் பக்கத்தில் விளக்கம் தந்துள்ளது. நட்டுவம் என்பது ஒரு வகை வாத்தியம் வேறுபாடற்ற சமூக உறவில் இசையும் கூத்தும் கலந்து, "பள்ளுக் கூத்தாடுங்" காலங்களிலும் பிற நேரங்களிலும், நட்டுவம் என்ற இன்னியம் முழக்குவர். முழவின் பெயரது நட்டுவம் என்றும் அது பலாப்பழம் போன்றது என்றும் சங்க இலக்கியம் கூறும். அந்நட்டுவத்தை இசைத்ததால் நட்டுவ மள்ளர் எனக் கூறலாம்.

## 186. நரம்பு கட்டி மள்ளர்

மள்ளர் எனும் தேவேந்திர குலத்தார் பண்ணும் பள்ளும் பாடவல்ல, பனுவலும் தெரிந்த கூத்தர். பாடல் வல்ல பாணர். பண்ணுக்கேற்ப ஆடும் பண்ணாடி, பண் பாடியாவார். மருதநிலக் குடியினர் வேளாண் தொழிலால் பெருக்கிய விளை பொருள்களை சேமித்து முடிந்த பின் அறுவடைக்குப் பின் கலை, நாகரிகம், பண்பாடு, குளம், கோயில் என தன் கவனத்தை ஈர்க்கும் எண்ணத்தில் படிந்த செயலை, சிந்திப்பர். பின்னர் செயல்படத் தொடங்குவர். அந்நிலையில் நரம்பினால் இசை கூட்டும் யாழ் என்னும் இன்னிசையைப் பெற பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பன, ஒரு நரம்புள்ள சுரையாழியிலிருந்து, ஆயிரம் நரம்புகளுள்ள பெருமங்கலம் (ஆதியாழ்) வரை பல்வேறு வகை நரம்புக் கருவிகள் சங்க காலத்தில் இருந்தன. மல்லனைப் போல் வேசங் கட்டியாடல் மல்லாடல் (கண்ணன்) துடியனைப் போல் வேசங்கட்டி ஆடல் (முருகன்) துடியாடல் அயிராணி இந்திராணி ஆடிய ஆட்டம் "கடையம்" என்ற ஆட்டம் யாழிசையில் வெளிப்படும். "இந்திரகாளியீயம்" என்ற பெயர் கொண்ட இசைத்தமிழ் இருந்ததாக சிலப்பதிகாரப் பாயிரத்தில் கூறுகிறார்.

"பராசவ முனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திர காவியம்" இருந்து மறைந்த நூல். இந்திர குல மக்களில் ஒரு பிரிவினர் பாடல் வல்ல பாணராக இருந்ததை நினைவில் கொண்டு வரவேண்டும். குழலினிது யாழினிது என்ற குறள் நெறியை - பாணர் தம் பிழிவே தமிழாதியர் தாய்வழிச் சொத்தாகும். யாழின் இசையை கேட்ட மக்கள் புதிய புதிய உத்திகளில் யாழ் உருவாக்க, நரம்புகளை கட்டி, தட்டி, இசையை எழுப்பிய முயற்சிக்கு முன்னோடி - தந்தி வீணையை அதன் வளர்ச்சியாக விரியும் இவையாவும் நரம்பின் தொடர்புடையன. வெட்டிய நரம்பை கட்டும் வித்தைபடைத்த வைத்திய நுணுக்கம் அறிந்தவர் ஆதலால் நரம்பு கட்டி மள்ளர் என்று அறியப்பட்டிருக்கலாம்.

## 187. நாகநாட்டு மள்ளர்

தாம் வாழ்கின்ற இடத்தின் பெயரால், அந்நாட்டினை இணைத்து அழைப்பது ஒன்றும் புதிதல்ல. அது போல் பள்ளர் என்னும் மள்ளர் நாக நாடு என்று சொல்லப்பட்ட இடத்தில் வாழ்ந்து வந்த வரை நாகநாட்டுப்பள்ளர் என்று அழைக்கப்பெற்றிருக்கலாம். பவணலோகம், நாகலோகம் இந்திரன் தொடர்புடைய நாடு, யானை என்றும் நாகத்திற்குப் பெயருண்டு. யானை நாடு நாக நாடாகலாம். நாகர் குடி வழியினர் மள்ளர் என்ற கருத்தும் நோக்கத்தக்கதாகும். நடுகல்வழிபாடும் நாகவழிபாடும் கொண்ட நாகர் குடி வழிமுறையராம்.

## 188. நாகமழித்த மள்ளர்

நாகமழித்த மள்ளர் என்ற பெயருக்கு ஒருவரலாறோ சம்பவமோ இருந்திருக்கக்கூடும். தற்சமயம் அறியமுடியவில்லை. நாளை மறுநாள் விடியும் - தெரியும்.

நாகம் என்பதற்குப் பல பொருள்களுண்டு. யானை, மலை, நாகபாம்பு என்பனவாகும். மள்ளர் என்ற தேவேந்திர குல வேளாளர்கள் பல குலங்களையும் குடிகளையும் தன்னகத்தே கொண்டவர்கள். 'பணிக்கன்' என்ற குலப் பெயரும் "யானை கட்டி மள்ளர்" "ஆனையூர் மள்ளர்" "காட்டானை மள்ளர்" "காட்டானை வென்ற மள்ளர்" என்ற குலப் பெயரும் இருக்கக் காண்கிறோம். 'நாக நாட்டு மள்ளர்' 'பாப்பு மள்ளர்' 'பாம்பாட்டி மள்ளர்' என்ற சொற்பொருள் அனைத்தும் கம்பர் நாகமதுநாமுற நாகமென நின்றான் என்று யானை, மலை, பாம்பு மூன்றின் திண்மையும் உறுதியும் தொடர்பும், புலப்படுத்தியது. யானையை பிடிப்பது, பயிற்றுவது, வளர்ப்பது, அழிப்பது அவற்றினை நாட்டு நலனுக்குப் பயன்படுத்துவது என்று பொருள் கொண்டு பார்த்தால் தேரும் தெருகரியும் வென்ற மள்ளர் என்பதால் நாகம் அழித்த மள்ளர் என்ற பெயர் வழங்கியிருக்கலாம்.

## 189. நாட்டிய மள்ளர்

பண்ணும் பாட்டும் கூத்தும் நடத்தும் இயல்பினர் பண்ணுக்கேற்ப விறல்பட ஆடும் வித்தகராக இருக்கலாம். காரணம் இல்லாமல் காரியமில்லை. நெருப்பில்லாமல் புகைவராது. பள்ளர் என்ற குடிவழியினருள் யாரேனும் ஒருவர் நாட்டியத்தில் ஈடுபாடும் தேட்டையும் கொண்டிருந்திருக்கக் கூடும். அக்காரணம் பற்றி நாட்டிய

மள்ளர் என்ற பட்டம் சூட்டி அதன் வழி அவர் குடியினர் நாட்டிய மள்ளர் பெற்றிருக்க வேண்டும்.

## 190. நாட்டாண்மை மள்ளர்

நாடு நகரம் பட்டி தொட்டி சிற்றூர் பேரூர் என்ற அனைத்து இடங்களிலும் குடும்பு வைத்த குடும்புகள். ஊர்ச்சபை, கிராமசபை நாட்டுச்சபை, நாட்டார் சபை என்ற அமைப்பு முறையை தொன்றுதொட்டு, தேவேந்திர குல வேளாளர் பஞ்சாயத்து சபையை, ஊர்ச்சபையை அமைத்து பண்ணாடி, பட்டக்காரர் ஊர்ச்சபை உறுப்பினர், நகர நாட்டில் ஆட்சிகளை உருவாக்கி, வளவுப்பண்ணாடி, ஊர்ப்பண்ணாடி, நாட்டுப்பண்ணாடி, பதினெட்டுப்பட்டி ஊர்க்குடும்புகளின் பண்ணாட்டுப் பிரிவுகள் அமைத்தனர். அந்தந்த நாடுகள் மட்டும் சம்பந்தப்பட்ட வழக்குகளை அந்தந்த நாட்டு, ஊர்ப் பண்ணாடி, பட்டக்காரர்களே விசாரணை நடத்தி முடிவுகளை அறிவிப்பதும் - இரண்டு மூன்று நாடுகள் சம்பந்தப்பட்ட பிரச்சனையாக இருந்தால், நாட்டுப் பண்ணாடி - நாட்டாண்மைக் கூட்டம் சமூக - மடம், கூடங்களில் - அம்பலங்களில் கூட்டம் கூட்டப்பட்டு தீர்வு காண்பதும் உண்டு. ஊர்த்தகராறுகள் - சாதி - சமூகத் தகராறுகள் - குலங்கோரி பெண் எடுத்தலும் விலக்கலும் - கோயில் குளம்புதுக்கள் திருவிட, கொடை நடத்த நாட்டாண்மை - பண்ணாடி, பட்டக்காரர் - நாட்டுப்பண்ணாடிகளின் கூட்டமைப்பே தீர்ப்பு வழங்கும். முடிவு எடுக்கும் அதிகாரம் பெற்றது நாட்டாண்மை மள்ளர் முடிவே முடிவாகும்..

## 191. நாட்டாண்மை அழித்த மள்ளர்

குடும்பத்தை, ஊரை, நாட்டை ஆட்சி செய்வோர் அப்பழுக்கற்ற அறவோராய் இருக்க வேண்டும். அவ்வாறில்லாமல் குடும்பத்தை ஆட்சி செய்யும் குடும்பரும், ஊரை ஆட்சி செய்யும் ஊராளியும், நாட்டை ஆட்சி செய்யும் நாட்டாண்மையும், குட வேலை முறையால் தெரிவு செய்யப்பட்டிருந்தவர்கள் என்றாலும் பாரம்பரியமாக வருபவர்கள் என்றாலும் தன்னால், தன் பரிசனத்தால், ஊனமிகு பகைத்திறத்தால், கள்வரால், உயிர்கள் தம்மால், ஆன பயம் ஐந்தும் தீர்க்கும் போக்கும், காக்கும் அருகதையும் அற்றவராக இருந்தால், ஏன் குடி தழுவிக்கோலோச்சும் மாநில மன்னனாக இருந்தாலும் எதிர் நின்று சமராடும் போர்க்குணம் மிக்க தலைவர்கள் இருப்பர். மக்களைத் திரட்டி நீதியை நிலை நாட்ட, நாட்டாண்மை அமைப்பையே எதிர்த்து,

அழித்த பள்ளர். நெற்றிக் கண்ணைக் காட்டியவர் சிவனே - சிவபெருமானே என்றாலும் "குற்றம் குற்றமே" எனக் கூறும் நெஞ்சுரம் படைத்த மல்லர்கள் நாட்டாண்மையை அழித்த மள்ளர் என்று கூறுவர்.

## 192. நாட்டாண்மையை வென்ற மள்ளர்

அமைப்பைச் சிதைப்பதும் அழிப்பதும் பெரிதல்ல. குற்றம் குறைகண்ட போது திருத்தத்தைத் தொடங்கி, திருத்த முடியாத நிலையில் அழிக்க வேண்டிய நிலை ஏற்படும் (356) சட்டப்பிரிவு போல். அவ்வாறு அழிக்கப்பட்ட, ஒழிக்கப்பட்ட கலைக்கப்பட்ட நாட்டாண்மையை - நிலைநாட்ட, நாட்டாண்மையுள்ளடங்கிய குறைகளை நீக்கி - நிறை செய்து, நிம்மதியை உருவாக்கி, நீதியை நிலைபெறச் செய்த, வென்ற பள்ளருக்கு மக்கள் நாட்டாண்மையை வென்ற மள்ளர் என்று பெயரிட்டழைத்திருக்கலாம்.

## 193. நார்முடி மள்ளர்

கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்த குடியாம் சேர சோழ பாண்டியர் என்ற தமிழாதியர்கள். அன்னோருள் நார் முடி சூடியவர், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரன் என்பார் பிறங்கடையர் "நார்" என்ற புனை பெயரோடு பலவின மக்கள் தமிழகத்தில் உள்ளனர்.

வாழியரோ வாழி வருபுனல் நீர்ஆன் பொருநை
சூழ்தரும் வஞ்சியார் கோமான்தன் தொல்குலமே

என இளங்கோஅடிகள் தம் சிலம்பில் வாழ்த்துகிறார். சேரர்வஞ்சி, கரூரா? விழிஞமா? என்பது பற்றி நமக்குக் கவலையில்லை. யாதும் ஊராம் யாவரும் கேளிராய்" நாம் பார்ப்போம். களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரன் என்பான் யார் என்று பார்ப்போம். பகைவர்க்கு அஞ்சி ஒடுங்கியிருந்த சான்றோர்கள் ஒன்று கூடி களங்காயால் கண்ணியும் பனை நாரால் முடியும் புனைந்தவராம். அவர்வழி வந்தோரெல்லாம் அவர் வாழ்கின்ற பகுதியில் ஒக்கலும் மக்களும் நார்முடி என மரபு வழிப்பட்டம் சூட்டி மகிழ்வர். எனவே "பள்ளரல்ல மள்ளர் ஆம் மன்னர் என்ற எழுச்சியின் குரல் தான் நார்முடி மள்ளர் என்று அழைக்கப்படுவார்.

## 194. பச்சை மள்ளர்

பச்சை என்ற சொல் பல பொருள் தரும் ஒரு சொல்லாகும். பசுமை, வேகாதது, இளமை, உலராதது,

இடர்க்கர் மொழி, மரகதம், மகாவிஷ்ணு, புதன், தெய்வம் முதலியவற்றிற்கு படைப்பது. உடலில் குத்தும் பச்சை, மிகுதி, தோல், பரிமளம், புதர் எனப் பல பொருள் தரும் உடல் அழகிற்கும், கலை எழிலுக்கும் அஃகுபஞ்சர் முதலான சிகிச்சை முறையை, மூலிகை முறையில் ஊசியில் ஏற்றுவர். மள்ளர் மட்டுமல்ல மற்ற மக்களும் சங்க காலந்தொட்டு கையாண்டு வரும் முறையாகும். ஆண் பெண் என வயது வரம்பில்லாமல் தோள், தொடை, கை, கால், மார்பு, நெற்றி, பொய்க்கண் இடவலபுறம் என்பதான இடங்களில் இன்றும் குத்திய கோலம் வயதான - பள்ளரின மக்களிடம் காணலாம். இத்தகையவர்களை பச்சைகுத்தி மள்ளர் என்று அழைக்காமல் எவ்வாறு அழைப்பது?

## 195. பட்டணக்கரை மள்ளர்

நாகரிகத்தின் பிறப்பிடமே ஆற்றங்கரைதான். கங்கைக் கரை, காவிரிக்கரை, பொருநை, நொய்யல் நதி, பாலாற்றங்கரை நாகரிகம் என்பன பற்றிய பல ஆய்வு நூல்கள் வெளிவந்துள்ளன. அதன் சிறப்பியல்புகளை வெளிப்படுத்தியுள்ளதையும் நாம் அறிவோம். ஆற்றுக் காலாட்டியர் என்ற பள்ளரின மக்கள் ஆற்றங்கரை, படுகைகளில் ஓரம் பாரங்களில் வாழ்வதை இன்றும் காணலாம்.

"தடிவீ ராசாமி கதை" பதிப்பாசிரியர் முனைவர் ஆ.நிர்மலா தேவியின் குறிப்பில், ஏழு ஊர்களைச் சேர்ந்த பள்ளர்களுக்குத் தலைவனாக இருந்த செம்பராக்குடும்பன், வடகரை, தென்கரை, மேல்கரை, கீழ்கரை என்று நான்கு கரை நிலங்களையும் உழுது பயிரிட்டதாகக் காணப்படுகிறது. அறிஞர் பூங்குன்றனார் கூற்றுப்படி, குடும்பு, கரை, கட்டளை ஆகிய சொற்கள் நிலத்தோடு தொடர்புடைய சொல்லாக ஏற்று "பண்படாத நிலத்தை வேளாண்மை செய்ய, 'கரையீடு', செய்வதன் மூலம் பிரித்துப் பயிர்செய்திருத்தல் வேண்டும். 'கரை' என்ற சொல் பிற்காலக் கல்வெட்டுகளில், பங்கு, நில அளவு, ஓலை, உரிமை போன்ற பொருளில் வழங்கியுள்ளதால் பட்டணக்கரை என்றால், நகர நாட்டினர் என்றும் பட்டினக்கரை என்றால் நெய்தல் நிலப்பகுதியினர் என்றும் பொருளாகும். காடு திருத்தி கழனியாக்குதலைச் செய்யும் பள்ளர் பட்டணக் கரைப் பள்ளர் என்று அழைக்கப் பெற்றிருக்கலாம். கடலும் கடல் சார்ந்த, ஆறும் ஆறு கலக்கும் கழி முனையும், உள்ள காவிரிப்பூம்பட்டினம் காயல் பட்டினம் தொண்டித்துறை முகப்பட்டினம் என்ற

இடங்களில் பரவலாக மள்ளரின மக்கள் வாழ்வதையும் அவர்கள் சோனகப் பள்ளராகவும், மதம், இனம், நிறம் மாற்றம் பெற்றதையும் நினைவில் பதிக்க வேண்டும்.

நாட்டுக்கவுண்டர் ஊராளிக் கவுண்டர் தம்முள் 64 (கரையும்) 74 குடியும் உண்டு. அவற்றுள் பள்ளிக்கரை, பணிக்கன்கரை, புலியாண்டான்கரை, பூச்சிக்கரை, குருணிக்கரை, வாண்ராங்கரை, செட்டிகரை, பச்சைகரை, செயிங்குடியான்கரை, குண்டகநாடன் கரை, வடசேரிவில்லூரான்கரை, ரங்கப்பள்ளியான் கரை என கரைப் பட்டியல் நீளும். இதில் பணிக்கன் பற்றிய கரையும் பள்ளிக்கரையும், பயிர்த் தொழில் செய்யும் கவுண்டப்பட்டம் பெற்ற, மள்ளக்கவுண்டன். ஏழு அகமண நாடும் - ஏழுகரை அல்லது காணியாட்சி என்ற புறமணப்பிரிவுகள் இருந்ததாக அறிகிறோம். இது ஆற்றங்கரையாட்சி, கரையாளர் பட்டமே சாட்சி விரிப்பின் பெருகும். 'சாதியற்ற தமிழர் ஓர் ஒப்பீட்டாய்வு' என்ற என் நூலால் தெளிவாகும்.

## 196. பண்டார மள்ளர்

பண்டார மள்ளர் என்றால் சமயப்பற்றும், இறைப்பற்றும் மிக்கவர். பண்டாரம் சாஸ்திரம் கற்றவர். திருமடாதிபதி சன்னிதானம் என்ற சைவ நீதியையும், நெறியையும் பரப்புபவர்கள் எனக் கூறலாம். பள்ளு நூல்களில் மூத்தபள்ளியும் இளையபள்ளியும் பேசும் கொச்சையாக, பச்சையாகக் கூறும். இறை நிலையையும் எண்ணிப் பார்க்க வேண்டும். பண்டாரி என்றால் பொக்கிசதாரர், வேளாண் தொழில் செய்வோரிலோர் வகுப்பார். நாவாய் சுயம்பாகி எனத்தற்காலத் தமிழகராதி கூறும். பட்சேரி என்பது பள்ளர்கள் சேர்ந்து வாழும் இடம் எனப் பொருள் கொள்ளலாம். மருத நிலத்தில் பல ஊர்களில் - புதுக்கோட்டை, வத்தலங்குண்டு, திருவில்லிபுத்தூர், கட்டைக்காமன் பட்டி எனப் பல்வேறு ஊர்களில் உள்ள கோயில்களில் பூசை செய்வதும், அருள்வாக்குச் சொல்வதும் சாமியாடிகளாகவும், குறி சொல்வதுமாக உள்ளனர். இதே போல் வள்ளுவப்பண்டாரம், வன்னியப்பண்டாரம், கோயில்பண்டாரம் முடவாண்டிப்பண்டாரம் என்போரிருக்கிறார்கள். அவருள் பண்டார மள்ளர் என்பாருமொருவர். இவர்கள் பழனி அடிவாரத்தில் வாழ்கிறார்கள். குன்னூர் ஸ்ரீ சற்குரு இராசயோக ஆஸ்ரமத்தின் மடாதிபதி சற்குரு இராமசாமி அடிகளாரும் பூர்வாசிரமத்தில் பண்டார மள்ளராவார்.

## 197. பந்தமுட்டி மள்ளர்

திருமணம் செய்யப்படும் இடத்தில் மணமேடை அலங்கரிப்பர். இன்று உள்ள மணமேடை (மணத்திண்ணை) வசதிக்குகந்த முறையில் கண்ணைக் கவரும் வண்ணமுடையதாக இருக்கும். பண்டு இந்நிலையில்லை. என்ன வசதி வாய்ப்பு இருந்தாலும் இன்னார். இந்த அளவு தான் செய்ய வேண்டும் இந்த அளவிற்கு மேல் செய்தால் பல்வேறு விசாரணையும், கட்டுமானமும் ஒறுத்தலும் நிகழும். தேவேந்திர குல வேளாளர்கள், மருதநிலத்தில் பயிரிடுவது முதல் ஆட்சியை அலங்கரிப்பது வரை, காரண காரியத்தை விதிமுறை பிசகாமல் செய்யும் குடும்பிகளை, ஊராளிகளை, நாட்டாண்மைகளைக் கொண்டவர். அதனால் பந்தல் களத்தில் அல்லி, அரசு, ஆல், பாச்சான் என கம்பு நட்டு, மஞ்சள் துணியில் நவதானியம் கட்டி, பூசை புனஸ்காரங்கள் செய்து மணமேடை அமைப்பார்கள். மணமேடையை ஒட்டி, சாலுங்கரகப் பானை 3,5,7,9 என ஒன்றின் மேல் ஒன்றாக மூன்று வரிசையில் பல்வகையான வண்ணக் கலவையில் கோலம் செய்து வைப்பர். முளைப்பாரி இருக்கும். அவரவர் செல்வம் செல்வாக்கு அதிகாரத்திற்கு ஏற்பப் பந்தலும் நீண்டு கொண்டேபோகும். அரசப்பள்ளர் என்ற பிரிவினர் மிக உயரமாக - அழகாக - விதானை கட்டி வைப்பர். அது பந்தலை முட்டும் அளவிற்கு சாலும் கரகமும் நீள்வதால் பந்தல்முட்டி மள்ளர் எனப் பெயரிட்டுக் அழைக்கப் பெறுகிறார்கள். இன்னோர், உடையார் என்றும் மூப்பனார் என்றும் சில பகுதிகளில் அழைக்கப்படுவர் தேவேந்திர குல வேளாளர் தம் உட்பிரிவுக் குடியே பந்தமுட்டி மள்ளர்.

## 198. பந்தலடி மள்ளர்

தமிழீழநாட்டில் - தென் தமிழ்நாட்டில் பள்ளர் என்பார் பந்தல் போடுவதும், விதானை கட்டுவதும், ஒப்பனை செய்வதுமான காரியங்களைச் செய்வதால் அச்செய்தொழிலைக் குறிப்பிட்டு - சாதிப் பெயரை பின்னொட்டாகச் சூட்டிக் கொள்கிறார்கள். இவர்களே ஊர்மன்றம் நாடகக் கொட்டகை போடும் தொழில் செய்பவராகவும் இருக்கலாம். இயல், இசை, கூத்து நடக்கும் போது மன்றமும் பந்தலும் தேவை. பந்தலடிப்பவர் பந்தலடி மள்ளராகலாம்.

## 199. பரங்கி மள்ளர்

பொதுவாக பரங்கியர் என்றால் வேற்று நாட்டார்,

மேலை தேயத்தார் என்று கருதுவர். வெள்ளைப் பரங்கி எனப் பாரதியார் சுதேசி விதேசி எனப் பிரித்து - சுதேசி என்றால் உள் நாட்டவனாகவும் விதேசி என்றால் வெளிநாட்டவனாகவும் அடையாளப்படுத்துகிறார். அவ்வாறு குறிப்பிடப்படும் பொழுது பல நிறமும், பல வண்ணமும் உடைய மேலை நாட்டார் வணிகப் பொருள்களை கொண்டு வந்து விற்கும் மக்களாவார்கள். அவர்களின் நிறம் பற்றிக் குறிப்பிடுகையில் வெள்ளைப் பரங்கியர் என நினைவு கூர அச் சொல்லைப் பயன்படுத்தினார். அந்தப் பரங்கியரோடு தொடர்பு கொண்டதாலோ, இரண்டறக் கலந்ததாலோ, பரங்கி மள்ளர் என அழைக்கப் பெற்றிருக்கலாம்.

## 200. பருத்திக் கொட்டை நாட்டு மள்ளர்

பள்ளர் என்று பிற்காலத்தே அழைக்கப்படும் மள்ளர்கள் உழவுத் தொழிலை உயிரெனப் போற்றி வந்தவர்கள். அதனால் களமரென்றும், கடையரென்றும், உழவர் என்றும் பெயர் சூட்டப்பட்டவர்கள். ஏர்க்களத்தும் போர்க்களத்தும் ஏற்றம் பெற்றதோடு அல்லாமல் - மனிதன் மனிதனாக வாழ - மானத்தைக் காக்க - உடைகளைத் தயாரித்தவரும் ஆவார். அது பற்றியே சாலியப் பள்ளர், கோலியப்பள்ளர், வாதிரியார் என்று அழைக்கப்படுபவர் ஆயினர்.

கொட்டை என்றால் ஃவான்சுலோ அகராதியில் பஞ்சின் திரட்சியான உருண்டை, பருத்திச்சுருள் என்று பொருள் கொண்டுள்ளது. பருத்திக் கொட்டை, நூல் கண்டுக்கு உதவும் ஒரு பகுதியாகவும் - கொட்டை என்ற வித்து உண்ணுவதற்குப் பயன்படுத்தும் உணவு - மாவுக்கும் மக்களுக்கும் உரம் தரும் உணவாகவும் மக்கள் உடுத்தும் உடையாகவும், எண்ணெய் கொடுக்கும் வித்தாகவும் ஆகும். அப்பருத்தியினோடு தொடர்புடைமைப் பற்றி பருத்திக் கொட்டை மள்ளர் என்ற பெயராகியிருக்களாம். கரிசல் காட்டுப் பகுதிகளில் வாழும் இன்னோர் இடமாகும். கோயில்பட்டி கயத்தாறு ஒட்டப்பிடாரம், தேனி, தேவாரம் போன்ற நாட்டில் வாழ்பவராவார்கள்.

## 201. பழன மள்ளர்

பழனம் என்றால் சேறும் சகுதியும் நிறைந்த வயல். அப்பகுதியில் வேளாண் தொழில் என்ற விவசாயத்தைச் செய்தவர் - பழனப்பள்ளர் என்று அழைக்கப் பெற்றிருக்கக்கூடும். வயகாட்டில் பழனத்தில் சாலை

அமைத்துக் குடியிருப்போர் பழன மள்ளராகலாம்.

## 202. பழி தவிர்க்கும் மள்ளர்

'புகழ் எனில் உயிரும் கொடுக்குவர் - பழி எனில் உலகொடு பெறினும் வேண்டலர்' - என்ற புறநானூற்றின் புகழ் வரியை வாழ்வில் கடைப்பிடிக்காதவர் யார்? பழிதவிர்க்கும் மள்ளர் - எந்தவொரு செயலிலும் முன் கையெடுத்துச் செய்தாலும், அதில் பழி பாவத்திற்கஞ்சி - ஒதுங்கி வாழும் இயல்பினருக்கு பழி தவிர்க்கும் மள்ளர் எனப்பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

## 203. பழி தழுவிக் கொள்ளும் மள்ளர்

இச்சொல்லின் பொருளை விரிவாக அறிந்து கொள்ள வேண்டும். பழையனூர் வேளாளர், நாலூர்க்கோசர், வரலாற்றுக் கதையைப் போல், பழையனூர் நீலி என்ற பாத்திரப் படைப்பால் பள்ளர்கள் என்ற மள்ளர்கள் ஏற்றுக் கொண்ட வரலாறு ஒன்றிருக்க வேண்டும். அல்லது பழையனூர் வரலாறே இன்னாரைச் சார்ந்ததாக இருக்க வேண்டும். அறிந்தார் அறிவிக்க வேண்டும். ஏர் எழுபது திருக்கை வழக்கம் என்ற நூலுக்கு உரை எழுதிய யழ்ப்பாணம் சி. காராளசிங்கத்தைத் தான் கேட்கவேண்டும்.

## 204. பழிவிக்கும் மள்ளர்

பொருட்பெயரோ - குடிப்பெயரோ சரியாகத் தெரியவில்லை. பழி தவிர்க்கும் பள்ளர் என்ற சொல் தான் பழிவிக்கும் மள்ளர் என மக்கள் நாவில் பயின்ற சொல்லாகவிருக்கலாம்.

## 205. பனுவல் கூறும் மள்ளர்

பொருள் விளங்கவில்லை. பஞ்சினூல், மொழி, ஆகமம், நூல் என திவான்பகதூர் பவானந்தம் பிள்ளை கூறுவார்கள். பா, பண், பாணர், பாவாணர், பண்பாடி, கூத்தர், கூத்தாடி என்ற சொற்கள், கல்வியோடு தொடர்புடைய சொல் எனப் பொருள் கொள்ளலாம். இயல் இசை நாடகம் என்ற முத்தமிழும், முத்தமிழுக்கு உறுதுணையாகக் குயிலுவம் என்ற இசைக் கருவிகளை இயக்கும் இன்னியமும், கற்றவராவார். இதனால் தான் திவாகர நிகண்டு வேளாளர்களுக்கு உரிமை பாராட்டும் ஆறு தொழில்கள் உழவு, பசுக்காவல், வாணிபம், குயிலுவம், (இசைக் கருவிகளை இயக்குதல்) காருகவினை,

(நெய்தற்தொழில்) என்று கூறுகிறார். எனவே பாட்டும் கூத்தும் பள்ளர் தம் சொத்து என்பதின் கூற்றாகத்தான் "பள்ளுப்பறை போல் இழுத்திழுத்து பேசுகிறார்கள் என்று கூறுகிறார்கள். இத்தகைய மக்களில் ஒரு சாரர் பனுவல் கூறும் பள்ளர் என்று அழைக்கப் பெற்றிருக்கலாம். பஞ்சின் நூல் நூத்தவர், யாத்தவர், நெய்தவர், விற்றவர், ஆகமம் கற்றவர், கற்பிப்பவராகலாம்.

## 206. பன்னாக மள்ளர்

பொருள் சரிவரப் புரியவில்லை. பன்னாகன் என்றால் சிவனைக் குறிக்கும். பல யானை, பல குன்று மலை, பல பாம்பு எனப் பல்வேறு பொருள் தரும் சொல்லாகும். அப்பொருட்குரிய செயல்செய்வதனாலே, பன்னாக மள்ளர் என அழைக்கலாம்.

## 207. பனங்குடி மள்ளர்

'பனங்குடி' என்ற இடத்தின் பெயராலோ, முன்னொருகால் தேவலோகத்தினின்று பனை, கதலி, நெல் என வித்தினைக் கொணர்ந்து பயிரிட்ட காரணத்தாலோ ஏதேனும் ஒரு காரணத்தால் அப்பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும்.

## 208. பாக மள்ளர் (பாகர்)

"பாகர்" என்றால் யானை குதிரை முதலியவற்றை பயிற்றுவோர் நடத்துவோர் என்று கூறலாம். பங்கு, பக்குவம் என்ற பொருளும் கொள்ளலாம். யானை என்பது இந்திரனுக்கு வாகனமாகவும், மன்னனுக்கு ஒருவகைப் படையாகவும் பல்வேறு பொருளை இடத்திற்கு ஏற்றாற்போல் தரவல்லது. மருதநிலத் தெய்வம் இந்திரன். இந்திரன் குடிவழியினர் யானையைத் தெய்வமாகப் போற்றி மதிப்பர். அத்தகு யானை குதிரைகளைக் கட்டிவைப்பது, வளர்ப்பது, பிடிப்பது என்பன போன்ற யானையின் தொடர்பால் யானைப் பள்ளர் என்பதற்கு மாற்றாக "பாகப்பள்ளர்" என்று அவதானிக்கலாம். யானைப்பாகன், யானையிடம் வேலை வாங்குவோன் யானைப்பாகன் என்பதை நினைவுகூர்தல் வேண்டும். இவரே பணிக்கன் என்ற மள்ளரின மாற்றுப் பெயர்.

## 209. பாசிகட்டி மள்ளர்

பொருள் சரிவரப்புரியவில்லை என்றாலும் கடற்பாசி, நீர்ப்பாசி என்பது வேளாண் தொழிலோடு தொடர்புடையது.

வரப்புயர நீர்கட்டி, நெல் சாகுபடி செய்வதோடு, பாசிதட்டி (பூசணம்) பள்ளர்தம் நீராணையர் என்ற சொல்லுக்குப் பொருத்துமானவரராவார். நீருயர நெல்லுயரும். நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோன் உயரும் அல்லவா? நெற்பாசி என்பதன் பொருள் நீர்ப்பெருக்கம் என்பதாம்.

## 210. பாண்டிய மள்ளர்

மள்ளரெனும் தேவேந்திர குல வேளாளர் தம் குலப்பெயர்கள் பலவாம். உரிமைகோரி வழக்குமன்றம் சென்று பெற்ற குலப்பெயர் பாண்டியர் என்பதாம். "வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி பண்பின் தலைபிரிதல் இன்று" என்ற 955 ஆம் குறட்பாவிற்கு உரைகண்ட பரிமேலழகர், "பழங்குடி" என்ற சொல்லுக்கு சேர, சோழ, பாண்டியர் என்றாற்போல் படைப்புக்காலந் தொட்டு, மேம்பட்டு வரும் குடி என்று பொருள் கூறுவார்.

பழங்குடி, தொல்குடி, மூத்தகுடி, மூதின்குடி, என்று அரசமைப்பதற்கு ஆதியாக இருந்த குடி, தமிழாதியர்களாகிய மள்ளர் என்னும் தேவேந்திர குலத்தார்தான் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர் பரம்பரையினராவார். பொதிய மலைச் சாரலை ஒட்டிய செங்கோட்டை பகுதிகளில் வாழும் பள்ளர்கள் பாண்டியர், பாண்டியப் பள்ளர் என்று அழைக்கப்படுவாராயினர். கொங்கு நாட்டில் பாண்டியப்பள்ளர் என்பார். பல்வேறு ஊர்களில் வாழ்ந்து வருகிறார்கள்.

## 211. பாணங்குடி மள்ளர்

தற்காலத்தில் பள்ளர் என்று அழைக்கப்பெறும் மள்ளர்கள் அனைவரும் வீரர்களாகவும், கூத்தராகவும், மருத்துவராகவும், பல்வேறு கலைகளை, விரும்பி, தத்தம் விருப்பத்திற்கு ஏற்ப செயல்படுவர். பாணர்களோடு மிகுதியாகத் தொடர்பு வைத்துக் கொண்டு வாழ்ந்தார்கள். பாணர்கள் பாடல் வல்ல பாவாணர்களாக இருந்ததோடு, தையல் கலை கற்றவராகவும் விளங்கினார்கள். தேவேந்திர குல வேளாளர்களில் குடிவழியில் வாதிரியார், என்றும் கோலியப்பள்ளர் என்றும், துணி நெய்கின்ற நெசவுத் தொழிலில் மிகமிக நுட்பமான வகையில் இருந்த நிபுணர்களாக இருப்பது மிகமிக நினைந்தின்புறும் தன்மையானதாகும். எனவே அத்தகையோர் பாணங்குடி பள்ளர் என்று அழைக்கப் பெற்றிருக்கலாம். பாணன் என்போர் குப்பாயம் தைக்கும் (டெய்லர்) துன்னக்காரராம். அக்குடியில் வந்ததால் பாணங்குடி மள்ளராவர்.

## 212. பாப்பு மன்னர்

பாப்பு என்றால் பாம்பு என்று ஒரு பொருளுண்டு. பாம்பின் நஞ்சினை எடுத்து, விசவைத்தியமும், விசமுறிவைத்தியமும் செய்வதும், படைப்பிரிவுக்கு உதவியாகவும் பாப்புப் பள்ளர் உறுதுணையாக விளங்குவார்கள். அதல்லாமல் தேவேந்திர குடிமக்களுக்கும் குலத்திற்கும், குடிக்கும் ஒரு தலைவர். குரு, வழிகாட்டி, நெறிப்படுத்துவோர் உண்டு. இல்லத்தில் கோவிலில் நடக்கும் நலம் பொலம் என்ற சம்பிரதாய சடங்குகளை நடத்துபவராகவும் விளங்குவார். சமுதாயப் பிரச்சனைகளுக்கு யோசனை சொல்பவராகவும் விளங்குவார்கள். ஏன் அனைத்துக் காரியத்திற்கும் முகாண்மைக்காரராக இருப்பார்கள். "பார்ப்பர்" என்ற சொல்லை பார்ப்பு என்று குறிப்பிடுவார்கள். பார்ப்பாரப் பள்ளரே பாப்புப் பள்ளர் என்ற அழைக்கப்பட்டவராவார். பள்ளர்கள் பா, பாட்டு, கூத்து, நாடகம் என பல்வேறு நுண்கலையில் ஈடுபாடுடையவராதலால், "பார்ப்பான்" என்றால் "Script" பார்த்துச் சொல்பவர் என்று பொருள் கொண்டும் பார்க்க வேண்டும்.

"ஸ்கிரிப்டுகளை" கையில் வைத்துக் கொண்டு படிப்பவர், அல்லது நடிப்பவர் தவறுதலாகச் சொல்லும் பொழுது, திருத்தி எடுத்துச் சொல்பவருக்கு "பாப்பு மன்னர்" என்று பெயரிட்டும் அழைக்கப்பட்டிருக்கலாம். தாராபுரம், தாளக்கரை என்ற வீரம் விளையும் மண்ணில் பாம்பாட்டி மன்னர், பாப்பு மன்னர் என்ற குடியினர் இன்றும் உண்டு.

## 213. பாம்பாட்டி மன்னர்

மன்னர் எனும் தேவேந்திர குலத்தார்கள் பல குலங்களையும் பல குடி வழிமக்களையும் தன்னகத்தே கொண்டதொரு இனமாகும். அவ்வாறு பல பெயர் கொண்டதில் 'பணிக்கன், என்கின்ற பட்டமும் உண்டு. பணிக்கன் என்ற சொல்லுக்கு கூத்தாட்டுவோன், சிலம்பு பயிற்றுவோன், யானைப்பாகன், ஆயுதம் பயிற்றுவோன், உபாத்தியாயன், கொற்றர் தலைவன், விசவைத்தியன் பள்ளர் சாதித் தலைவன் எனப் பல பொருள் உண்டு.

பகைவர்களோடு போரிடுங்கால், விசம் தோய்ந்த வில், வேல், அம்பு வாள், ஈட்டி என்ற ஆயுதங்களினால் ஏற்படும் காயங்களைக், கண்டு பிடித்து விசத்தை நீக்க வேண்டும். முருவாடு செய்ய வேண்டும். தாமும் தம் பகை நாட்டார் மேல் விசந்தோய்ந்த ஆயுதங்களைப் பயன்படுத்த

படைக்களன்களை உருவாக்கித் தர வேண்டும். எனவே நச்சுத்தன்மை கொண்ட நாகங்களை, வளர்ப்பதும் அந்நாகத்தால் கிடைக்கும் பயன்பாட்டைப் பெறவும், பாம்புகளைப் பிடித்து, வளர்த்து, அதனைப் பயன்படுத்தும், பாம்புகளை வளர்ப்பதால் பம்பாட்டி மள்ளர் என்ற பெயர் பெற்றிருக்கலாம். பாம்பாட்டிச் சித்தர் என்பார். பதினெண் சித்தர்கள் இருந்துள்ளதை பட்டியல் கொண்டு தெளியலாம். மருதமலையில் பாம்பாட்டிச் சித்தர் வாழ்ந்தார் என்பதையும் நினைவு கூர்க!

## 214. பாவை மள்ளர்

பாவை மள்ளர் என்றால் ஒரு பெண், சித்திரப்பாவை, பதுமை எனப் பல விதமான பொருள் கொள்வர். கூத்தில் பலவகை உண்டு. சிலப்பதிகாரக் காலக் கூத்து வகைகளை அறிய முடிகிறது. 1.குரவைக்கூத்து, 2.வெறியாடல், 3.துணங்கைக்கூத்து, 4.வள்ளிக்கூத்து, 5.கயிற்றாடல், 6.வேட்டுவவரி, 7.சாக்கைக்கூத்து, 8.கழாய்க்கூத்து, 9.தோற்பாவைக்கூத்து, 10.விதூடகக்கூத்து, 11.வென்றிக்கூத்து, 12.வசைக்கூத்து, 13.விநோதக்கூத்து 14.கலைக்கூத்து என்பனவாம். பாவைக்கூத்து கலைநயமிக்கது. ஒரு திரைக்குப்பின் நின்று, பாவை மட்டும் தெரியும் வண்ணம் மறைந்து நின்று சூத்திதாரி, பண்ணுக்கேற்ப, அப்பாவையை தம் கையில் உள்ள சூத்திரக் கயிற்றால் செயல்படுத்துபவர் பாவை மள்ளராவார்.

## 215. பாவைகட்டி மள்ளர்

ஒரு கழியின் மேல் சித்திரப்பாவையைக் கட்டி, அக்கழியின் துவாரத்தில் கருப்பு வண்ணத்தில் சூத்திரக் கயிற்றினை, காலின் பெருவிரல்களில் மாறி மாறிக் கட்டியும், கைகளில் சூத்திரக் கயிற்றினைக் கட்டி, பாரதம், இராமாயணம் போன்ற காவியங்களையே நடித்துக் காட்டும் வல்லமைமிக்க தொழில் தெரிந்த சதுர்த்தர் - பாவைகட்டி மள்ளராவார்.

## 216. புலிகுத்தி மள்ளர்

காடு கெடுத்து நாடாக்கி, குளந்தொட்டு வளப்படுத்திய காலம், குறிஞ்சி நில வாழ்க்கையினின்று முல்லை நில வாழ்க்கைக்கு அடியெடுத்து வைத்தனர். பன்னீராயிரம் கிணறு வெட்டி வேளாண் தொழிலை மேம்படுத்தியது மள்ளரினம். பல இழப்புகளைச் சந்தித்து, வல்லயம் என்றும், ஈட்டி என்றும் கையில் பற்றாமல், காடு கரை செல்ல

முடியாத நிலையில் புலிப் போத்துக்கள் சிறிப்பாய்ந்தன. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்ற பழமொழிப்படி - குழி தோண்டிக் கொண்டிருந்த கடப்பாறை என்ற ஆயுதத்தால் - ஒரே குத்தில் உட்புகுந்து, மண்ணோடு மண்ணாகப் பூமியில் புதைந்து நின்றது. புலிப்போத்து செத்து மடிந்தது. அதன் காரணமாகப் புலிகுத்தி மள்ளர் என அவர் குடிக்குப் பெயர் நிலைத்து நின்றது.

## 217. பூச்சிதின்னி மள்ளர்

பூச்சி என்பது என்ன வகையான பூச்சி என்று பொருள் தெரியவில்லை. பூச்சி என்றால் சிறு செந்து என்று விளக்கம் கண்டாலும் விளங்கவில்லை. இந்த நிலையில் கோனகப் பூச்சி தின்னி மள்ளர் என்ற பிரிவும் காணக்கிடைப்பதால், எளிதில் விட்டுவிட முடியாது.

பூச்சி தின்பதின் பயனும் பலனும் அறிந்தவர் கூற வேண்டும். கோனகப்பூச்சி, கோட்டிக்காரர், குணங்கெட்டோர், மனத்தடுமாற்றம் உண்டானால் நலம் பெறக்கூடிய ஐந்து, ஒன்றிருந்திருக்கு வேண்டும். மனக் கோட்டத்தை மாற்ற வல்ல மாமருந்தாகப் பயன்பட்டிருக்க வேண்டும். அத்தகைய பூச்சியை அரிதின் முயன்று பிடித்து உண்டவரும் உண்பித்தவருமே "பூச்சி தின்னி மள்ளர் என்று கூறலாம்.

## 218. பூசற மள்ளர்

ஏரும் போரும் எமதிருகண்கள்; போர்க்குறிக் காயமே புகழின் காயம் என்ற மல்லாண்ட திண் தோள் மல்லர்கள் வாழ்ந்தார்கள். அத்தகையவர்களை பூசற மள்ளர் என்பார். எப்போதும் போருக்கும் பூசலுக்கும் சண்டைக்கும் சச்சரவுக்கும் அஞ்சாது நிற்பதால், அந்த வீரமே வடிவானவர்களை பூசற மள்ளர் என்றனர். (பூசற - பூசல்) போர். "மறவரில் சிறந்தோர் மல்லர், மல்லரில் சிறந்தோர் உழவர்" என்ற சொல்லுக்குச் சொந்தக்காரர் பூசற பள்ளர். சமதானத்திற்காகச் சண்டை பிடிப்பவர்.

## 219. பூரண மள்ளர்

எந்த ஒரு செயலும் தான் எடுத்துக் கொண்டால், சொல் வேறு செயல் வேறு என்றில்லாமல், முழு மனதோடு ஒன்றி, இரண்டறக் கலந்து செயல்பட வேண்டும். "பூரண சூத்திரம்" என்ற அகத்தியர் நூல் கற்றோர்" நெளிப்புடைய மனதகற்றி அமிர்தம் நேமமுடன் சிவயோகம் நிலைக்கும்

காணே கொண்டால், என்று அகத்தியர் கம்பு சூத்திரம் நெறி வழி நின்றோர் பூரண மள்ளராவார்.

## 220. பூலாங்கிணற்று மள்ளர்

பூலாங்கிணறு என்ற இடத்தில் வாழ்ந்தவர்களை இடப்பெயரால் பூலாங்கிணற்றுப் பள்ளர் என்பாராயினர். உடுமலைப் பேட்டையை ஒட்டிய ஊரே பூலாங்கிணறு.

## 221. பெருந்தாலிகட்டி மள்ளர்

தாலி என்ற சொல் மங்கலச்சூத்திரம் என்ற புனிதமான ஒரு சின்னமாகும். தமிழர்கள் என்போர் புலிப்பல் தாலி அணிவார்கள். பொதுவாகத் தமிழர்கள் அனைவரும் புலிப்பல்தாலிதான் அணிவது வழக்கம். அதில் பெருந்தாலி - சிறுதாலி என்ற வேறுபாடு காணக் கிடக்கிறது. தாலியின் வகை 168 என கோவை அசோகா திருமண மண்டபத்தில் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டுள்ளது. சோழரும் பாண்டியரும் புலிப்பல் தாலி, சேரர் இலைத்தாலி அணிகிறார்கள் என்பதைக் காண்கின்றோம். நானில ஐந்திணை மக்கள் யாவரும் முல்லை நில இடையர்களைத் தவிர பெருந்தாலி - சிறு தாலி என்ற வேறுபாட்டோடு, புலிப்பல் தாலி அணிகின்றனர். முல்லை நிலக்கோன், ஆயர், இடையர், என்போர் பொட்டுத்தாலி, குமிழ்தாலி, பாசித்தாலி அணிவதாக அறிகிறோம். ஏனிந்தவேறுபாடு என்பதை விரிப்பின் பெருகும்.

கொங்கு நாட்டில் வாழும் கொங்கு வேளாளக் கவுண்டர், கொங்கச் செட்டி, கொங்க ஆசாரி, கொங்கப்பறையர், கொங்கப்பள்ளர் என்ற கொங்கு நாட்டு வேட்டுவர் என்போரெல்லாம் பெருந்தாலி கட்டுவது ஒரு அடையாளச் சின்னமாக வழக்கில் உள்ளது. தேவேந்திர குல வேளாளர்கள் அனைவரும் கொங்கரைத் தவிர சிறுதாலிதான் கட்டுவார்கள். பெண் எடுக்கும் போதே பெருந்தாலியா? சிறுதாலியா என்று கேட்பது வழக்கம். இந்த மாற்றம், சம்பந்தம், தற்காலத்தில் எவ்வித வேறுபாடும் பாராது திருமணம் நடைபெறக் காண்கின்றனர்.

## 222. பொதினி மள்ளர்

பொதிகை என்பது அகத்தியர் வாழ்ந்த மலை, பொதினி மலை என்பது பழனி மலை என்று வழங்கியதாக சிலர் கூறக் கேட்டுள்ளேன். காவலுவர், மாவலுவர், பூவலுவர், வேடர், வேட்டுவர் என்ற பஞ்ச குல காவியத்தால் அறியப் படும் மக்களே கொங்கர் ஆவார். பூவலுவக் கவுண்டர்

(பூலுவக் கவுண்டர்) திருவாவினன் குடிக்குச் சொந்தக்காரராம். அந்த வேட்டுவர் குலம் 240 என இக்கட்டுரை ஆசிரியரால் 'கதிரவன்' இதழ் மூலம் வெளியிடப்பட்டுள்ளது. புரவிபாளையம் சமீனைச் சார்ந்ததென்று கூறப்படுகிறது. இவர்தம் 240 குடியில் பள்ள வேட்டுவர் என்பார் ஒரு குடியினர் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆனால் இதை எல்லாம் பொய்யாக்கும் வகையில் பழனி பாலசுப்பிரமணியர் கோயில் பரிபாலனம் கூறும் பழனிச் செப்பேடு கி.பி. 1528இல் நாயக்க மன்னர்களால் கொடுக்கப்பட்டது. அச்செப்பேட்டின்படி பழனி பால சுப்பிரமணியர் கோயில் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களுக்குச் சொந்தமானது. எனவே, 'பள்ளனீ, என்ற பழனி பொதினி மள்ளர்தம் குடி வழியினராம். 10.10.1998 "மள்ளர் மலர்" விரிவாகக் கூறும்.

## 223. பொன்னி மள்ளர்

காவேரி ஆற்றினுக்குப் பொன்னியாறு என்று பெயர். சோழ நாடு சோறுடைத்து, வற்றாத ஜீவநதி ஓடும் பொன்னியாற்றை, அதன் கங்குகரையை ஒட்டி வாழும் ஆற்றுக் காலாட்டியரைப் பொன்னி மள்ளர் என்று அழைப்பர். பொன்னி அரிசி, பொன்னி நெல் என்று போற்றி மதிக்கப்படும் உயர் நெல்லை உற்பத்தி செய்வதாலும் அப்பகுதியில் வாழ்வதாலும் அக்குடியினரைப் பொன்னி மள்ளர் என்று கூறியிருக்கக்கூடும். ஆற்றங் கரைநாகரிகத்தின் அழகும் நீளமும் விரிப்பின் பெருகும். பொன்னின் நிறமும் நெல்லின் நிறமும் ஒன்று போல்வனவேயாகும். எனவே பொன்னி மள்ளர் என்று கூறியிருக்கக் கூடும்.

## 224. மங்கல நாட்டு மள்ளர்

தென்கரை நாடு, வடகரைநாடு, மாநாடு, மங்கலநாடு என நாட்டுப் பிரிவுகள் பல்கிப் பெருகியுள்ளன. அம்முறையில் மங்கல நாட்டில் வாழும் பள்ளரை மங்கலப் பள்ளர் என்று அழைக்கலாயினர். இன்று ஒரு நாட்டிற்கு ஒரு பெயரிருக்கும் நாளை வேற்று நாட்டரசன் அந்நாட்டைப் பிடித்துக் கொண்டால் வேறு பெயரும் பீலியும் சூட்டிவிடுவர். எனவே மங்கலநாடு எங்குள்ளது எனத் தெரியவில்லை. தென் பாண்டிச் சீமையைச் சார்ந்ததாக இருக்கலாம். பொதுவாக, "சில கிராமங்கள் அல்லது குடும்புகள் ஒன்றிணைந்ததற்கு நாடு என்று பெயர்" எனக் கலைஞர் மு.கருணாநிதி விளக்கம் கூறுவார்கள்.

## 225. மங்கா மள்ளர்

மங்கா மள்ளர் என்பது பேரும்புகழும், செல்வமும் செல்வாக்கும், மங்காது நிறைந்து விளங்குபவர் என்ற பொருள் கொள்ளலாம். அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என ஐந்து சால்புகளைக் கொண்டவர் என்றும் கூறலாம். "சேரிப்புள்ளிப்பள்ளர் என்று முக்கூடற்பள்ளில் கூறுவதைப் போல் "புள்ளி" என்றால் "பெரிய ஆள்" குறிப்பிடத்தக்க முக்கந்தர் என்ற பெருமைக்குச் சொந்தக்காரர் என்ற கருத்திலுள்ளவர் மங்கா மள்ளர் என்று கூறப்பட்டிருக்கலாம்.

## 226. மடை மள்ளர்

மடை என்பதற்குச் சோறு, நீர்பாயும் வழி, மதகு, ஆபரணக்கடையின் பூட்டு, வாய்க்கால், துவாரம், தேவதைகளுக்குப் படைப்பது என அகர முதலி பொருள் விரிக்கும். நீர்க் குளத்தினின்று மதகு வழியாக வரும் பொழுது வாய்க்கால், கொப்பு (தலைவாய்கால்) என்று பெயர் கூறுவர். ஒருவருக்குத் தண்ணீர் பாயும் போது ஏற்றம் இறக்கம் பார்த்து, தண்ணீரை வாய்க்காலில் போக சிறுக்கி, பெருக்கி வைப்பதற்குப் பெயர் மடையாகும். நிலம் பொலம் கூற நீராணியம் மடை வைத்துக் கொடுப்பது என்பது பொருள். இது தண்ணீர் பற்றாக்குறையின் போது, குறுவைப் பயிர் காயும் போது, அரிதாய காலத்தில் மடை பார்ப்பவன், என்றும் நீர்கட்டி என்றும் நீராணையம், நீராணி, நீர்மணியம் என்றும் பல்வேறு படி நிலைகளில் (சேனல் தூப்பரெண்டு) பொறுப்பாளர்கள் இருப்பார்கள். இது சோழர்கால ஏரி வாரியம் அமைப்பினின்று வருமுறை. அம்மடையைப் பார்க்கும் வேளாண் தொழிலைச் செய்பவர்க்கு மடைப்பள்ளர் என்று குடி வழியாக அமைந்த பெயராகும். மடை அடைக்கப் பூவரசு கம்புகளை நிறுத்திக் கரும்புகளை குறுக்கே வைத்துக் கட்டுவர் என புறநானூறு பேசும் (35).

## 227. மண் மள்ளர்

மண் மள்ளர் என்பதற்கு மண்ணின் மைந்தர், நிலமக்கள் எனப் பொருள் காணலாம். எந்த நிலத்தில் வாழ்கிறாரோ அந்த நிலத்தின் பெயர் தொன்று தொட்டு ஆகி வந்த சொல். மண்ணில் பல கூறுபாடுகளுண்டு. மண்ணும் மக்களும் பல நிறத்தவர். பல தரத்தவராவார். அதேபோல் நிலத்திலுள்ள மண்ணைக் கொஞ்சம் அள்ளி

வாயில் போட்டுத் தின்று பார்த்து, இந்நிலத்தில் இன்னின்ன பயிர்கள் நன்றாக வரும். இன்னின்ன பயிர்கள் சரியாக வராது என்று மண்ணின் கூறுபாட்டை வைத்தே சரியாகச் சொல்பவர். பயிரிட, விற்க, வாங்க மண் மள்ளர் நிபுணராவார்கள்.

## 228. மந்தை மள்ளர்

மந்தை மள்ளர் என்றால் ஆட்டு மாட்டுக் கூட்டத்தின் தொகுதியை உடையவன் என்று பொருள் கொள்ளலாம். மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களுக்கு "பலகான்" என்ற குலப்பெயருமுண்டு. பலகான் என்பவர் பல ஆடு மாடுகளுக்கு அதிபதி என்று பொருள் விளக்கம் காண்பர். பண்ணை என்றாலே செல்வம், மாடு என்றாலே செல்வம் என்று பொருள் கொண்டு, பண்ணை வயல் செல்வமிகும் பள்ளரெல்லாம் பல்வளனும் பாங்குடனே பெற்ற மேலோராவார். மந்தை மந்தையாக ஆடு வளர்த்தல் பெரிய வேளாண் விஞ்ஞானியார் தொட முடியாத நிபுணத்துவம் பெற்றவராவார். மந்தை எருவின் தரம், உரம், தழைச்சத்து, மணிச்சத்து, சாம்பல்சத்து என மூன்றும் உரமாகப் போட்டு முப்போகம் காண்பீர் என்ற தற்கால விளம்பர மொழியை வெல்லும். மேற்கூறிய மூன்று உரச்சத்தினையும் மிஞ்சும் எருச்சத்தாம் மந்தை கிடத்துதல். மந்தைப் பள்ளர் செயல்பாடுகள் குறும்பாடுகள் வளர்ப்பது. குரும்பர் என்பது பள்ளர்களின் ஒரு பெயர் என்று சங்க இலக்கியத்தில் ஆயர் என்ற தலைப்பில் ஆய்வுப்பட்டம் பெற்ற முனைவர். அ.முத்துச்சாமியின் கூற்றையும் குருபரசரித்திரத்தின் பொருள்களையும் நினைவில் கொள்ள வேண்டும். ஆட்டு மந்தை கிடத்தினால் என்ன பலன் என்பதை "மாட்டுரம் ஓராண்டு, ஆட்டுரம் ஆறாண்டு" என்ற பழமொழியை மந்தை மள்ளர் பட்டறிவால் உணர்ந்தவராவார்.

## 229. மரமேறி மள்ளர்

ஈழம் இலங்கை என்ற பகுதியில் வாழும் பள்ளர்கள் தென்னைமரம், ஈச்சமரம், பனைமரம், பாக்குமரம் முதலியவற்றில் ஏறி அதன் பதநீர் எடுப்பதும் விற்பதும் சர்க்கரை, வெல்லம், கருப்பட்டி முதலானவற்றை காய்ச்சுவதுமான தொழிலைச் செய்பவர் மரமேறிப்பள்ளர் என்று அழைக்கப்படலாம். பனைகொணர்ந்தவர் பனைமரம் வைத்துப் பயிர் செய்தவர். பனைமரம் ஏறுபவர் பனங்கருப்பட்டி செய்யும் பணிக்கர் என மாற்றுப் பெயர் கொண்டவர் மரமேறி மள்ளர் ஆவார்.

## 230. மருதநில மள்ளர்

மருத நிலத்தில் கடையர் கடைசியர் உழவர், உழத்தியர் என்ற மக்களும், களமர், தொழுவர், விளைஞர், மள்ளர், கம்பளர், இளைஞர், ஆற்றுக்காலாட்டியர், பலகன், மூப்பன், குடும்பன், பணிக்கன், காலாடி, வாய்காரன், பண்ணாடி என்ற நிலமக்கள், குடிமக்கள், தலைமக்கள் அனைவரையும் உள்ளடக்கிய சொல் மருதநில மள்ளர் என்போரவார்.

## 231. மருதக்குடி மள்ளர்

மருத நிலத்தின் குடிமக்கள் தம்முள் பல்வேறு பெயர் கொண்டவர். தமிழகமும் அதனை ஒட்டிய பகுதிகளிலும், தனித்தனி குடியும், கூட்டமுமாக வாழ்பவர்களை மருத குடிப்பள்ளர் எனக் கூறலாம். மண்(ம்) பாடுபட்டு மருத குடியானவர் என்ற சொல்லடைவையும் நினைவுக்குக் கொணரலாம்.

## 232. மல்லுக்கட்டி மள்ளர்

மல்லர் என்றாலே மன வலிவும் உடல் வலிவும், செயல் வலிவும் மிக்க, உழைத்து உரமேறிய திண் தோள்களை உடையவர் என்று பொருள். படைபலம் இழக்காமல், உயிர்ச்சேதம் நிகழாமல் - காலவிரையம் ஆகாமல் பயிர்ச்சேதம் நேராமல் வெற்றியை நிர்ணயக்கும் வழி, வேற்று நாட்டு மல்லன் ஒருவனும் தன் நாட்டு மல்லன் ஒருவனும், பொது இடத்தில் பொருது - வென்றவர் நாடே வென்றதாக - தோற்றவர் நாடே தோற்றதாக நிர்ணயமாகும். இந்த முறையில் மல்லுக்கட்ட தனிப்பயிற்சி பெற்றவர்கள் ஏர்க்களமும், போர்க்களமும் இருகண்ணெனக் கொண்டவர்கள். பகைப்புலத்தே இருந்து வந்து, வாதுக்கோ, வம்புக்கோ, உடல் மோதலுக்கோ வந்தால் எதிர்த்து நின்று சமராடும் வீரனே மல்லுக்கட்டிப்பள்ளர் என்போராவார். ஒரு தொழிலை, செயலை மல்லுக்கட்டி, விடாப்பிடியாகச் செய்து முடிப்பவர் மல்லுக்கட்டிப்பள்ளராவார்.

## 233. மல்லக்குடிப் பள்ளர்

மல்லர்கள் என்றும் மள்ளர்கள் என்றும் அழைக்கப்படுகின்ற சிற்றூர், பேரூர்களில் வாழ்பவரை மல்லக்குடியினர் என்றும், அவர் தம் சாதியைப் பின்னொட்டாக்க கொண்டு மல்லக்குடிப் பள்ளர் என்றும் அழைக்கப்படுவாராயினர். "ஏழுபேரும் மல்லருங்க எளஞ் சுடுமல்லருங்கள!

"மூத்தமல்லன் முடிமன்னன், ராஜமல்லன் மலையுளுந்தா மலைதாங்கும் இலுப்பூர் மல்லன் எனமே வந்தாலும் எதிர்த்து நிற்கும் சிங்கமல்லன் கள்ளர்படை வந்தாலும் கலங்காத வீரமல்லன் அடுப்பூ தூளிமல்லன்" என சோழர் நாட்டுப்பாடல்கள் மள்ளக்குடி மக்கள் பெருமையைப் பேசும். சோழர்நாடு கரூரை ஒட்டியநாடு.

## 234. மறக்கணா மள்ளர்

பொருள் சரிவர விளங்கவில்லை. அறிந்தோர் விளக்கத்திற்குக் காத்துள்ளோம். மறக்க முடியாத, மறக்கவொணாத, என்ற சொற்கள் மாற்றுருவாயிருக்கலாம். அத்தகைய இனத்தைச் சார்ந்தவர் என்று தன் சாதியை இணைத்துப் பேசப்படுவது மறக்கணா மள்ளர் என்பதாகும்.

## 235. மாநாட்டு மள்ளர்

மாநாடு என்ற பகுதியில் வாழ்ந்த, வாழுகின்ற மள்ளரின் மக்களை மாநாட்டு மள்ளர் என அழைக்கப்படுகிறார்கள்.

## 236. மீசற மள்ளர்

மீசற என்றால் மேலான, விரைவான செயல்களைச் செய்து முடிக்கும் மள்ளர் மீசற மள்ளர் என்று பொருள் கூறுவர்.

## 237. மேல்மடை மள்ளர்

மடை என்பது வாய்க்கால், கொப்பு, கால்வாய், தோட்டுக்கால் என்று கூறப்படும். நீரை நீராணையர் அல்லது நீராணியர் மடை அமைத்துத் தந்த பின்னர் பயன்படுத்தலாம். மேல்மடை, கீழ்மடை என்ற வாய்க்கால்களில் நீர்வர கீழ்மடைக்காரன் கொஞ்சம் சிறுத்து வைத்துக் கொண்டு, மேல்மடைக்கு நீரைப்பாய்ச்சல் காட்டுக்கு விடுபவர் மேல்மடை மள்ளராவார்.

## 238. மேனாட்டு மள்ளர்

மேனாடு என்பது மேற்குப் பகுதியில் இருப்பது. மேன்மை கொண்டு விளங்குவது, எனவே உயர்வான அந்த இடத்தைச் சார்ந்தவரை மேனாட்டு மள்ளர் என அழைப்பர்.

## 239. மொட்டை மள்ளர்

மொட்டை மள்ளர் என்பதற்குப் பொருள்

விளங்கவில்லை. தலையை மழுங்கச் சிரைத்து நிற்பவரை மொட்டைப் பள்ளர் என்பார்கள். ஏது மற்றவரும் பற்றுக்கோடற்றவரை, முற்றுந் துறந்தவரை மொட்டை மள்ளர் என்பார்கள் போலும்.

## 240. மொறம்பொற்றி மள்ளர்

பொருள் சரிவரத் தெரியவில்லை. அறிந்தவர் அறிவிப்பின் ஏற்றுக் கொள்ளப்படும்.

## 241. மும்முடிப்பள்ளர்

மும்முடி என்பது சேர, சோழ, பாண்டியரின் மணிமுடிகள். இம்மூவேந்தருடன் உறவுகொண்ட மள்ளரே மும்முடி மள்ளராகலாம்.

## 242. யாப்பு மள்ளர்

யாப்பு என்றால் கட்டு என்று பொருள். எழுத்து, சொல், பொருள், யாப்பு அணி என்று ஐந்து வகையான இலக்கணம் கூறப்பட்டுள்ளது. அதில் யாப்பு என்பது செய்யுள் இலக்கணம் கூறப்படும் பகுதியாகும். செய்யுள் இயற்றுதல், பாட்டுக்கட்டுதல், என்பதற்கு எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என உறுப்புகள் உண்டு. அதனைக் கொண்டே செய்யுள் இயற்றுவர் என்பது ஒரு வகையினதாகும். இவை ஏதும் தெரியாமல் படிப்பறிவே இல்லாமல் இலக்கண இலக்கிய அறிவே தெரியாது, சொற்கேள்வி பற்றியே - பாட்டுக்கட்டும் புலமை. மூச்சு விடும் முன்னே முந்நூறும் நானூறும் ஆச்சென்று சொன்னால் ஐந்நூறும் அறுநூறும் பாட்டுக் கட்டுபவர்களும், இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும் 'அம்' என்றால் ஆயிரம் பாட்டுக்கட்டிவந்த பாடல் பாடவல்லவர் சொன்னால் உண்டு. இலக்கியம் கண்டதற்குப் பின்னரே இலக்கணம் தோன்றியிருக்கும். தமிழ்ப் புலமை இலக்கணச் சீர்மை ஓரளவு அறிந்து, பாட்டுக்கட்டிய பள்ளின மக்களே - யாப்பு மள்ளராக இருக்கலாம்.

## 243. வங்க மள்ளர்

வங்க மள்ளர் என்பவர் பேராறுகள் ஓடுகின்ற பகுதிகளில் ஆற்றினைக் கடக்க உதவும் மக்கள் தம் பெயராக இருக்கலாம். ஆற்றுப் பகுதிகளில் சுற்றித் திரிபவர்கள் - ஆற்றுக்காலாட்டியர் என்று அழைக்கப் பெறுவர். கட்டுமரம் - தோணி, வள்ளம், தெப்பம், மிதவை, படகு என்ற கைவசமுள்ள - கருவிகளைப் பயன்படுத்தி - தனக்கும்

பிறர்க்கும் பயன்படும் செயலைச் செய்பவர்களை வங்கப் பள்ளர் எனலாம். ஈரோடு கோபி தாலுக்கா கொடிவேரி நாட்டுப்பள்ளர் வங்க மள்ளர் என அழைக்கப்படுபவதாக அறிகிறோம்.

மள்ளர் என்று சொல்லப்படுபவர்கள் மீன் பிடிப்பதும் சங்கறுப்பதும் சுண்ணாம்பு (கிளிஞ்சல்) இடிப்பதும், விற்பதும் உப்பு அளப்பதும் ஆன பணிகளைச் செய்வது போன்ற தொழில்களைச் செய்பவர்களாகவும் காணப்படுகிறார்கள்.

ஈரோடு மாவட்டம் கோபி வட்டம் கொடிவேரி என்ற பகுதியில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய கல்வெட்டு ஒன்றினை புலவர் இராசு ஆய்வு செய்து பின்வருமாறு பதிவு செய்துள்ளார்கள். "கொடி வேரிப்பகுதி கொங்கு மண்டலத்தில் ஒடு வங்க நாட்டைச் சார்ந்தது. சில கல்வெட்டுகளில் அப்பகுதி வட பாரிசார நாடு என்று குறிக்கப்பட்டுள்ளது. கொடிவேரியின் பெயர் அனைத்துக் கல்வெட்டுக்களிலும் கொடுவேலி என்றே எழுதப்பட்டுள்ளது. கொடி வேலி என்பது மிகச் சிறந்த மூலிகைச் செடியின் பெயர். சித்த மூலம் என்பர். சங்க இலக்கியத்தில் ஒன்றான குறிஞ்சிப்பாட்டில் அது வெங்கொடிவேரி என்று புகழப்பட்டுள்ளது. சதுமுகை என இன்று வழங்கப்படும். ஊர் "சதுமுகம்" எனக் குறிக்கப்பட்டுள்ளதாக 26.11.1998 தினமணி நாளிதழ் கூறும். கொடிவேரி அணை பழனிப்பண்ணாடி, பண்ணாடியால் கட்டப்பட்டதாகக் கல்வெட்டுள்ளது (1842- 47)

## 244. வஞ்ச மள்ளர்

வஞ்ச மள்ளர் என்பவர் தனக்கோ தன்னைச் சார்ந்த மக்களுக்கோ ஏதேனும் ஒரு வகையில் யாராலேனும் தீங்கு, வல்லடி, வழக்குச் செய்திருந்தால் அந்நிகழ்வை மறவாது நெஞ்சத்தே பொத்தி வைத்திருந்து, காலம் வரும் போது அதனைத் திருப்பி அடித்து செயல் முடிப்பர். அதனால் தான் "பள்ளனையும் பாம்பையும் பதம் பார்த்தடி" இல்லாவிட்டால் அடித்த வரை வஞ்சம் தீர்க்காமல் விடமாட்டார்கள் என்பார்கள். அக்காரணம் பற்றி வஞ்சப்பள்ளர் என்று அழைக்கப்பட்டிருக்கலாம். ஆதிக்க சாதியரும், அடாவடிச் சாதியரும், அரசு அடக்குமுறையும் ஒன்றாக ஏவப்பட்டு வரும் இன்றும் இழப்பதற்கு ஒன்றுமில்லை. உயிரைக் கொடுத்து உயர்ந்து நிற்போம். என செம்மாந்து நிற்பதே பழிக்குப் பழி வாங்கி நிற்பதே சாட்சி!

## 245. வடசிறுவாசல் நாட்டு மள்ளர்

கானாடு என்றும் கோனாடு என்றும் அழைக்கப் பெறுகின்ற நாடு இன்றைய புதுக்கோட்டை மாவட்டமாகும். புதுக்கோட்டைத் தொண்டைமான் என்ற குறுநில மன்னர்களால் ஆட்சி செய்த நாடு. அந்நாட்டின் மள்ளர்களும் மறவர்களும் படையாட்சிகளும் முத்தரைய வீரர்களும் வாழ்ந்த 'கந்தக பூமியாகும்' அழகு பொருந்திய தேரோடும் வீதிகள், அவ்வீதிகளில் பல தரத்தினர் பாடிவீடாக, வீரர்கள் தங்கும் கோட்டங்கள் அமைக்கப் பெற்றிருந்தது. வடசிறுவாசல் நாடு என்ற பகுதியை சேர்ந்தவர்கள் 'வடசிறுவாசல் நாட்டு மள்ளர்'' எனப் பெயரிட்டு அழைக்கப்பட்டனர் போலும்.

## 246. வடம மள்ளர்

வடம் என்பது பல பொருள் கொண்டதொரு சொல்லாகும். ஆலமரம் ஒழுங்கு, கயிறு, வின்னாணி, பூவரும்பு, ஊர் என அகர முதலி தரும் பொருளாகும். குடும்பு வைத்து கூட்டம் போடுவதும், மன்றம் வைத்து நியாயம் தீர்ப்பதும், பல்லாவினனாக இருந்து, ஊர், நத்தம் அல்லது மந்தை வெளியிடங்களில் கன்று, காலிகளை, ஆவினங்களை வைத்து காபந்துசெய்வதும், ஊர்த்திருவிழாக்காலங்களில் முதலுரிமையும், முன்னுரிமையும், பெற்ற சமுதாயம் ஆதலால், தேரின் வடம் பிடித்து இழுப்பதாலும் வடம் பள்ளர் எனப் போற்றப்படுகிறார்கள். வடம் பிடிப்பது கோயில் மரியாதைக்குரிய உயர் தகுதியாகும்.(வடம்- வடக்கயிறு) உழுகலப்பை, நீர்ச்சால், எருமைத்தோலினால் முறுக்கிச்செய்ய உழும் தலவாடங்களை உருவாக்கும் தொழிலில் சிறந்தோர் என்றும் கூறுவார்கள்.

## 247. வடமலை மள்ளர்

நானில ஐந்திணைப் பகுப்பைக் கொண்டியங்கும் தமிழகத்தில் வடக்கே உள்ள மலையும் மலை சார்ந்த பகுதிகளில் வாழ்ந்தவர்களை, சுட்டிக் காட்ட, அடையாளம் தெரிய அவர் வாழ்விடத்தினால் அழைக்கப்பெற்ற பெயர் வடமலை மள்ளர் என்பதாகும். வடமலை போல் நெல்ராசி குவித்தவர் என்பதனாலும் இப்பெயர் பெற்றிருக்கலாம்.

## 248. வடுக மள்ளர்

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என வடவேங்கடம்

தென் குமரி ஆயிடை தமிழ் கூறும் நல்லுலகத்தில் நாலாத்திசைகளிலும் திசை விளங்க மள்ளர்கள் எனும் பள்ளர்கள் வாழ்ந்தவர்கள் ஆவார்கள். இம்முறையில் வடக்கே இருந்தவர்கள் வடுகப்பள்ளர் என்று அழைக்கப்பெற்றனர். போர்க்களத்தே பகை முடித்து நிரை கவர்ந்து வரும் மாமள்ளர்கள் வென்றெறி படையால் வடுப்பட்ட பள்ளர், வடுப்பள்ளர் என்று அழைக்க அது வடுக மள்ளர் எனவும் பெயர் பெற்றிருக்கலாம்.

## 249. வடுப்படா மள்ளர்

மானம் ஒன்றே நல்வாழ்வெனக் கொண்டு வாழ்ந்தவன் தமிழன். மயிர்நீப்பின் உயிர் வாழாக் கவிரிமான் போன்றவர். மானவுணர்வும் மறவுணர்வும் கொண்டவர்கள். ஈரமும் வீரமும் இதயத்தில் நிறைந்தவர்கள் தமிழக மக்களாவார்கள். அந்த வகையில் வடுப்படாத, குற்றங்குறை சொல்ல முடியாத, சொல் தாங்காத பள்ளின மக்களின் முன்னோடியாகக் கொண்ட ஒரு பிரிவின் மக்கள். தம்மை வடுப்படாத பள்ளன் என்று அழைக்கப்படுவாராயினார். போருக்குச் சென்று வந்த வீரன் ஒருவன் வடுப்படாது இறந்து போனால் அன்னோனைச் சுடுகாட்டில் காயப்படுத்திப் புதைப்பர். இப்பழக்கம் இன்றும் மள்ளரின மக்கள் பாலுண்டு. அவரே வடுப்படா மள்ளர்.

## 250. வடுப்படுத்திக் கொள்ளும் மள்ளர்

தேவேந்திர குல வேளாளர்கள் ஒரு நல்ல காரியத்திற்காகத் தீமையை எதிர்கொள்ளக் கூடியதிண்ணிய உள்ளங் கொண்டவர்கள். தான்பெற்ற குழந்தைக்காக தாய் மருந்துண்பதைப் போல் பொற்கைப் பாண்டியன் கதையம்சம் போல் ஒரு சம்பவம் வரலாறு கதை கருவை உள்ளடக்கி, தம்மைத் தாமே வடுப்படுத்திக் கொண்டவர்கள். தலைமுறை தலைமுறையாக பிறர்க்காகத் தம்மையே அழித்துக் கொண்டவர்கள். வடுப்படுத்திக் கொண்டவர்கள். இன்னோரை வடுப்படுத்திக் கொண்ட மள்ளர் என்று அழைக்காமல் வேறு யாரை அவ்வாறு அழைக்க முடியும்?

## 251. வணங்காமுடி மன்னர்

ஏர்த்தொழிலும் போர்த்தொழிலும் இரு கண்ணாகப் பாவித்து ஈரமும் வீரமும் இடையறாது கொண்டு வாழ்ந்த மள்ளர்கள் தாக்குதல் எதற்கும் அஞ்சாத தைரியச் சிங்கங்கள் புறநானூற்றின் புலிப் போத்துக்கள். அடி புதை அணியைக் கூட அணியக் குனியாதவர்கள். நிமிர்ந்த நெஞ்சினரை

அத்தகு குண இயல்புகளைக் கொண்டவர்களை வணங்கா முடி மள்ளர் என்ற குடி வழியினராவார் என்போம்.

## 252. வன்னி மள்ளர்

வன்னி என்றால் நெருப்பு, பகைவர்க்கு நெருப்புப் போன்றவர்கள். மாவீரர் வன்மை மிக்க வீரர். உறுதி கொண்ட நெஞ்சினர் வன்னியர். அந்த வன்மையும் வன்மமும் கொண்ட பள்ளர் வன்னிய மள்ளர் எனப் பெயர் கொண்ட குடியினராவார். ஒரு போரில் நேரடியாக ஈடுபடுவதும், போருக்குச் செல்ல அணியமாக நிற்பதும் இயல்பே. அந்த வகையில் சண்டையில் சமராடியவரை பள்ளி என்றும், சமராட வெளியே காத்து நிற்பவரைப் பள்ளர் என்றும் கூறும் வரலாற்றுக் குறிப்புகளை நெஞ்சில் நிறுத்துங்கள். வலிமை மிக்க வன்னிப்பள்ளர் தம் வலிமை தெரியும். வன்னியர் தம்முள் பல பிரிவுகள் உண்டு. அதனுள் வன்னி மள்ளர் என்ற ஒரு பிரிவும் உள்ளது. வன்னியர், பள்ளி, படையாட்சி, தேவேந்திரர் மள்ளர்களும் ஒரு குடியே என்ற கருத்தும் உண்டு. இன்னோர் இணைந்தால் தன்னோரில்லா தமிழகத்தின் தலைமை தானே வரும. பொய்யும் வழுவும் குறையும். புதிய தமிழகம் மலரும்.

## 253. வானங்கட்டி மள்ளர்

வானம் என்பதின் பொருள் ஆகாயம், மழை, மேகம், கோபுரத்திலோர் உறுப்பு எனக் கூறுவர். பாண்டிய நாடு பன்னீராயிரம் ஆண்டு வறுமைப்பட தேவலோகம் சென்று, தேவேந்திரனைக் கண்டு, மழை வரம் கேட்டு வருகையில் இந்திரனுக்கும் பாண்டியனுக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் 4-முகில்களை, மேகங்களை - வானத்தில் கட்டி இழுத்து வந்ததாக கதைகளும், புராணங்களும் உண்டு. அக்கதையின் தொடர்பால் வானங்கட்டி மள்ளர் என அழைக்கப்பட்டிருக்கலாம். தன்னை இந்திர குலத்தவன் இந்திரசாதி இந்திரர் வம்சா வழியினர் என்போர் என்பதால் அப்புராணக்கதையின் மேலேற்றி இப்பயர் பெற்றிருக்கக் கூடும். தானே பாண்டியனாகப் பாவித்தும் இப்பெயர் பெற்றிருக்கலாம்.

## 254. வாளுக்கஞ்சா மள்ளர்

வாளுக்கஞ்சா மள்ளர் என்ற சொற்றொடரே, இன்னோர் ஏருழவர் மட்டுமல்ல, வாளுழவர், போருழவருமாவார் என்பது தெளிவாகும். இவர் தம் முதுகுடிக் கிழமையை வெளிப்படுத்தவே கல் தோன்றி மண்

தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்தகுடி என ஐயனாரிதனாரால் பாராட்டப்பட்டவர். போரென்றால் பொருதடக்கை வாளெங்கே? மணிமார்பெங்கே? எனக் கேட்கும் நெஞ்சுரம் மிக்கவர். வாளுக்கஞ்சா, பள்ளரின் முன்னோராவார். அது பற்றியே அப்பெயராயிற்று. வண்கழல் அணிந்து மள்ளர் வாள்வலம் பிடித்து வந்தார் என்று கூறுவர். அக்குடிவழிமக்கள் இப்பெயர் பெற்றிருக்கக் கூடும். கமுதி பசும்பொன் என்ற மண்ணை ஒட்டிய முதுகுடி என்ற ஊரைச்சுற்றிவாழும் பள்ளர்களே வாளுக்கஞ்சாப் மள்ளராவார். பெரியதேவப்பள்ளர் என்று குறிப்பிடும் கல்வெட்டு அவ்வூரில் உண்டு. பசும்பொன் பாண்டியக்குடும்பனார் ஆண்ட பூமி ஆகும். 3/1972 முதுகுடி நடுகல்.

## 255. விசிறி மள்ளர்

பொருள் சரியாக விளங்கவில்லை. சிறிய ஆல வட்டம் உள்ள வாழ்க்கையர். உல்லாசப்பிரியர், மலந்து படுக்க மாந்தோப்பும், குனிந்து வெட்ட குட்டை மமிட்டி (மண்வெட்டி)யும் கடவுள் உனக்கு என்ன வேண்டும் கேள் என்று கேட்டபோது கேட்ட, பற்றற்ற உள்ளத்தவர் ஆவார்.

"வாள் சுழற்றி வீ சித்திரிந்தமாந்த யாற்றானை நோக்க ஆனைமுகம் கண்டெடுத்து வீ சிவெட்டி, வலத்து வீ சி மூன்று வெட்டி சுழற்றித் திரிந்து மாறிக் குதித்துச் சாடி, பரிசையில் தாழ்ந்தமர்ந்து ஏற்றுப் பொங்கி பிரித்து வீ சி மாறி பொங்கி நிலையமர்ந்து நிற்க, என அகத்தியர் களரி மொழி பாடலுக்கேற்ப, கையாயுதம் கொண்டு பகைவரை வி சிறிச் சிதைத்த மள்ளராவார்.

## 256. விதலை மள்ளர்

பொருள் சரிவரப்புரியவில்லை. வி தலை என்றால் நடுக்கம் என்று பொருள். பழிபாவங்களைக் கண்டால் நடுங்கும் நல்லிதயம் கொண்ட மள்ளர் ஈழத்தில் வாழ்கிறார்கள்.

## 257. விதான மள்ளர்

பொருள் புலப்படவில்லை. விதம் ஒழுங்கு கூட்டம் திருவிழாக்காலத்தே அரண்மனை நாளோலக்கத்தே பந்தர்க்கு முகப்புக்கு வி தாரணைக்கு அழகுபடுத்தும் ஒப்பனைக்காரர் (டெஃகரேசன் செய்பவர்) ஈழநாட்டில், யாழ்நாட்டில் வாழ்கிறார்கள்.

## 258. வீரநாட்டு மள்ளர்

திருநெல்வேலிச் சீமை அதனை ஒட்டிய பகுதிகள் வீரநாடு வீரம் விளையும் பூமி என்பர். அந்நாட்டில் பிறந்த, வாழும், வாழ்ந்த பள்ளர் வீரநாட்டு மள்ளராவார்.

## 259. வீரிய மள்ளர்

வீர மள்ளர் சொல்லைச் செயலாக்கும் வீரர். இன்னோர் செயலே வரலாறு ஆகும். வீரியம் பேசும் வித்தகர். போர்க்களத்தில் கோழையையும் வீரனாக்கும் சதுர்த்தர். விரிவுரை ஆற்றி வீரர்களின் உட்புகுந்த புதைந்த உணர்வுகளை வெளிக் கொணரும் சூராதி சூரர். வீரிய உரைக்காரர் எனவே, வீரிய மள்ளர் எனப் பாராட்டுப் பெற்ற மல்லராவார்.

## 260. வேட்ட மள்ளர்

வேட்டப் பள்ளர் என்றாலும் வேட்டைப் பள்ளர் என்றாலும் வேண்டிய பள்ளர் என்றாலும் பொருள் ஏறக்குறைய ஒன்று போல்வனவாம். வேட்டம் என்றால் விருப்பம் விழைவு என்பது பொருளாகும். ஒருபொருளை செயலை முடிக்கச் சூளுரை மேற்கொள்வதனால் அச்செயலை எண்ணியபடியே முடிக்க திண்ணியராக உரமேறிய உள்ளுணர்வு உடையவராக இருக்க வேண்டும். அந்த ஆசையும் வேட்கையும் செயலோடு ஒன்றி தாம் வேறு அது வேறு என்றில்லாமல் யோகமாக இரண்டறக் கலந்து நின்று விரும்பியபடியே முடியும். வேண்டியதை வேண்டியவாறு எய்துவர் வேட்டப் பள்ளர்.

## 261. வேட்டை மள்ளர்

## 262. வேட்டுவ மள்ளர்

குறிஞ்சி நில வேளாளர் என்று சொல்லக் கூடிய வேட்டுவ மக்கள், காடழித்து நாடாக்கும் கடுமையான உழைப்பிற்குச் சொந்தக்காரர்கள். காடு திருத்தி கழனியாக்குமுன், வரகும் தினையும், சாமையும், எள்ளும் கொள்ளும் விதைப்பவர்கள் வேடர், வேட்டுவர். காவலுவர், மாவலுவர், புலுலுவர் என்ற பூர்வீக மக்களாம். இவர்கள் கானநெல் என்ற நெல்லை புதியனவாகப் போட்டு நெல் உற்பத்தியை நேர்த்தியாகச் செய்யத் தொடங்குபவர். வேட்டுவப் பள்ளர் என்ற குடிவழியினராவார். வேட்டுவர் குடிவழியினர் 240 பேரை அடையாளங்காட்டி இக்கட்டுரை

ஆசிரியரால் 'கதிரவன்' என்ற திங்கள் இதழில் வெளிப்படுத்தப் பட்டுள்ளது. கான நெல்லை கண்டு விளைவித்தவரே வேட்டுவப் பள்ளராவார். பேரா. இராசசேகர - தங்கமணி வேட்டுவர் வரலாற்றை விரிவாக விரித்துரைப்பார்.

## 263. வெண்டி மள்ளர்

வெண்டி நாடு பாண்டிய நாட்டில் ஒன்று. இந்நாட்டைச் சேர்ந்தவர் வெண்டி மள்ளர் ஆவர். இதுமறுவி வெண்டி மள்ளர், வேண்டிய மள்ளர் என்றும் ஆகலாம். மள்ளர்களில் வெண்ணிக் குடும்பன், வெண்ணிக் காலாடி என்ற பெயரையுடையவர்களை இன்றும் தென் தமிழகத்தில் காணலாம். புலித்தேவனின் படைத் தளபதி மள்ளர் குலம் சார்ந்த வெண்ணிக் காலாடி என்பதை அறிகிறோம்.

## 264. வேதகார மள்ளர்

வேதம் ஒன்று, அதை ஆதியில் ரிக், யசூர், சாமம் , அதர்வணம் என நான்காய் ஸ்ரீவியாசர் வகுத்தார். விக்ஞானமயமுடையது ரிக்வேதம், வீரம் விளைவிப்பது யசூர்வேதம், அனலையும் அறிவையும் மூட்டுவது அதர்வன வேதம். சர்வேசனைத்துதிக்கும் மந்திரம் சாமவேதத்தில் காணலாம். என சாம வேதத்தை மொழி பெயர்த்த எம்.ஆர். சம்புநாதன் கூறுவார்.

பௌத்தம், சமணம், சாங்கியம், சைவம், வைணவம், ஐந்திரம், கிருத்துவம், முஸ்லீம் என மதங்கள் பலதரத்தன. வேதங்களின் தாக்கம் ஒவ்வொருவரும் கூறுவர். அனைவருக்கும் சமயநூல்களும் வேத நூல்களுமுண்டு. வேதம் நான்கு என சதுர்மறை எனப் பலபடக் கூறினாலும்,

கிருத்துவர்களை மற்ற மதத்தினர் வேதகாரர் என்பார்கள். கிருஸ்து மறை நூலைப் படியாதவர்களை அஞ்ஞானிகள் என்று கிருத்துவர்கள் கூறுவார்கள்.

வர்ணபேத முறையால் சாதி சமயம் சதுர்மறை சனாதானம், சாஸ்திரம் என்பன யாவும் இந்து மதத்தால் உருவாக்கி மனிதநேயம் அற்ற மதநல்லிணக்கம் அற்ற பகை உணர்வை வளர்க்க உதவிற்று. தொட்டால் திட்டு, பார்த்தால் பாவம் என்ற கோட்பாட்டை தகர்த்தது. அனைவரும் சமம். அனைவரும் ஒன்றாக இருக்கலாம், படிக்கலாம் என ஆதரவுக்கரம் நீட்டிய கிருத்துவத்தைக் கைப்பிடித்தனர். வேதம் படித்ததால் வேதகாரர் ஆனார்கள். அனைத்து சாதியாரும் ஏன் ஆதிக்கச் சாதியாரும் அடாவடிச் சாதியாரும் வேதகாரர் ஆனார்கள். "பைபிள்" என்ற வேத நூலை

வேதாங்கத்தைப் படித்தார்கள். "வெள்ளையும் சொல்லையுமாகத் திரிந்தார்கள்". பள்ளியில் சென்று படித்தார்கள். பல்வேறு பாதைகளில் வாகனங்களிலும் பயணித்தார்கள். பாதிரியார்களின் அன்பாலும் அரவணைப்பாலும் மனிதர்கள் ஆனார்கள். அத்தகைய திசையில் சென்ற மள்ளர்கள் - வேதகார மள்ளர் என்று சுட்டியழைக்கப்பட்டார்கள். கோவை புலியகுளம் தூய அந்தோணியார் திருக்கோயில் 1824 ஆம் ஆண்டு அவர்களால் அவர்களுக்காக உருவாக்கப்பட்டது. வேதகாரமள்ளர்கள் புலியகுளம், சுனியமுத்தூர், இருகூர், கிழக்குப்பள்ளபாளையம்இ சோமனூர் பள்ளபாளையத்தில் வாழ்ந்து வருகிறார்கள். பாதர் அமல்ராஜஸ்வாமி, பாதல் ஆரோக்கியசாமி, பிரதர் சேம்ஸ் ஆகியோர் புலியகுளம் மள்ளரென்னும் தேவேந்திர குலத்தார்களாகாவார்கள்.

## 265. வேதாந்த மள்ளர்

வேதாந்தம், சித்தாந்தம் என்பது இந்து மதத்தின் சாரமாய் அதன் தத்துவக் கோட்பாட்டைச் சொல்வது. தத்துவம் என்பது ஒரு கொள்கை அல்லது கோட்பாடு எனப் பொருள்படும். சுருக்கமாகச் சொல்லவேண்டுமாயின், எண்ணம், சொல், செயலால் தூயதாய் நெறிமுறையினின்று மாறாதிருப்பது வேதாந்தமாகலாம்.

தமிழர் சைவம், வைணவம், சமணம், பௌத்தம், சாங்கியம், லோகாயுதம், ஐந்திரம், விவிலியம், முகமதியம் என்பன போன்ற நெறிமுறைகளைப் பின்பற்றுவோராக இருக்கிறார்கள். கருத்து முதல் வாதத்தினின்று பொருள் முதல் வாதத்தை எதார்த்தமாக பின்பற்றும் மக்கள் சமுதாயத்தில், வேதாந்தமள்ளர் என்பார் ஒரு குடியினராக இருந்திருக்கக்கூடும். அதன் எச்சசொச்சமே "வேதாந்தப்பள்ளு" என்ற பிரபந்த நூலாகும்.

இந்நூல் மலையாள சமஸ்தானம், செங்கோட்டை, ஆவிடை அம்மாவால் இயற்றப்பட்டது.

இந்நூல் நுதலிய பொருளை வாழ்வாகக் கொண்டு வாழ்ந்தவரே வேதாந்த மள்ளர் எனலாம். தென் தமிழ்நாடு செங்கோட்டைப் பகுதியில் வாழ்ந்த, மூத்த குடியாம் மள்ளர் தம்முள் பல்வேறு குலங்களும் குடிகளும் இருந்ததிருக்கக்கூடும். பாண்டியர் என்ற பட்டந்தாங்கியோரும் அவ்விடத்தை வாழ்விடமாகக் கொண்ட மள்ளர்களாவார்கள்.

## 266. வேம்பகுலத்து மள்ளர்

வேம்பகுளம் என்பது ஓர் ஊர். அவ்வூரில் தேவேந்திர குல மக்களை அடையாளப்படுத்த அழைக்கப்பட்ட பெயர். வேம்பகுளத்துப்பள்ளர் என்பதாகும். வேம்பகுளம் போன்ற குளங்களை நீராணிக்கம், நீராதிக்கம் செய்யும் அதிகாரம் பெற்றவர்களாகவும் இருந்திருக்கலாம். அதுபற்றி அப்பெயர் பெற்றிருக்கக்கூடும்.

## 267. வேலூர் மள்ளர்

பல்வேறு மாவட்டங்களில் வேலூர் என்ற பெயரில் ஊர்கள் உண்டு. மருத நிலப்பள்ளின மக்களும் வாழ்கின்றார்கள். அவர்களை சரியாக அடையாளப்படுத்திய பெயர் வேலூர்ப் பள்ளர் என்பதாகும். மருத நில தலைநகருக்கு சங்ககாலத்தில் வேலூர் என்ற பெயரும் உண்டு. சான்று சிறுபாணாற்றுப்படையில் காணலாம்.

## 268. வைணவ பள்ளர்

வைணவம் என்பதும் திருமாலியம் என்பதும் வேறு வேறல்ல. முல்லை நிலத்தின் தெய்வம் - திருமாலியமாகும். சைவசமயம் என்பது சிவனியமாகும். இவ்விரண்டும் இந்து மதத்தின் துணை மதங்களாகும். திருநாமப்பள்ளர் என்ற குடிவழியினரும் வைணவப்பள்ளரும் ஒரே செடியில் பூத்த இரு மலர்களாவர். இந்துப் பள்ளரும் கிருஷ்துவப்பள்ளரும் ஒரே சாதியினைச் சார்ந்தவராயினும் மத வேறுபாடு கொண்டவர்கள். இவ்விரு பிரிவினரும் அண்மைக்காலம் வரை கொள்வினை கொடுப்பினை இல்லை. இத்துறைகளில் தனிரிட்டு வரக் காண்கின்றோம். வைணவப்பள்ளரின் சமயக்குறி திருநாமம் ஆகும். இவர்தம் குடி வழிவந்தவர்கள் தாசர் தாசய்யா, சமேதாரர் என்ற வைணவ கோத்திர வழிமுறையினராவர். இது பற்றியே தொண்டன், தொண்டைமான், தொழும்பன், தொண்டரடிப் பொடி, என வைணவ சம்பிரதாயத்தார் கூறுவர். இவர் தம் சமயப்பற்றை ஆழ்ந்த புலமையை முக்கூடற்பள்ளில் கற்றறிந்த கன்னியராம் மூத்தபள்ளி இளையபள்ளியில் ஏசல் என்ற இனிய சொல் வீச்சால் அறியலாம். இவரே வைணவ மள்ளராவார்.

முடிவுரை

கி.பி. 15-16 ஆம் நூற்றாண்டில் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. மழைமாரி பெய்யவில்லை. பகைமேகங்கள் சூழ்ந்தன. படை எடுப்புக்கள் நடந்தன. விஜயநகர ஆட்சியில்

அரசமைப்பிலும் நிர்வாக அமைப்பிலும் நிறைய மாற்றங்கள் ஏற்பட, ராணுவ அடக்குமுறை அரசமைப்பு சர்வாதிகாரம், வேளாளக் கட்டுமானங்கள் உருவாக்கப்பட்டது. கோயில் கட்டினால் - திருவிழாக்கள் நடத்தினால் பசியும் பஞ்சமும் நீங்கும் வசியும் வளனும் சேரும் என கோயில்களைக் கட்டினர். வரிமேல் வரிபோட்டு மக்களை வாட்டினர்.

குளம் தோண்டவில்லை, தூரெடுக்கவில்லை, நீர்ப்பாசானத்தைப் பெருக்கவில்லை. அரசு அதிகாரம் பாளையப்பட்டுகளின் கைகளில், விசாரணை செய்வோரும் வேலை வாங்குவோரும் வரிவசூல் செய்வோரும் அவர்களே. ஊர்க்காவல் நாடுகாவல் கோயில்காவல் பயிர்க் காவல் பாடிகாவல் செய்வோரால் பாதுகாக்கப்பட வேண்டிய கண்டுமுதல்கள் ஆடு, மாடு கன்று காலிகள் பறிபோயின. தடியெடுத்தவன் தண்டக்காரன் ஆனான். குறுநில மன்னர்களும் ஜமீன்தாரர்களும் மனம்போனபோக்கில் நடந்தனர். குடி கூத்து, மது, மாமிசம் எனக் கொட்டமடித்தனர். ஆறழித்தனர். வழிப்பறிக்கொள்ளைகள் பகலிலும் நடந்தது.

நாட்டு மக்களின் வாழ்க்கை சிறப்புற நடப்பதாக புலவர்களையும் கவிஞர்களையும் அழைத்து பாட்டுங்கூத்தும் எழுதச் செய்தனர். புகழ் போதை தலைக்கேறிய நிலையில் 96 வகைப் பிரபந்தங்கள் உருவாக்கப்பட்டதில் பள்ளுப்பாட்டு என்ற வகை நூலும் ஒன்று. 60, 70 பள்ளு நூல்கள் உருவாக்கப்பட்டு மள்ளர்களை உழவர்களை இழிவுபடுத்த, பண்ணை அடிமையாக்க, பெருமைமிக்க வரலாற்றை அழிக்க அவர்கள் பண்பாட்டைச் சிதைக்க, சீரழிக்கும் வகையில் பாத்திரப் படைப்புகளை உருவாக்கி, ஊரூராக பள்ளுக் கூத்து நடத்தினர்.

நிலமோ, வீடோ, ஆடுமாடுகளோ, சொத்துக்களோ வைத்துக்கொள்ள அனுமதி மறுக்கப்பட்டது. கொத்தடிமையாகச் சித்தரித்தனர். ஒழுங்காக வேலைக்கு வரவில்லை எனக் குற்றம் சாட்டப்பட்டு தொழுவில் அடைக்கப்பட்டு, கசையடி, தடியடி எனத் தண்டனை கொடுப்பதும், மனைவி மக்களை - ஏன் அந்தச் சமுதாயத்தையே கொச்சைப் படுத்தினர்.

அரசியல் சமூகப் பொருளாதார கல்வி கலாச்சாரத்தில் விழித்தெழ, ஆண்ட பரம்பரையே விழி! எழுது!! துயில் நீங்கு.

"அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத் தாகும் மள்ளர் எனும் பெயர்"

"செருமலை வீரரும் திண்ணியோரும்
மருதநில மக்களும் மள்ளர் என்ப"

"ஏராளர் நாட்டும் வாளுழவர் மள்ளர்
செயமிகு மறவர் தானைத் தலைவர்"

எனத் திவாகரம், பிங்கல, சூடாமணி நிகண்டுகளால் ஏற்றிப்போற்றப்பட்ட, மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர் குலப்பிரிவுகளும் கூட்டமுறைகளையும் தெரிந்து கொள்ளுங்கள். நீண்ட தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளுங்கள். பழனிப்பட்டயம் கூறும் "குடும்பர்கள், பண்ணாடிகள், காலாடிகள், மூப்பன், பலகானென்கிற ஐந்து வகுப்பும் பன்னீராயிரம் கோத்திரமுடைத்தாராகிய தேவேந்திர வம்சத்தாரின்" பசுங்குடி பன்னீராயிரம் கோத்திரங்களையும் குலங்களையும் தேடிப்பிடிப்போம்.



## புலவர் கி.ஆ. குப்புராசுவின் வாழ்வியலில் சில...

- கோவை புலியகுளம் சமயதார் தா.கி. ஆறுமுகப் பண்ணாடி - லட்சுமி மன்னாத்தியார் தம்பதியருக்கு 25.5.1933-ல் மகனாகப் பிறந்தார்.

- பேரூர்த் தமிழ்க் கல்லூரியில் - சென்னை பயிற்சிக் கல்லூரியில் பயின்றார்.

- தாம் கற்ற வெ. வெரிவாடசெட்டியார் நகராட்சி நடுநிலைப் பள்ளியிலும், இராமநாதபுரம் மாநகராட்சி மேனிலைப் பள்ளியிலும் 34 ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றார்.

- குறள்நெறி மன்றம் - மருதநில மாணவர் மன்றம் என உருவாக்கி, உருபயன் கண்டார்.

- பேரூர்ப் புலவர் பேரவைச் செயலராகவும், நூல் வெளியீட்டுத் துறை பதிப்பாசிரியராகவும் பணி செய்கிறார்.

- தமிழகத்தமிழாசிரியர் கழக - கோவை மாவட்ட செயலர் தலைவராக 17 ஆண்டுகள் பணியாற்றி நீடுபுகழ் பெற்றார்.

- அனைத்தாசிரியர் பாதுகாப்புக் கழகம் - அனைத்தாசிரியர் முன்னணி என்ற ஆசிரியர் அலுவலர் அமைப்பை உருவாக்கி பாதிக்கப்பட்டவர்களுக்கு காப்பாகவும், ஒன்றுபட வித்தாகவும் விளங்கினார். உச்சநீதி மன்ற நீதியரசர் கிருஷ்ணய்யர், இவர்தம் தலைமையில் ஆசிரியர் மாணவர் அலுவலர் பிரச்சனைகளுக்கு வடிகால் அமைத்துக் கொடுத்தவர்.

- தமிழக அரசின் கல்வி அமைச்சரால் தெரிவு செய்து, தமிழக ஆளுநரால் பரிந்துரை செய்யப்பட்டு, பாரதியார் பல்கலைக்கழக செனட் உறுப்பினரானார்.

- தந்தை பெரியாருக்கு எடைக்கெடை நெல்லளந்து, தம் குடும்பத்தார் பூர்வீகக் காட்டிற்கு பெரியார் நகர் எனப் பேர் சூட்டி விரிவாக்கினார்.

- உலக சமாதான அமைதிக் குழுவில் பேராளராக இடம்பெற்று டெல்லிவரை சென்று பணியாற்றினார்.

• தமிழ்நாடு இலக்கியப் பேரவையை வருவாக்கிய 11 பேர்களில் இவரும் ஒருவர்

• இன்டர்நேஷனல் கல்சுரல் அக்காடெமியினரால் வித்தியாரத்தினம் என்ற பட்டமும், அவனாசிலிங்கம் நிகர் நிலைப்பல்கலைக்கழக அறக்கட்டளை சார்பாக, கிராமியப் பல்கலைக் கழகத் துணைவேந்தரால் தமிழண்ணல் என்ற பட்டமும், பேரூராதீனகர்த்தரால் தமிழ்நெறிக்காவலர் என்ற பட்டமும் பெற்றவர்.

• மரபு வழியில் புலியகுளம் தேவேந்திர குல வேளாளர் சமூகப் பஞ்சாயத்து சபையின் தலைவராகவும், ஊர்த்தலைவராகவும் அணி செய்கிறார்.

• சாதியற்ற சமுதாயத்தை, பொதுமைக் குமுகாயத்தை அடையத்துடிக்கும் சிந்தனையாளர்.

• இவர்தம் வாழ்க்கைத் துணைவியார் கி. சரோசினி மன்னாத்தியார் ஆவார். ஆ.கு. ஆறுமுகச் செவ்வேள், ஆ.கு. இலக்குமிவேண்மாள், ஆ.கு. இசைஞானியார் என்ற அறிவறிந்த, கற்றுவல்ல மக்களின் தந்தையாவார்.